# பூ பூக்கும் ஓசை! 24





# ஷாப்பிங் ஸ்பெஷல் பக்கங்கள்



# 147 ரூ.5,000 பரிசு அறிவுப் போட்டி

# நாஞ்சில் நாட்டுச் சமையல்! 77

















அட்டையில் : சுஹாசினி
வண்ணப்படம் : சங்கர் சத்யமூர்த்தி








களிர் மாத இதழ்!
என்றும் உங்களுடன்
மங்கையர் மலர்
மலர் : 28 இதழ் : 6 ஜூலை 2008

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

## ஆகஸ்ட், செப்டெம்பர், அக்டோப

## பண்டிகை ஸ்பெஷல்களாக மலர்கின்றன

ஆடிப் பெருக்கு, வரலட்சுமி நோன்பு, ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி, விநாயகர் சதுர்த்தி, ஓணம், நவராத்திரி, தீபாவளி... இனி வரிசையாக பண்டிகைக் காலம் தான்... உங்கள் வீட்டில் கொண்டாடிய பூஜைகளை, நமது மங்கையர் மலர் மூலமாக வெகு விமரிசையான விஷயமாக ஆக்கப் போவதும் நீங்களேதான். எங்களுடன் என்னென்ன பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகிறீர்களோ... அதையெல்லாம் எழுதிக் குவியுங்க. பூஜையில் எடுக்கப்பட்ட சிறப்புப் புகைப் படங்க இருந்தால் அனுப்புங்க...





## எல்லோரும் கொண்டாடி மகிழ்வோம்!

ஆகஸ்ட் மாத குட்டி புக்

## கிருஷ்ணா 64!



நாகை முகுந்தன் எழுதும்

## கோகுலாஷ்டமி ஸ்பெஷல்!

**அறிவிப்பு!**

அன்புள்ள வாசகர்களுக்கு,
அச்சுத்தாளின் கடுமையான விலை
உயர்வு காரணமாகவும் இதர
விலைவாசி உயர்வு காரணமாகவும் உங்க
அபிமான மங்கையர் மலரின் விலை,
ஆகஸ்ட் '08 இதழிலிருந்து ரூ.20/- ஆ
உயர்த்தப்படுகிறது. தரமான
விஷயங்களுக்கு என்றைக்குமே
பேராதரவு தரும் வாசகர்கள், இச்சிறிய
விலையேற்றத்தைப் பொருட்படுத்தாமல்
மனமுவந்து ஒத்துழைப்பீர்கள் என்று
நம்புகிறோம். ஆதரவை
என்றென்றும் நாடும்...

சமீபத்தில் இரண்டு பிரபலங்களின் பேட்டிகளைப் படித்தேன்.

''என் மனைவி நிறைமாத கர்ப்பிணியாக இருந்தாள். நான் வேலை, வேலை என்று படுபிஸியாக இருந்தேன். ஒரு நாள், நான் வெளியே கிளம்பும்போது என் மனைவி, ''எனக்கு உடம்பு சரியில்லை!'' என்றாள் தயங்கியவாறே! ''என்ன செய்யணும்?'' என்று கேட்டேன். ''மருத்துவமனைக்குப் போகணும்!'' என்றாள். நான் ஒரு ரிக்ஷாவில் ஏற்றிக் கொண்டு, மருத்துவமனையில் இறக்கிவிட்டுப் போய் விட்டேன். சற்று நேரத்துக்கெல்லாம் எனக்கு மகன் பிறந்த செய்தி வந்தது. நான் அப்படி நடந்து கொண்டதை நினைத்தால் இன்றைக்கு எனக்கு வெட்கமாக இருக்கிறது. பிரசவக் காலத்தில் ஒரு பெண்ணுக்கு, கணவரின் ஆதரவும் அன்பும் எவ்வளவு தேவைப்பட்டிருக்கும்? எனக்கு அது ஏனோ தோன்றவில்லை!''

- இளையராஜா

''இவ்வளவு நாள் நான் செய்த தவறுக்கு மன்னிப்புக் கேட்கிறேன். இனி உங்களுடன் நிறைய நேரம் செலவிடப் போகிறேன். 'பாண்டியன்' படம் முடிந்ததும், நாம் அனைவரும் வெளிநாட்டுக்கு டூர் போகலாம்'' என்று சொன்னதும், குடும்பத்தினர் அனைவருக்கும் மகிழ்ச்சி. ஆனால், அந்தப் படம் முடிவடைவதற்குள் என் மனைவி மாரடைப்பில் திடீரென்று இறந்து விட்டார். இது என் வாழ்க்கையில் ஏற்பட்ட மிகப் பெரிய சோகம். என் மனைவி இருந்தபோது, ஒரு கணவனாக உதவ முடியவில்லை. இப்போது நான் ஓய்வாக இருக்கிறேன். என் மனைவியின் துணைக்காக ஏங்குகிறேன். குடும்பப் பொறுப்பை எனக்கு அளிக்காமல் முழுமையாகத் தானே சுமந்த என் மனைவியின் அருமையை இப்போது இன்னும் அதிகமாக உணர்கிறேன்.

- எஸ்.பி.முத்துராமன்

ஒரு மனைவியின் ஆதங்கத்தைக் கேளுங்கள்.

''எங்க காலத்தில் எல்லாம் ஏது காதலும் டேட்டிங்கும்? கணவர்தான் தலைநிமிர்ந்து பார்த்த ஒரே ஆண்! கல்யாணமான புதிதில், அவருடன் நிறைய நேரம் செலவழிக்க வேண்டும் என்று ஆசையாக இருக்கும்! அவரோ, காலையில் எட்டு மணிக்குக் கிளம்பினால், தொழிற்சாலை வேலை, மாலை நேரப் படிப்பு, சீட்டுக் கச்சேரி, நண்பர்களுடன் சினிமா, கல்யாணம் என நாள் முழுக்க எப்படியோ பிஸியாக இருந்துவிட்டு, இரவு பதினொரு மணிக்கு வந்து சேருவார். அப்போதெல்லாம்






மங்கையர் மலர்

நாத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
ஆசிரியர் பொறுப்பேற்று
அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32.

பொறுப்பாசிரியர் :
அனுராதா சேகர்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்,
எம். மோகன், ச. கார்த்திகேயன்

தொலைபேசி : 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
mangayarmalar@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
இன்டர்நெட் முகவரி :
www.mangayarmalaronline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.225/-
ஆறு மாதம் : ரூ.115/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ. 1,600/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.




டி.வி. கூட கிடையாதே! நான் சிறு குழந்தைகளுட ஒண்டியாகச் சிரமப்படுவேன். ''நீ சாப்பிட்டாயா?'' என் கூட அவர் கேட்டதில்லை! தப்பித் தவறி வெளியே போனால் கூட, வேண்டாவெறுப்பாகத்தான் வருவா சினிமா போனால் அலுவலக நினைப்பாகவே இருப்பா கல்யாணத்துக்குப் போனாலும் சீட்டுக் கச்சேரியி இறங்கி விடுவார்.

இன்றைக்கு அவர் ஓய்வுபெற்று விட்டு, இருபத் நான்கு மணி நேரமும் வீட்டோடு இருக்கிறா சீட்டுக்கட்டை தொடுவது கூட இல்லை!

''வீட்டிலேயே அடைந்து கிடக்கிறாயே! வாயேன் கோயில், ஷாப்பிங் போய்விட்டு வரலாம்!'' என் அழைக்கிறார்.

எனக்கு முட்டிவலி; இடுப்பு வலி! அவருக்கு இருத நோய்! இருவருக்குமே பி.பி., சுகர், கொலஸ்ட்ரா உள்ளன. வீட்டிலேயே நிம்மதியாகக் கிடக்கல போலத்தான் ஊரின் சூழ்நிலையும் இருக்கிறது.

'நாம் இருவரும் சுற்றித் திரிய மனமும் உடலு ஒத்துழைத்த காலத்தில் உங்கள் இளமையை எங்கே தொலைத்து விட்டீர்கள். இனி அது தேடினாலு கிடைக்காது. கிடைத்தாலும் பயனில்லை!' என்று எ கனவுகளைப் புதைத்த இடத்தின் மீது உட்கார்ந் மனசுக்குள்ளே அழுகிறேன்.''

நட்சத்திர இயக்குநரான எஸ்.பி. முத்துராமனு மேஸ்ட்ரோ இளையராஜாவும், நிறைய சாதித்தவர்க பேரும் புகழும் சம்பாதித்தவர்கள். அவர்களே ... செய்கிறார்கள் என்றால்.. அவர்களுடைய ஆதங்க நமக்கு ஒரு பாடமாகட்டும்.

மனித வாழ்க்கையில், எத்தனைபோலவிதமான உறவ சித்திரங்களில் நாம் வாழ வேண்டியுள்ளது. ஒவ்வொ பாத்திரத்துக்கும் ஒவ்வொருவிதமான காலகட்டம்! ஆ பெண் இருவருக்கும், அந்தந்தப் பருவத்துக்கே உரி உணர்வுகள், தேவைகள், ஆசைகள், கனவுக கடமைகள் இருக்கத்தான் செய்கின்றன. அவையெல்ல அந்தந்த காலத்தில் தந்தும், பெற்றும் சந்தோஷம அனுபவிக்காமல், கோட்டை விட்டு விட்டு, பிறகு ஏங் தவிப்பதில் அர்த்தமென்ன?

அது மழைமுகில் ஆகட்டும், மனசுக்குள் முகிழ் காதல் இழையாகட்டும், உரிய காலத்தில் கிடைக்க எதனாலும் பயனில்லை!

அனுஷா நடராஜன்

# பாபா

இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு, ஸ்ரீசத்யசாயிபாபாவின் புகைப்படத்தைக் காட்டி, ''இவர் யார் தெரியுமா?'' என்று யாராவது என்னைக் கேட்டிருந்தால், ''தெரியுமே! கர்லிஹேர்ட், மேஜிக் சாமியார்!'' என்று 'பட்' என்று பதில் சொல்லியிருப்பேன். அந்த அளவுக்குத்தான் நான் பாபாவைத் தெரிந்து கொண்டிருந்தேன்.

1990களில் நான், 'சாவி' பத்திரிகையில் பணிபுரிந்தபோது, ஆசிரியர் சாவி ஸார் வீட்டில்தான் ஸ்ரீசத்யசாயிபாபாவின் பெரிய படங்களைப் பார்த்தேன். பூஜை அறையில் பாபாவின் படத்துக்கு மாலை போட்டு பக்தி கமழ வைத்திருப்பார்கள். வியாழக்கிழமைகளில், சாயி பஜன்ஸ் நடக்கும். சாவியின் மனைவி திருமதி. ஜானகி, ''பஜனைக்கு வாயேம்மா!'' என்று அழைப்பார்.

''சரி மாமி!'' என்று பவ்யமாகச் சொல்லிவிட்டு, பெரும்பாலும் எஸ்கேப் ஆகிவிடுவேன். சில சமயம், போனால் போகிறதென்று, மாடி ஏறிப் போய், சாவி ஸார் கண்ணில்படும்படி இரண்டு நிமிடம் நின்றுவிட்டு, ரவாகேசரியோ, சுண்டலோ (போனதே அதற்குத்தானே?) வாங்கிக் கொண்டு வந்து விடுவேன்.

ஒருமுறை, ''உனக்கு பாபா மேல நம்பிக்கை இருக்கோ?'' என்று சாவி ஸார் என்னைக் கேட்டார்.

சின்னச் சிரிப்புடன் எதுவும் சொல்லாமல் நின்றிருந்தேன்.

''ஒருமுறை பிரசாந்திக்குப் போயிட்டு வா... மேஜர் ஜெனரல் மகாதேவன்கிட்ட சொன்னா நன்னா ஏற்பாடு பண்ணுவார்'' என்றார்.

நான் அதற்கும் தலையாட்டிவிட்டு நிற்பதைப் பார்த்தவர், ''இது தேறாது!'' என்று நினைத்தாரோ என்னவோ வேறு பேச்சுக்கு மாறிவிட்டார்.

இன்னொருமுறை, ''சத்ய சாயி பாபா, கலியுக அவதாரம் தெரியுமோ? நானும் உன்னை மாதிரிதான் நம்பிக்கை இல்லாமல் இருந்தேன். ஒரு முறை, அவர் மதராஸுக்கு வந்திருந்தார். ஆபட்ஸ்பரியில கூட்டமான கூட்டம். அத்தனைக் கூட்டத்தையும் தாண்டி, நேரா 'விடுவிடு'னு நடந்து, என் கிட்ட வந்து, அவரோட காலால என்னைச் செல்லமா ஒரு மிதி மிதிச்சார்...'' என்று சின்னக் குழந்தைக்குக் கதை சொல்வது போல, ஆக்ஷன் எல்லாம் செய்து காட்டினார்.

அவர் சிலிர்ப்பும் பரவசமுமாய் ரொம்ப நேரம் விவரித்துக் கொண்டிருந்தார்.

ஆனால் நான் அவர் சொன்ன எதையும் ஆர்வத்துடன் கேட்கவேயில்லை. என் மனம் அதில் கொஞ்சமாவது ஈடுபட்டால் தானே?

அதற்குப் பின் ஒரு பத்திரிகை நிருபராக, பற்பல வி.ஐ.பிகளைச் சந்திக்க வேண்டியிருந்தது. பிரபல தொழிலதிபர்கள், சினிமா நட்சத்திரங்கள், ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். அதிகாரிகள், நீதிபதிகள், பெரிய மருத்துவர்கள், அரசு அதிகாரிகள், அரசியல்வாதிகள் என நான் சந்தித்த பலரது வீடுகளில் பாபாவின் படங்கள் பிரதானமாகக் காட்சியளித்தன.

பேட்டி முடிந்ததும், ''நீங்க பாபா பக்தரா?'' என்று சும்மா ஒரு கேள்வி கேட்டு வைப்பேன்.

''ஆமா... நான் தீவிர சாயி பக்தர்.. எங்களுக்கு எல்லாமே அவர்தான்!'' என்று சொல்லி, பல அற்புத நிகழ்ச்சிகளை விவரிப்பார்கள்.

என்னால் நம்பவும் முடியாது. நம்பாமல் இருக்கவும் முடியாது. ஏனென்றால், சத்ய சாயிபாபாவைப் பற்றி மிகையாக விவரித்து என்னிடம் சொல்வதில், அந்த வி.ஐ.பிக்கு என்ன உள்நோக்கம் இருக்க முடியும்?

சில பிரமுகர்கள் பாபா ஃபோட்

டோவில் விபூதி வந்தது, தேன் வந்தது என்பார்கள். ஒருசிலர் பாபா காற்றில் வரவழைத்துக் கொடுத்த மோதிரம், வாட்ச் என்று சாட்சியங்கள் காட்டுவார்கள்.

''ஏன் ஸார்... ஏதோ பூ வரவழைச்சார். ஆப்பிள் வரவழைச்சார் என்றால் ஓரளவு நம்பலாம். மரத்துல இருந்து பறிச்சுக் கொடுத்தார்னு நினைச்சுக்கலாம். ஆனால் மோதிரம், வாட்ச் என்றெல்லாம் வரவழைத்தால், எச்.எம்.டி வாட்ச் கடையிலோ, ஜி.ஆர்.டியிலோ ஒரு நகையோ, வாட்சோ காணாமல் போயிருச்சு என்றுதானே அர்த்தம்?'' என்று மடக்குவேன்.

''சில விஷயங்களை ரொம்ப ஆராயக் கூடாது. அதற்கான அறிவோ, பக்குவமோ நமக்கு இல்லை!'' என்பார் மெத்த படித்த அந்த ஐ.ஏ.எஸ். அதிகாரி!

நானும், ''வந்த வேலையை கவனிப் போம். எதுக்கு வம்பு?'' என்று பேச்சை திசைதிருப்பி விடுவேன்.

ஒருமுறை எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது, அவரும் புட்டபர்த்தி சாயி பாபாவின் தீவிர பக்தை என்று அறிந்தேன்.

என் வாழ்க்கையிலேயே நான் மிகவும் மதித்துப் போற்றும் ஒரே பெண்மணியான அவரே ''நான் பாபாவின் பக்தை!'' என்று மிகவும் பணிவுடன் சொன்னபோது, ''அடடா...!'' என்று இளகினேன்.

சத்யசாயிபாபா படத்துக்கு, ஆரத்தி காட்டாமல், எம்.எஸ். அம்மா உணவருந்தியதில்லை என அவரது உதவியாளர் விசாலாக்ஷி அம்மாளிடம் அறிந்தபோது, ''என்ன சுவாமி... உன்கிட்ட என்னவோ இருக்கு போலிருக்கே!'' என்று தோன்றியது.

'கல்கி' பத்திரிகையில் சேர நான் விண்ணப்பித்ததும், ஆசிரியர் சீதா ரவி என்னிடம்,''ஏதாவது ஒரு அஸைன்மென்ட் பண்ணிண்டு வாங்க!'' என்றார். பின் அவராகவே யோசித்து, ''நவம்பர் 23 புட்டபர்த்தி பாபாவோட 75வது பிறந்த நாள்! அவர் பற்றி ஏதாவது ஆர்டிகிள் பண்ணுங்க!'' என்றார்.



ஸ்ரீ சத்தியசாயி நாதனைப் பற்றி நிறையப் பேர் எழுதி விட்டார்கள். அவருடைய அற்புதங்களும் அமுதமொழிகளும் கேட்கக் கேட்கத் திகட்டாதவை.

மறைந்த நடிகர் ரகுவரனுக்கு ஃபோன் செய்தேன். எப்போதும் அவரது மேனேஜர் தான் ஃபோனை எடுப்பார். (அப்பல்லாம் 'செல்' கிடையாதே!) அன்றைக்கு ரகுவரனே எடுத்துப் பேசினார். நான்கு மொழிகளில் ரகுவரன் பிஸியாக இருந்த நேரமது... அவரைப் பிடிப்பது இலேசுப்பட்ட காரியமா? ''பாபா பற்றிய கட்டுரை'' என்றதும், உடனே வரச் சொல்லிவிட்டார்.

மருத்துவமனையில், உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த தான், பாபாவின் உருவத்தை தரிசித்ததையும் ஐ.சி.யு.வில் படுத்திருந்தவர், மறுநாளே புட்டபர்த்தி வாசலில் போய் நின்றதையும் மிக உணர்ச்சிகரமாக விவரித்தார்.

கல்கி இதழில் 'மறு ஜென்மம் எடுத்தேன்!' என்ற தலைப்பில் அக் கட்டுரை இடம்பெற்றது. அப்புறம் நான் 'கல்கி' பத்திரிகையில் வேலைக்குச் சேர்ந்த நாள் முதல் இன்று வரை, சத்யசாயி பாபா பற்றிய பெரும்பான்மையான மேட்டர்களை செய்யும் பணி என்னிடம் வந்துள்ளது. என்னையுமறியாமல் பாபாவைப் பற்றி நிறையத் தெரிந்து கொள்ள கிடைத்த சந்தர்ப்பங்கள் அவை!

ஆறு வருடங்களுக்கு முன், என் கணவரின் தொழிற்சாலையில் மேலதிகாரியாகப் பணியாற்றும் படுதீவிர சாயிபக்தர்

*'பகவான் பாபா' தொடரில் நாம் படித்துத் தெரிந்து கொள்ளப் போவதும் ஒரு சிறு துளியே! இல்லை.. இல்லை.. சிறு துளியின் சிதறல் முனை அளவே!*

*சத்தியசாயி பக்தர்கள் தங்களுக்கு ஏற்பட்ட தெய்வீக அனுபவங்களை, சுருக்கமாக எழுதி அனுப்பலாம். சுவையானவை பிரசுரிக்கப்படும். அரிய புகைப் படங்கள் ஏதும் இருப்பின், இணைத்து அனுப்பவும். அவை பத்திரமாகத் திருப்பி அனுப்பி வைக்கப்படும். முழு முகவரி, தொலைபேசி எண் குறிப்பிடாத கட்டுரை கள் ஏற்கப்படமாட்டா!*

*(ஆசிரியர்)*

ஒருவர், தற்செயலாக ''குடும்பத்துடன் புட்டபர்த்தி போகிறோம். நீங்களும் வாங் களேன்!'' என்று அழைத்தார்.

'பாபா மீது நம்பிக்கை வைத்துப் போகிறோமோ இல்லையோ, சும்மா ஒரு 'டூர்' மாதிரியாவது போய்ப் பார்க்கலாமே!' என்று தோன்றியது.

நான், என் கணவர், என் மகன் மூவரும் புட்டபர்த்திக்குப் போனோம். பகவானின் தரிசனமும் சிறப்புரையும் காலை ஏழு மணிக்குத்தான். ஆனால் விடியற்காலை நான்கு மணிக்கே ஹாலில் கூட்டம் நிரம்பி வழிந்தது. வெளிநாட்டினர் பலரும் ரொம்ப சின்சியராக ஜபம் செய்து கொண்டிருந்த னர்.

பஜன்ஸ் முடிந்தது... ஸ்ரீ பாபா வந்தார். நல்ல விஷயங்களைப் பேசினார். அவர் தென்பட்ட பக்கமெல்லாம், சூரியகாந்தி பூ போல, கூடியிருந்த மக்களின் தலைகளும் திரும்பியதைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. ஆறடி உயரத்தில் வாட்டசாட்ட மாக இருந்த பல வி.ஐ.பிக்கள், முட்டிக்கால் போட்டவாறே அவருடன் மிக பணிவாக, வேகமாக நகர்ந்தது சிரிப்பை மூட்டியது.

பழக்கம் இல்லாததால், முதுகை போர்த்தியிருந்த என் முந்தானை அடிக்கடி நழுவியது. ''சாய்ராம்... கவர் யுவர் ஷோல்டர்ஸ்!'' என்று வெளிநாட்டுப் பெண் மணி ஒருவர் புடவையைச் சரிசெய்து விட்டார்.

ஒரு ரூபாய், ஐந்து ரூபாய் காணிக்கை போட எவர்சில்வர் உண்டியல் எல்லாம் கிடை யாது. எல்லாம் டி.டிகளும், டாலர்களுமாய் கவுண்டரில் குவிந்தன.

காஃபிக்கும், சாப்பாட் டுக்கும் மலிவு விலை டோக்கன்கள் கொடுத்தார் கள். ப்ளூஜாகர் வைரத் தோடு மாமிகளும், தகதகக் கும் நல்லி புடைவை அணிந்த ஆண்டீகளும் டைனிங்ஹாலில் பக்தர்கள் சாப்பிட்ட எச்சில் தட்டுக்களை சிரத்தையாக அப்புறப் படுத்திக் கொண்டிருந்தார்கள்.

எனக்கு எல்லாமே வேடிக்கையாகத்தான் இருந்தது. எங்களுடன் வந்த மேலதிகாரி, தமது குடும்பத்தினருடன் பத்து நாட்கள் 'நாராயண சேவை!' (தன்னார்வத் தொண்டு) செய்ய வந்திருந்ததால், நாங்கள் மட்டும் நைஸாகக் கழன்று கொண்டோம்.

அந்தி கவியும் வேளை புட்டபர்த்தி பஸ் நிலையத்துக்கு வந்தோம். பஸ் நிலைய சுற்றளவை விட, இரண்டு பங்கு பயணியர் கூட்டம்! எப்படியோ எங்களுக்கு டிக்கெட் கிடைத்து விட்டது.

பஸ்ஸில் ஏறி அமர்ந்தோம். முன்பக்க படி ஏறும் இடத்தில் இருக்கும் முதல் இரண்டு சீட்டுகளில் இடம்பிடித்தோம். பஸ் புறப்பட்டது. புட்டபர்த்தி எல்லை யைத் தாண்டி, காட்டுப் பகுதிக்குள் விரைந் தது. புட்டபர்த்தியில் என் கணவரின் மேலதி காரி குடும்பம் எங்கள் கூடவே இருந்ததால், என்னால் என் கணவருடன் தனிமையில் பேச சந்தர்ப்பமே கிடைக்கவில்லை.

இப்போது, அருகிலிருந்த என் கணவரி டம், What do you think அத்தான்? Is he a god man or a fraud man!" என்று கேட்டேன். அதற்குப் பதில் சொல்ல என் கணவர் வாயைத் திறக்கவும், பக்கத்தில் கண்டக்டர் வந்து, ''டிக்கெட்ஸ்!'' என்றார். தேடுகிறோம்... தேடுகிறோம்... இருந்தால் தானே?

## வளையல் ஸ்டாண்ட் ரெடி!



**ஆஹா 50!**

கண்ணாடி வளையல்களை மாட்ட ஸ்டாண்ட் தோதான வளையல் இல்லையா? இரண்டு (அ) மூன்று நீளமான, பெரிய வாரப் பத்திரிகைகளை எடுத்து ஒன்றன்பின் ஒன்றாக நீளவாட்டில் சுருட்டியபிறகு, அச் சுருளின் இரண்டு முனைகளிலும், கனமான, அழுத்தமான ரப்பர் பேண்டை போட்டு விடுங்கள். கண்ணைப் பறிக்கும் வளையல் ஸ்டாண்ட் ரெடி!

- கே. ராஜலக்ஷ்மி, சென்னை - 61.

**இவை எல்லாமே ஆஹா 50! தான்!**

ஹாட் பேக் உபயோகமில்லாமல் இருக்கிறதா? ஹாட்பேக்கிலுள்ள கேரியர் அடுக்குகளில் காய்கறி, பருப்பு, பட்டாணி போன்றவற்றை நாம் வழக்கமாக உபயோகிக்கும் குக்கருக்குள் வைத்து வேகவைத்து எடுக்கலாம். பிடியுடன் இருப்பதால் எடுப்பதும் சுலபம். டூ இன் ஒன் உபயோகம்.

- எம். செல்வி, சென்னை - 2.

பித்தத்தினால் தலைசுற்றலா? ஒரு துண்டு இஞ்சி, 1 ஸ்பூன் தனியா, 1 ஸ்பூன் சீரகம் இவற்றை மிக்ஸியில் நைஸாக அரைத்து வடிகட்டி, இலேசாக சுடவைத்து தேன் (அ) சர்க்கரை சேர்த்து 1 மூடி எலுமிச்சம் பழம் பிழிந்து சாப்பிட தலைசுற்றல் பிரச்னை குணமாகும்.

- ஆர். மீனாக்ஷி, புதுதில்லி - 75.

துவைத்துக் காயப்போடும்போதே குழந்தைகளின் ஜட்டி, ஷிம்மி, பனியன், சாக்ஸ், டை, யூனிஃபார்ம், பெல்ட் எல்லாவற்றையும் ‘சட்’ என்று எடுக்கும் விதத்தில் ஹாங்கரில் முதல் நாளே மாட்டி வைத்து விடுங்கள்.

- ஆர். விசாலாக்ஷி, நவி மும்பை.

இது காற்றுக் காலம். உங்கள் வீட்டு சமையலறையில் காற்று அதிகம் வீசுகிற தென்றால் ஜன்னலை அடைத்து விடுங்கள். காற்று அதிகம் அடித்தால் கேஸ் அடுப்பின் ஜுவாலை படபடக்கும். இதனால் சமைக்க அதிக நேரம் பிடிப்பதோடு, எரிபொருளும் அதிகம் செலவாகும்.

- பி. ஜானகி, பாளையங்கோட்டை.

இரவு பாத்திரங்கள் துலக்கும் போதே குழந்தைகளின் டிபன் பாக்ஸ், அலுவலகம் செல்பவர்களின் லஞ்ச் பாக்ஸ் எல்லாவற்றையும் மொத்த பாத்திரங்களோடு சேர்த்து வைக்காமல் தனியே வைத்து விட்டால் காலை நேர அவசரத்தில் தேடி நேரத்தை வீணாக்க வேண்டாம்.

- சுந்தரி, ஆற்காடு.

கையில் தீப்புண் பட்டு விட்டால் உடனே ஒரு கிண்ணத்தில் பாலை ஊற்றி அதில் கையைக் கொஞ்ச நேரம் நனைத்துக் கொண்டால் போதும். புண் ஆறிவிடும்.

- கே. ராஜேஸ்வரி, காவேரிப்பாக்கம்.

## தொழில் நுட்பம்

# துவைக்கும் வேலை இனி இல்லை!

உலகிலுள்ள பெண்கள் அனைவருக்கும் ஒரு பெரிய விடுதலை. இனிமேல் துணி துவைக்கும் வேலை இல்லை! சோப்பு, வாஷிங் பவுடர், வாஷிங் மெஷின் இதற்கெல்லாம் செலவு செய்ய வேண்டிய அவசியமுமில்லை!

இன்டியானாவின் விஸ்கான்ஸின் மற்றும் ஆஸ்திரேலியாவின் மோன்ஷா



யுனிவர்சிட்டியைச் சேர்ந்த விஞ்ஞானிகள் நானோ - டெக்னாலஜியை உபயோகித்து பட்டுத்துணிகள், கம்பளித்துணிகளில் உள்ள 'wine' கறையை சில மணி நேரங்களில் மாயமாய் மறைந்து போக வைத்திருக்கிறார்கள்! இது ஒன்றும் கண்கட்டு வித்தை அல்ல! 'அனடைஸ் டைட்டனம் டையாக்ஸைடு' என்ற ரசாயனத்தை, பட்டு, கம்பளித் துணிகளில் 'கோட்டிங்' செய்து சூரிய ஒளி படும்படி வைத்தார்கள். நானோ டெக்னாலஜியின் வேதியியல் வினைவால் துணிகளில் இருந்த பாக்டீரியாக்களும், அழுக்குகளும் தாமாகவே அழிந்து போயின! 'wine' கறையும் மறைந்து விட்டது!

இன்னும் பத்து வருடங்களில், 'தானகவே சுத்தம் செய்யும்' துணிகளை மட்டுமே தயாரிப்பாளர்கள் தயாரிக்க வேண்டி வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. மில் - ட்ரையல் நடந்து கொண்டிருக்கிறது.

சுற்றுப்புறச் சூழலை மாசுபடுத்தும் டிடர்ஜென்ட்களின் உபயோகம் வெகுவாகக் குறைந்துவிடும். இல்லத்தரசிகளுக்கும் இனி துவைக்கும் வேலை இல்லை!

ஜாலிதானே!

- ஹேமப்ரியா,
ஊரப்பாக்கம்.




'வாடிக்கையாளர்களே உலகில் மிக முக்கியமானவர்கள்... வாடிக்கையாளர்கள் இல்லையேல் உலகே இல்லை!'

- எஸ்.சிவசுப்ரமணியம்,
மயிலாப்பூர்.

(கோலாலம்பூரில் ஒரு கடையில் பார்த்த ஆங்கில வடிவத்தின் தமிழாக்கம்)

# அழகு தரும் 1 கிராம் நகை!




தங்கம் விற்கிற விலையில் தங்கப் பிரியைகளுக்காக உருவானதுதான் ஒரு கிராம் நகை! வளையலில் தொடங்கி பிரேஸ்லெட், நீளமான செயின், நெக்லஸ், அட்டிகை, வைர அட்டிகை, கால் கொலுசு, வங்கின்னு எல்லாமே அசல் தங்கமா ஜொலித்து அசத்தியது சென்னை மைலாப்பூரில் உள்ள 'தாரா ஜுவல்லரி!'

ஒரு மாலை வேளையில் தாரா ஸுக்கு திடீர் விசிட் அடித்தோம். 'ஜேஜே' என இருந்த கஸ்டமர் கூட்டத்தை அன்பாகச் சமாளித்தபடியே, நம்மை வரவேற்றார் உரிமையாளர் தாரா.

''தங்கம் விலை ஏறுவதைப் பார்த்தா இமயமலைக்கு மேலதான் போய் நிற்கும் போல இருக்கு. தவிர எல்லா டிசைன்லயும் நடுத்தர மக்களால தங்கத்தை வாங்க முடியாது. அவங்களுக்கெல்லாம் இந்த நகை ஒரு வரப்பிரசாதம் தான்'' என்றார்.

''வேலைக்குப் போற பெண்கள் டிரஸ்ஸுக்கு மேட்ச்சா நகை போடணும். அதே நேரம் அது நல்லா உழைக்கணும். அழகாவும் இருக்கணும். விலையும் அதிகமிருக்கக் கூடாது. அதுக்கு பெஸ்ட் சாய்ஸ் இந்த ஒன் கிராம் கோல்டு தான். பார்க்க தங்கம் மாதிரியே இருக்கும். 700 ரூபாய்லேருந்து வளையல் வாங்கலாம். 2000 ரூபாய்லேருந்து நெக்லஸ் இருக்கு. இந்த நகைகள் அணிந்து பெண்கள் தனியா போனாலும் திருடர் பயமில்லை. அதனால்தான் 6 வருஷமா பெண்களுக்கு இந்த நகை மேல ஈடுபாடு அதிகமாயிடுச்சு'' என்றபடி ஜர்கான், போல்கி, குந்தன் என்று அவர் காட்டிய அத்தனை கற்களும் ஜொலித்தன. எழில் மிகு நகைகளை அஹமதாபாத், ராஜ்கோட் பகுதியிலிருந்து வரவழைக்கிறார்களாம்.



ஆறு வருடங்களாக வெற்றிகரமாக வாடிக்கையாளர்களைக் கவர காரணம் புதுப்புது டிசைன்களை அறிமுகப்படுத்துவது தான் என்று சொல்லும் இவர்களிடம் பழைய ஜரிகை புடைவையைக் கொடுத்து நமக்கு வேண்டிய நகையை எடுத்துக் கொள்ளலாம். தவிர, ஒவ்வொரு வருடமும் ஜூலை முதல் வாரத்தில் நகை வாங்கினால் 10% முதல் 25% வரை தள்ளுபடி உண்டாம். மொத்த விலைக்கு இவர்களிடம் நகைகளை வாங்கி விற்பனை செய்பவர்களும் இருக்கிறார்களாம். அழகாய் இருக்கு; ஃபேஷனா இருக்கு... விலைமலிவா இருக்கு; பாதுகாப்பாவும் இருக்கு... இன்னும் என்னங்க வேணும்? உடனே கிளம்புங்க 'தாரா'வுக்கு.

தொடர்பு எண் : தாரா வினோ
98401 55544, 044-2464 1799

- மௌ

# இரத்த சர்க்கரை பரிசோதனை
# இப்போது டிகோடட் ஆகிவிட்டது



நீரிழிவால் பாதிக்கப்படும் ஒரு நபர் வாழ்க்கையில் சில முக்கிய விஷயங்களை சரிவர வைத்துக் கொள்ள வேண்டும் அவை

**உணவு முறை. உடற்பயிற்சி. மருந்து.**

**அவர்கள் மனதில் தோன்றும் முக்கிய கேள்விகள்:**

நான் என்ன சாப்பிட வேண்டும் எவ்வளவு சாப்பிட வேண்டும்?

எனக்குத் தேவையான உடல் உழைப்பு நடவடிக்கைகள் என்ன?

எனது இன்சுலின் மற்றும் இதர மருந்து அளவுகள் என்னவாக இருக்க வேண்டும்?




இந்த கேள்விகளுக் கெல்லாம் ஒரு எளிய பதில் உண்டு. **அது தொடர்ச்சியான இரத்த குளுகோஸ் சுய கண்காணிப்பு பரிசோதனைகள்.**

எனினும், நீரிழிவு உடைய நபருக்கு மற்றுமொரு பெரிய கேள்வி பாக்கி உள்ளது. அது:

**நான் சரியான குளுகோமீட்டரை தேர்ந்தெடுப்பது எப்படி?**

குளுகோமீட்டரைத் தேர்ந்தெடுக்கும்போது எளிதாகப் பயன்படுத்தக்கூடிய,

> குளுகோமீட்டரைத் தேர்ந்தெடுக்கும்போது எளிதாகப் பயன்படுத்தக்கூடிய, வசதியான மற்றும் துல்லியமான முடிவுகளைக் காட்டும் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது மிக முக்கியம்.

வசதியான மற்றும் துல்லியமான முடிவுகளைக் காட்டும் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது மிக முக்கியம். ஒரு குளுகோமீட்டரில் கோடிங் (டெஸ்ட் ஸ்ட்ரிப்களின் எதிர் விளைவு உடன் இரத்த குளுகோஸ் மீட்டர் ஒப்பிடும் ஒரு முறை) செய்யும் அசௌகரியத்தை தவிருங்கள். ஏனெனில் தவறுதலான கோடிங்-ஆல் துல்லியமற்ற முடிவுகள் உங்கள் சிகிச்சை தீர்மானங்கள் மீது பெரும் தாக்கத்தை ஏற்படுத்தும்.

இதற்கு பதிலாக No Coding™ technology உள்ள CONTOUR TS பயன்படுத்துங்கள். இது ஒரு புதிய பரிசோதனை ஸ்ட்ரிப் செருகப் படும்போதெல்லாம் தானே சரியான கோட்-ஐ செட் செய்கிறது. சில பரிசோதனை ஸ்ட்ரிப்கள் மூலமே இது மிகவும் துல்லியமான முடிவுகளை அளிப்பதால் தவறுதலாக கோட் செய்யப்பட்ட மீட்டர்கள் காரணமான துல்லியமற்ற முடிவுகளுக்கான வாய்ப்பு குறைவுதான்.

NO CODING™



**கூடுதல் தகவலுக்கு உங்கள் மருத்துவரை தொடர்பு கொள்ளுங்கள் அல்லது எஸ்எம்எஸ்: 56767555**

அனைத்து பெரிய மருந்து கடைகளிலும் கிடைக்கும்.

**No Coding. No Confusion.**

CONTOUR TS

Blood Glucose Monitoring System

Bayer HealthCare

Diabetes Care




சில்லி ரெட் நிறத்தில், அம்பாரி யானை பார்டரும், முந்தானையும் பளபளக்க, சில்க் காட்டன் பட்டுப் புடைவையில் ஸ்கூட்டியில் ஒயிலாக வந்து இறங்கினாள் ஹேமா.

"சூப்பரா இருக்கே! எங்கேடி வாங்கினே?" ஆச்சரியப்பட்டாள் ப்ரியா.

"என்னோட ஃபேவரிட் கடையில... வர்றியா... இப்ப அங்கதான் போகிறேன்."

"ஆசையைக் கிளறி விட்டுட்டே! வராம இருக்க முடியுமா?" ப்ரியா ஸ்கூட்டியில் ஏறிக் கொண்டாள்.

**சென்னை... பாண்டிபஜார் அருகில் உள்ள ஆற்காடு தெருவில், எம்.ஜி.ஆர். நினை வாலயம் அருகில் 'பளிச்' என்று வரவேற் கிறது 'ஐஸ்வர்யா!'.. ஆடி விற்பனை தூள் கிளப்பிக் கொண்டிருந்தது.**

"வாங்க... வாங்க!" என்று இன் முகம் காட்டி வரவேற்றனர் திருமதி அண்ட் திரு. மதுபாபு.

"ப்யூர் சில்க், ஜூட் சில்க், சில்க் காட்டன், பாலி காட், காஞ்சி காட்டன், செட்டிநாடு, மங்கள கிரி, டெய்லிவேர் காட்டன், கரிதார் மெடீரியல்ஸ்...னு ஏகப்பட்ட வெரைட்டி இருக்கு... என்ன பார்க்குறீங்க...?"

"வெட்டிங் சாரீஸ் பார்க்கிறேன். என் தம்பிக்குக் கல்யாணம் நிச்சயமாயிருக்கு!" என்றாள் ப்ரியா.

"ரொம்ப சந்தோஷம்... லேட்டஸ்டா வந்திருக்கிற **'மிருதுளா'** கலெக்ஷன்ஸ் பாருங்களேன்...!"

விரித்துப் போடப்பட்ட மிருதுளா புடைவைகளின் சௌந்தர்யத்தில் சொக்கிப் போயினர்.

"இது வங்கி பார்டர்... இது காக பார்டர்... இது ஸ்டார் பார்டர்! இதே டிஸைன்ல பன்னிரண்டு கலர் இருக்கு" என்றபடியே வானவில் நிறத்தின் வர்ண ஜாலங்களை அள்ளி அள்ளி விரிக்கவும், எதை எடுப்பது எதை விடுப்பது என்று திண்டாடினாள் ப்ரியா. ஃபேன்டா ஆரஞ்ச் நிறத்தை ஹேமா விரும்ப, க்ரீம் எல்லோவை ப்ரியா தேர்ந்தெடுக்க, அதற்கு எம்பிராய்டரி, குந்தன் வேலைப்பாடுகளும் செய்து தரச் சொல்லி அங்கேயே ஆர்டர் கொடுத்தார்கள்.



"வீட்டுல விசேஷம்னு சொன்னீங்களே... நாங்க பல்க் ஆர்டர்ஸும் எடுக்கறோம்!" என்றார் திரு. மது.

"நீங்க எதுவுமே சொல்ல வேணாம். இனி, மனசுக்குப் பிடிச்ச புடைவை ஷாப்பிங்னா அது ஐஸ்வர்யாவுல தான்..."

ஆடி ஷாப்பிங் அற்புதமாக அமைந்து விட்ட திருப்தியில் இருவரும் வீடு திரும்பினர்.



# அசத்தலான ஷாப்பிங்னா அது ஐஸ்வர்யாவுலதான்!

மேலும் விவரங்களுக்கு : 044-4260 4447
98409 83999

# திரு'மால்

நியூயார்க், வாஷிங்டன், டெட்ராய்ட், சிகாகோ என்று எந்தப் பிரபல அமெரிக்க நகரத்தை எடுத்துக் கொண்டாலும் அங்கே ஷாப்பிங் மால்களுக்குப் பஞ்சமில்லை. இவை ஒவ்வொன்றும் அளவில் பிரம்மாண்டம். இவற்றைச் சுற்றி வந்தாலே பல கிலோ மீட்டர்கள் நடந்த பலன்(!) கிடைக்கும்.

சியர்ஸ், கோஹில்ஸ், டார்கெட், வால்மார்ட், ஜே.஢ி. பென்னி போன்ற பெரிய கடைகளின் சங்கிலித் தொடர்கள், அமெரிக்க நாட்டின் எல்லாப் பிரபல நகரங்களிலுமுள்ள 'மால்களில்' இடம் பெற்றிருப்பதைப் பார்க்கலாம். இன்னொரு அனுகூலம் என்னவென்றால் ஒரு ஊரில் வாங்கிய



பொருளில் ஏதோ ஒரு குறைபாடு இருந்தாலோ, நமக்குப் பிடிக்கவில்லை என்றால், அதன் பில்லுடன் பொருளையும் வேறு ஊரில் இருக்கிற அதே அங்காடியின் சங்கிலித் தொடர் ஷாப்பில் திருப்பிக் கொடுத்துப் பணத்தைப் பெற்றுக் கொள்ள முடியும்.




சில நகரங்களில் 'சாம்ஸ் கிளப்' என்கிற மிகப் பெரிய மொத்த விற்பனை கடையும் இருக்கிறது. இதுவே ஒரு மால் அளவுக்குப் பெரிசு. இங்கே நம் மாதாந்திரத் தேவைகளான சோப்பு, டிடர் ஜெண்ட், ஷாம்பூ, லோஷன்களிலிருந்து கார்ன்ஃப்ளேக்ஸ், ஜூஸ், குழந்தை பால் பவுடர் வகைகள், விட்டமின், வலி நிவாரணி போன்ற மருந்து வகைகள் எல்லாமே வெளி விலையை விடக் குறைந்த விலையில் கிடைக்கின்றன. முதலில் நூறு டாலர் கொடுத்து இந்த கிளப்பில் அங்கத்தினராகி அடையாள அட்டையைப் பெற்றுக் கொண்டுவிட்டால் குறைந்த விலையில் இங்கு பொருட்களை வாங்கலாம்.

ஷாப்பிங் மால்களில் நடுவில் 'ப்ளே ஏரியா' (குழந்தைகள் விளையாடும் இடம்), அமர்ந்து இளைப்பாறும் இடம், செயற்கைப் பூங்காக்கள் எல்லாமே உண்டு. கிறிஸ்துமஸ் வந்துவிட்டால் அலங்கார விளக்குகளின் ஜோடனை இங்கே கண்ணைப் பறிக்கும்.

சில இடங்களில் அழகிய சாய்மானங்களில் கஸ்டமர்களைப் படுக்க வைத்து மசாஜ் செய்யும் இளைஞர்களைக் காணலாம். கட்டணம் வேலைக்கு ஏற்ற மாதிரி.

# பெருமை!


* கார் கொலு!



ஊருக்கு வெளியிலுள்ள 'அவுட்லெட் மால்'களில் சனி, ஞாயிறுகளில் திருவிழாக் கூட்டம்தான்! இங்குள்ள கடைகளில் எல்லாப் பொருட்களுமே விலை சற்றுக் குறைவு என்பதால் இப்படியாம்.

**மா**ல்களிலுள்ள சில வித்தியாசமான கடைகளின் பெயர்கள் நம்மைக் கவர்கின்றன.

Build A Bear அவற்றில் ஒன்று. சில குழந்தைகள் தங்கள் பிறந்தநாளைக் கொண்டாட இங்கே வருவதுண்டு. தட்டையாக இருக்கும் டெட்டியை செலக்ட் செய்து

இவர்களிடம் கொடுத்தால் அதில் எந்திரம் மூலம் பருத்தியை தேவையான அளவுக்கு அடைத்து தைத்து, உடை அணிவித்து, அலங்காரம் செய்து தருகிறார்கள். இதன் விலை பத்து முதல் இருபது டாலர் வரை வேறுபடும்.

'Libby Lu' என்பது பிறந்த நாள் பார்ட்டிகளுக்குப் போகுமுன் பணக்காரக் குழந்தைகள் தங்களை புகழ்பெற்ற எந்த 'பாப்' ஸ்டார் போல அலங்கரித்துக் கொள்ள விரும்புகிறார்களோ அப்படியே செய்து கொண்டு, (ஹேர் டூ உள்பட) போக ஏற்ற பியூட்டி பார்லர். அவர்களது வளர்ப்புப் பிராணிகளான நாய், பூனை களுக்குக் கூட இங்கே மேக்-அப் போட்டு விடுகிறார்கள்!

'Bed, Bath & Beyond' ல் வீட்டுக்குத் தேவையான வாக்யூம் க்ளீனர், திரைச் சீலைகள், விரிப்புகள், பாத்திரங்கள், குக்கர், மிக்ஸி, கண்ணாடிப் பாத்திரங்கள், கத்தி, பீலர் என்று அத்தனை அயிட்டங்களும் உண்டு.

இதே போல் ஒரு மினி 'மால்' போல் உள்ள ஐக்கியாவையும் குறிப்பிடலாம். இங்கே நர்சரி போல் தொட்டிகளில் தாவரங்களையும் விற்கிறார்கள். மேல்தளத்தில் சாமான்களை வாங்கிவிட்டு (உடையாத) அவற்றைத் தள்ளுவண்டிக்குள் திணித்து அதற்கென்றே அமைந்த பிரத்யேக வழியில் சங்கிலியிட்டுப் பொருத்தி விட்டால் விர்ரென்று அது ஆடாமல் அசையாமல் பாய்ந்து இறங்கி கீழ்த்தளத்தில் 'Safe Landing' செய்வது பார்க்க சுவாரஸ்யமான காட்சி!

'Once upon a child' என்னும் ஷாப்புக்குள் நுழைகிறோம். குழந்தை வளர்ந்த பிறகு பயன்படாத உடை, பொம்மை, பிராம், ஹை சேர் இதுபோன்ற சாமான்களைக் கொண்டு வந்து பாதி விலைக்கு விற்று விடுகிறார்கள். அவற்றை வாங்கி, தேவையானால் சற்றுப் புதுப்பித்து மலிவு விலையில் இங்கே விற்கிறார்கள். ரெடிமேட் உடைகள் கூட இங்கே கிடைக்கின்றன.

Hobby Lobbyயில் பொழுதுபோக்காகச் செய்யக்கூடிய தையல், பூ வேலைகள், கைவினைப் பொருட்கள், ஓவியங்கள், கூடைகள், இன்னும் பல கலை ஆர்வலர்களுக்குத் தேவையான நூல், பெயிண்ட், பென்சில் வகைகள் கிடைக்கின்றன. அதிக பொருட்கள் வாங்காதவர்கள் பில்லிங் மிஷினில் அவற்றின் பெயர்களைப் பதிவு செய்து பில் வந்ததும் கிரெடிட் கார்டுகளை நுழைத்து தொகையைச் செலுத்தி 'செக் அவுட்' பண்ணவும் வசதிகள் உள்ளன. எல்லா மால்களிலுமே அங்கங்கே ரெஸ்ட் ரூம்களும், குழந்தைகளுக்கு டயபர் மாற்றவும், பால் புகட்டவும் வசதியான அறைகளும் உள்ளன. வாடிக்கையாளர்களைத் திருப்திப்படுத்துவது மட்டுமே தங்கள் நோக்கம் என்கிற குறிக்கோளுடன் இதமாகப் பேசி பரிவுடன் நடந்து கொள்ளும் விற்பனையாளர்கள் நிச்சயம் நினைவில் தங்கிப் போகிறார்கள்.

மால்களுக்கு வெளியே பார்க்கிங் ஏரியாவில் ஒழுங்காக கார்கள் நிறுத்தப்பட்டிருப்பதும் கொலு வைத்திருப்பதைப் போல் பார்க்க வெகு அழகான காட்சி!

- சுப்புலக்ஷ்மி, சென்னை - 4.



## ஆஹா 50!

புடைவைகளைத் துவைத்து உலர்த்தியபின், அந்தந்த புடவைகளின் மேட்சிங் ப்ளவுஸை அதே புடைவையின் மடிப்பின் உள்ளேயே வைத்து விடவும். ஆஃபீஸ் போகும் அவசரத்தில் மேட்சிங் ப்ளவுஸைத் தேடும் நேரமும், டென்ஷனும் மிஞ்சும்!

- மீனாட்சி குருராஜ், விழுப்புரம்.

## முதல் அத்தியாயத்தில்...

ஆர்த்தி மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருக்கும் அப்பாவுக்கும் துணையாக இருக்கும் அம்மாவுக்கும் உணவு எடுத்துச் செல்லும்போது அக்கா அர்ச்சனா போன் செய்கிறாள். வீட்டை எதிர்த்து திருமணம் செய்ததால் பெற்றோரால் புறக்கணிக்கப் பட்டிருக்கும் அர்ச்சனா, அப்பாவைப் பார்க்கத் துடிக்கிறாள்.

இன்னும் உபயோகத்தில் இருக்கும் பழைய தட்டச்சு இயந்திரத்தில் அந்தப் பெண்மணி ஒரு வரி அடிப்பதும், வெள்ளரிப் பிஞ்சை ஒரு கடி கடிப்பதுமாக இருந்தாள். கேஸ் கட்டுக்கள் பிரதானமாக மேஜை முழுக்க அடைத்துக் கொண்டிருப்பது போதாதென்று சுந்தரேசன் பி.ஏ.பி.எல். வந்ததும் அமரப் போகிற நைலான் வயர் பின்னிய நாற்காலியின் மீதும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. பெண்டுலமாடும் ரிவெக்ஸ் கடிகாரத்தில் பெரிய முள் பதினைந்து நிமிடங்கள் தாமதமாக நகர்ந்து கொண்டிருந்தது. சுவர் முழுவதும் சந்தனம் தெளிக்கப்பட்ட சுவாமிப் படங்கள். கண்ணாடி பீரோக்களில் புஷ்டியான சட்டப் புத்தகங்கள். சுழலும் மின் விசிறியில் தொங்கும் ஒட்டடை எப்போதும் யார் மீதும் விழலாம். அறையின் மூலையில் கவிழ்க்கப்பட்ட பபின்டாப் தண்ணீர்க் குடுவைக்குள் ஒரு சொட்டுத் தண்ணீர் இல்லை.

காலையில் வீட்டில் படித்து முடித்துவிட்ட செய்தித் தாளை கழுத்தைப் பிடித்து பொழுதைத் தள்ளுவதற்காக சும்மா புரட்டிக் கொண்டிருந்தான் மனோகர். அவன் வைத்ததும் எடுக்கத் தயாராய் கண்ணாடி ஆசாமி அருகில் நின்றார். ஒரு சிகரெட் பிடித்துவிட்டு வந்தால் இருக்கும் ஒரே நாற்காலி பறிபோய்விடும் அபாயம்.

''ஏம்மா, வக்கீல் வர லேட்டாகுமா?''

''இன்னிக்கு ரெண்டு கேசுமே அட்ஜர்ன்மெண்ட் தான். இப்ப வந்துடுவாரு சார்.''

'இப்ப'வுக்குப் பொருள் ஒரு மணி நேரமா இரண்டு மணி நேரமா என்று கேட்டால் முறைப்பாள். இட வலமாக திரும்பும் மின்விசிறியை தன் பக்கமாக நிறுத்தி விடவும் வாய்ப்புண்டு.

மேலும் அரை மணி விரயத்தில் ஒரு வண்டு விர்ரென்று நுழைந்து மூவரையும் பரபரப்பாக்கி விட்டு ஜன்னல் வழியாக



பட்டுக்கோட்டை பிரபாகர்



**ஆஹா 50!**

உங்கள் வீட்டுச் செல்லக் குழந்தைகள் ஜன்னல், கதவுகளில் உள்ள ஸ்க்ரீன் துணிகளை இழுத்து விளையாடுவதை ஒருபோதும் அனுமதிக்காதீர்கள். பெல்மெட்டிலுள்ள ஸ்க்ரூ, அலுமினியக் கம்பி, பெல்மெட் போன்றவை நழுவி விழுந்து காயப்படுத்தும்.

- சரஸ்வதி வெங்கட்ராமன்,
பெங்களூர்.

வெளியேறியதைத் தவிர வேறெதுவும் நிகழாததால் வெறுத்துப் போய் எழுந்த மனோகர், ''என்னை ஒன்பது மணிக்கு வரச் சொன்னார். நான் எட்டே முக்காலுக்கே வந்தேன். இப்ப பதினொண்ணு ஆகப் போவுது. யாரும் வெட்டியா இல்லைங்க. எல்லாருக்கும் அவங்கவங்க நேரம் முக்கியம். அட்லீஸ்ட் வர லேட்டாகுது சார்னு ஒரு போன் பண்ணிச் சொல்ற நாகரிகமாவது வேணுங்க. நாங்க குடுக்கற ஃபீசுலதான் அவர் சம்பளம் கொடுத்து, நீங்க இப்படி வெள்ளரிக்கா வாங்கித் திங்க முடியுது. புரிஞ்சுக்கங்க'' என்று ஆத்திரமாக சொல்ல நினைத்து, ''ஒரு டீ குடிச்சிட்டு வர்றேங்க. அதுக்குள்ள சார் வந்துட்டாருன்னா சொல்லுங்க. மறுபடி எங்கயாவது போயிடப் போறாரு'' என்ற மட்டும் சொல்லி வெளியேறியதும், க. ஆசாமி நாற்காலியை கைப்பற்றி செய்தித்தாள் எடுத்தார்.

**அ**ந்தச் சந்திலிருந்து விடுபட்டு, முக்கிய சாலைக்கு வந்து பாதையோர சக்கர வண்டியில் டீ சொல்லிவிட்டு சமோசா எடுத்துக் கடித்தான் மனோகர்.

நூறு பேர் அவனை இடித்துக்கொண்டு நடந்து போனார்கள். திருமண அழைப்பிதழ் வாங்க கையைப் பிடித்து இழுத்து கடைகளுக்குள் தள்ளிக் கொண்டிருந்தார்கள். விரித்துக் கவிழ்த்த குடைகளுக்குள் கைக்குட்டை, ஸேஃப்டி பின், ரெஃப்ரிஜிரேட்டர் மேல் ஒட்டும் ஸ்டிக்கர், ரிமோட் கண்ட்ரோல் கவர், காது குடையும் பட்ஸ், முப்பது நிறங்களில் தெரியும் குளிர் கண்ணாடி, ஒரே வாரத்தில் கிழியும் செல்போன் பவுச், ஐந்து ரூபாய்க்கு ஆறு பேனா, சென்னை-சுலப வழிகாட்டி என்று சகலமும் விற்றுக் கொண்டிருந்தார்கள். சாலைக்கு அந்தப் பக்கம் சிவப்பு கட்டடங்களுக்குள் நீதிக்காக பேசிக்கொண்டு, பயந்துகொண்டு, வாங்கிக் கொண்டு, கொடுத்துக்கொண்டு இருந்தார்கள்.

மனோகர் ஊதி ஊதி டீ குடித்தபோது செல்போன் ஒலித்தது. பெயர் பார்த்தான். இந்த வாகன சத்தத்தில் ஒரு எழவும் புரியாது. துண்டித்தான். காசு கொடுக்கும்போது மீண்டும் அடித்தது. மீண்டும் துண்டித்து மக்கள் வெள்ளத்தில் நீந்தி விலகி எச்சரிக்கையாக நாய்க்குட்டி கடந்து வக்கீல் அலுவலகம் வந்தபோது சுந்தரேசன் வந்திருந்தார்.

''உக்காருங்க மனோகர்'' என்றார். கண்ணாடி புரிந்துகொண்டு எழுந்ததும், மனோகர் அமர்ந்து, ''என்ன சார்? அக்ரிமெண்ட் படிச்சிப் பார்த்தீங்களா?'' என்றான்.

''படிச்சேன் சார்.''

''மனோகர், நீங்க என்ன படிச்சிருக்கேள்?'' என்றார்.

''பி.எஸ்ஸி., சார்.''

''அக்ரிமெண்ட்ல கையெழுத்து போடறதுக்கு முன்னாடி என்னை மாதிரி

ஒரு லாயர்கிட்ட காட்டியிருக்க வேணாமோ? ஒரு டிஸ்ப்யூட்ன்னு வர்றப்ப ஓடி வர்றேளே?''

''ஒரு நம்பிக்கைதான் சார். அவரை எனக்கு ரொம்ப நாளா தெரியும்.''

''தெரிஞ்சவாதான் சார் துரோகம் செய்வாங்க. முன்ன பின்ன தெரியாதவங்க எப்படித் துரோகம் செய்ய முடியும்? ஒரு வரி கூட உங்களுக்குச் சாதகமா இல்ல சுவாமி. செமத்தியா பிளான் பண்ணி வார்த்தைகளைப் போட்ருக்கான்.''

''அதுவும் உங்களை மாதிரி ஒரு வக்கீல் தானே சார் செஞ்சிருக்க முடியும்?''

''ஆமாம். கேக்கறத செஞ்சிக் குடுக்கத் தானே நாங்க இருக்கோம். நியாயம், நீதின்னு பாடம் எடுத்துட்டிருக்க நாங்க என்ன பள்ளிக்கூட வாத்தியாரா? இப்பல்லாம் ஸ்கூல்கல கூட நீதி போதனை கிளாஸ் இல்லையே...''

''சரி, என்ன செய்யலாம்?''

''கேஸ் போட்டு ஒரு நாலஞ்சு வருஷம் இழுக்கலாம். ஆனா நிக்காது. தோத்துடுவோம். கோர்ட்டு ஃபீஸ், என் ஃபீஸ்னு உங்களுக்குச் செலவாகும். பருப்பு வேகாது. ஆனா அவனுக்கு மன உளைச்சல் தரலாம். மாதம் ஒரு தடவை கோர்ட்டுக்கு அலையறது ஒரு நியூசன்ஸ் இல்லையா?''

''எனக்கு பணம் வருமா சார்?''

''பேராது. இதை ஏன் ஒப்பனா சொல்றேன் தெரியுமோ? நீங்க என் நண்பர் அனுப்பி வெச்சு வந்திருக்கீங்க. வேற நபரா இருந்தா வாங்க, மோதிருவோம்னு உசுப்பேத்தி ஃபால்ஸ் ஹோப் குடுத்துருவேன். உங்களைப் பார்த்தா பாவமா இருக்கு... ஏற்கெனவே ஏமாந்திருக்கீங்க. விட்ருங்கோ.''

''பதினேழு லட்சம் சார். எப்படி விடறது? வேற வழியே இல்லையா?''

''இருக்கு. கட்டப் பஞ்சாயத்து.''

''அவரே அந்த மாதிரி ஆள்தான் சார்.''

''அப்ப கடைசியா ஒரு வழி இருக்கு. தன்மானம் பார்க்கப்படாது. செய்வீங்களா நீங்க?''

''சொல்லுங்க...''

''திருப்பதி ஏடு கொண்டல வாடுன்னா விழுந்து கும்பிடறதில்லையா? இப்போ அவன்தான் கடவுள்னு நினைச்சு சாஷ்டாங்கமா கால்ல விழுந்து கும்புட்டு, யப்பா, உன்னோட மோத என்னால ஆகாதுப்பா, குடுக்கறதைக் குடுப்பான்னு கெஞ்ச வேண்டியதுதான்.''

மனோகர் எழுந்து கொண்டான், ''உங்களுக்கு நான் எவ்வளவு சார் தரணும்?''

''பொதுவா இந்த மாதிரி லீகல் கன்சல்டேஷனுக்கு தவுசண்ட் குறைஞ்சி யாரும் வாங்கறதில்லை. ஃபைவ் ஹண்ட்ரெட் குடுங்க, போதும். நம்பிக்கை இருந்தா திருக்கொள்ளிக்காடு பொங்கு சனீஸ்வரரைப் பார்த்து ஒரு எள்ளு தீபம் ஏத்தி வெச்சிட்டு வாங்க.''

**அ**வரது கடைசி வரிகளை முதுகில் வாங்கிக் கொண்டு, சந்தில் இறங்கியபோது மீண்டும் செல்போன் ஒலித்தது. ஓரமாக டிரான்ஸ்ஃபார்மர் அருகில் ஒதுங்கி ஆன் செய்தான்.




**நீரிழிவு நோய் உள்ளவர்கள் தினமும் 2 கொய்யாக் காய்களை (கனிகள் அல்ல) சாப்பிட்டாலோ, அல்லது 2 கொய்யா இலைகளை மென்று சாப்பிட்டாலோ சர்க்கரை அளவு கண்டிப்பாகக் குறையும்.**

**- ரா. தேன்மொழி, விருகம்பாக்கம்.**

''என்னடி?''

''ரெண்டு தடவை பண்ணேன். ஏங்க கட் பண்ணீங்க?''

''எவ வீட்டுலயோ படுத்திருந்தேன். இப்பத்தான் எடுக்க முடிஞ்சது. போதுமா விளக்கம்?''

ஃபோனை அணைத்துவிட்டு வேகமாக நடந்து பைக்கை நிறுத்தியிருந்த இடத்திற்கு வந்தான். இவன் வண்டியைச் சுலபமாக எடுக்க முடியாதபடி ஒரு கார் நிறுத்தப்பட்டிருக்க... கெட்ட வார்த்தை சொல்லியபடியே வேண்டுமென்றே பைக்கை அந்த வண்டியின் கதவில் அழுத்தமாக கோடு போட்டு வெளியில் எடுத்தான்.

சிக்னலுக்கு வண்டியை நிறுத்திய போது, அருகில் நின்ற டிராஃபிக் கான்ஸ்டபிளிடம், ''சார், பக்கத்துல டாஸ்மார்க் கடை எங்கே இருக்கு?'' என்றான்.

''என்னய்யா போஸ்ட் ஆபீசுக்கு வழி கேக்கற மாதிரி கேக்கறே?''

''என்ன தப்பா கேட்டுட்டேன்? அரசாங்கம் நடத்தற ஒரு கடையைப் பத்தி ஒரு அரசாங்க ஊழியர்கிட்ட கேக்கக் கூடாதா? அது நல்லா லாபம் சம்பாரிச்சா தான் உங்களுக்கு போனஸ் அதிகமா தர முடியும்.''

''திமிரா? வண்டியை ஓரங்கட்டு. லைசன்ஸ் காமி.''

''வேற என்ன தெரியும் உங்களுக்கு? போங்க சார்'' சிவப்பு மாறும் முன்பே வண்டியை சீறிக் கிளப்பிச் சென்ற மனோகர் பத்தாவது நிமிடம் அந்த மதுக் கடை சைடில் இருந்த கேவலமான பாரில் நுழைந்தான்.

பிளாஸ்டிக் தம்ளரில் விஸ்கி ஊற்றி, தண்ணீர் பாக்கெட்டை பல்லால் கத்தரித்து அதில் பீச்சி, ஊறுகாய் நக்கிக் கொண்டு குடிக்கத் துவங்கினான்.

கொத்துக் கொத்தாகவும் தனியாகவும் நின்றபடி, உச்சமாகச் சிரித்தபடி, விசும்பியபடி, வாந்தி எடுத்தபடி, சவால் விட்டபடி, டான்ஸ் ஆடியபடி, தலைக்கு மேல் சிகரெட் மேகம் உலவ விட்டபடி ஆனந்த சுதந்திரத்தைக் கொண்டாடும் பாரத தேசத்தின் பண்பான குடிமக்கள் மத்தியில் கண்கள் சிவந்த நிலையில் போதை தலைக்கேற வெறியோடு யோசித்தான் மனோகர். ஒன்றில்லை... இரண்டில்லை... பதினேழு லட்சம்! என்ன செய்யலாம் அவனை?

மீண்டும் ஃபோன் ஒலிக்க, அதட்டலாக, ''என்னடி வேணும் உனக்கு?'' என்றான்.

''எங்க இருக்கீங்க நீங்க? ஏன் இவ்வளவு சத்தமா இருக்கு? வெச்சிடாதீங்க. நான் சொல்றதைக் கேட்டுக்கங்க. அப்பாவுக்கு ஹார்ட் அட்டாக் வந்து இப்ப ஹாஸ்பிடல்ல இருக்காராம். ஆர்த்தி சொன்னா. எனக்குப் பார்க்கணும் போல இருக்கு. நீங்க ஒண்ணும் வர வேணாம். போய்ட்டு வந்துடட்டுமா? என்ன, சொல்லுங்க?''

''வீட்டை விட்டு காலை எடுத்து வெளில வெச்சே.. வெட்டிப் போட்ருவேன், ஆமாம். அந்தாளு செத்தாக்கூட நீ போகக் கூடாது'' என்றான் மனோகர்.

(தொடரும்)



**ஆஹா 50!**

குறைந்த அளவிலான உபகரணங்களை மட்டும் உபயோகப்படுத்துவதால், வீடு சுத்தமாகவும், சுகாதாரமாகவும் வைத்துக் கொள்ள முடியும். பொருட்கள் அதிகம் இருந்தால் இது நிச்சயம் சாத்தியமில்லை.

- சுமித்ரா ராஜு, சுண்ணாம்பு கொளத்தூர்.

# SRI PALSANI JEWELS

110, டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை, (ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் அருகில்)
மைலாப்பூர், சென்னை - 600 004. ☎: 28111737, 28117036. www.sripalsanijewels.com



உங்களின் கண்களை கவரும் **Temple Jewels** பல வண்ணங்களில், பல வித டிசைன்களில் உங்கள் பல்சானி ஜீவல்லர்ஸ்-ல் இப்பொழுது மிக மிக குறைந்த விலை அறிமுகமாகி உள்ளது

இளைய தலைமுறைகளை சுண்டி இழுக்கும். வெள்ளியில் பதித்த அமெரிக்கன் டயமண்ட் நகைகள், அழகான டிசைன்களில்... குறைந்த விலையில்... பாலீஷ் போய்விடுமே என்ற கவலை வேண்டாம். மீண்டும் பாலீஷ் செய்து கொள்ள லாம். இதன் விலை ரூ.1000/- முதல் ஆரம்பம்.





ஒரு வித ஸ்பெஷல் உலோகத்தின்மேல் ½ கிராம் அல்லது 1 கிராம் தங்கம் 'கோட்' செய்யப்பட்டு உருவாக்கும் தங்க நகைகள்தான் இன்றைய பேஷன் உலகின் நவநாகரீக மங்கைகளின் உள்ளத்தில் நம்பர் ஒன் இடத்தை பிடித்திருப்பது.

நீங்கள் வாங்கிச் செல்லும் ½ கிராம் தங்க நகையை உபயோகப் படுத்திய பின் ஆறு மாதத்துக்குள்ளும், ஒரு கிராம் தங்க நகையை உபயோகப்படுத்திய பின் ஒரு வருடத்திற்குள்ளும் எங்களிடம் திருப்பித் தந்தால் 50 சதவிகிதம் தள்ளுபடி செய்து வேறு புதிய நகையை எங்களிடம் பெற்று மீண்டும் நீங்கள் ஜொலிக்கலாம்.

உங்கள் வாழ்க்கையில் வளம் பெற, வியாபாரத்தில் செழிக்க, கண்களை கவரும் விலை உயர்ந்த ஒரிஜினல் ராசிக்கற்களை வெள்ளியில் பதித்து 350 ரூபாய்க்கு குறைந்த விலைக்கு விற்பது நாங்கள் மட்டும்தான் இது தவிர 22 கேரட் ராசிக்கல் மோதிரமும் உண்டு. அதுவும் 100 சதவிகிதம் உத்திர வாதத்துடன்.



**சிறப்புச் சலுகைகள்:**

(1gm மற்றும் American Diamond நகை வாங்குபவர்களுக்கு மட்டும்)

உங்கள் நகைகளுக்கு 100% உத்திரவாதம் உண்டு

ரூ. 100 முதல் ரூ.1000 வரை மாத சீட்டும் உண்டு

ரூ. 500 முதல் 1,500 வரை வாங்குபவர்களுக்கு ஒரு ஜோடி American Diamond கம்மல் இலவசம்.

ரூ. 1,500/- முதல் ரூ. 2,500/- வரை வாங்குபவர்களுக்கு ஒரு American Diamond Dollar இலவசம்.

ரூ. 2,500/- க்கு மேல் வாங்குபவர்களுக்கு ஒரு American Diamond Necklace Set இலவசம்.

இந்த விளம்பரத்தை கத்தரித்து வருபவர்களுக்கு **5%** கூடுதல் கழிவு

நீங்கள் வாங்கிச்செல்லும் மூக்குத்தி ஜோடியை தோடுகள் மேல் தோடாகவும், அல் லது குழந்தைகளுக்கும் தோடாக அணிவித்து அழகுபடுத்தலாம். பரவசப் படுத்தும் எண்ணற்ற வண்ணங்களில் 22 கேரட் தங்கத்தினால் தயாரிக்கப்பட்ட விலை ரூ.100/- முதல்...



பல்சானி ஜுவல்ஸ் நகைகளை ஆன்லைன் மூலமாகவே வாங்கலாம்!
எங்களுடைய புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ள இணையதளம் **www.sripalsanijewels.com**
மூலம் நகை வாங்குபவர்களுக்கு டெலிவரிசார்ஜில் 50% சிறப்புத் தள்ளுபடி

# “நாங்க ரெடி! நீங்க ரெடியா?”



**இதோ ஆடி மாதம் வந்துவிட்டது. இனி தீபாவளி வரை ஷாப்பிங் சீசன்தான்! ‘‘இந்த வருட ஷாப்பிங் சீசனுக்கு என்ன சிறப்புத் திட்டம் வைத்திருக்கிறார்கள்?’’ என்று சில பிரபல நிறுவனங்களின் உரிமையாளர்களைக் கேட்டபோது உற்சாகமாகப் பேசினார்கள்.**

‘‘மூன்று நகை டிசைனர்களை வைத்து பல புதுப்புது டிசைன்களில் ஏராளமான நகைகளை வடிவமைத்திருக்கிறோம்; லைட்வெயிட் நகைகள் முதல் டெம்பிள் ஜுவல்லரி வரை வெரைட்டிக்குக் குறை வில்லை. மிகவும் கிராண்டாக புடைவை கட்டிக்கொண்டால், அதற்கு ஏற்றாற் போன்ற விலை உயர்ந்த நகைகள், புடைவையைத் தூக்கிச் சாப்பிடும்





ஷாப்பிங் ஸ்பெஷல்

படியான பிரத்யேக நகைகள், புடைவை யின் முக்கியத்துவத்தைக் குறைக்காத நளினமான நகைகள் என்று எல்லாமே தயார். பட்டுப்புடைவைகளுக்கு மட்டு மில்லாமல், ஜார்ஜெட், ஷிஃபான் புடை வைகளுக்கு மேட்சிங்கான நகைகள் எங் களிடம் கிடைக்கும். பர்மீஸ் ரூபீஸ் எனப் படும் பர்மா நாட்டு குச்சு கெம்ப் நகை களை இந்த வருடம் விற்பனைக்குக் கொண்டு வந்திருக்கிறோம். பெண்கள் விரும்பும்வண்ணம் நிறைய வெள்ளி நகை களும் உண்டு. ஆண்களுக்கு தற்போதைய நவீன டிரெண்டான ஒற்றைக் காது வளை யம் முதல் செயின்கள், மோதிரங்கள், பிரேஸ்லெட் எல்லாமே உள்ளன. லேட் டஸ்டாக எவர்சில்வரில் செய்த ஐட்டங்கள் இளையதலைமுறையிடையே நல்ல வர வேற்பைப் பெற்றுள்ளன'' என்று கூறினார் வி.பி.ஜே. நகைக் கடையின் ஜிதேந்திரா.

''அனைத்து ஜவுளிகளையும் ஆடி யில் வாங்குங்கள்'' - இதுதான் எங்கள் ஸ்பெஷல் ஆஃபர். பொதுவாக ஆடி என்றாலே தீபாவளிக்கு முன்னால், விற்பனையாகாத பழைய சரக்குகளை எல்லாம் தள்ளுபடி விலையில் விற்று விட்டு, தீபாவளிக்குப் புது சரக்குகளை வரவழைப்பார்கள் என்று ஒரு கருத்து உண்டு. ஆனால், நாங்கள் ஆடி சீசனுக் கென்றே ஸ்பெஷலாக ஏராளமான புதுப் புது ஃபேஷன்களில் ஆடைகளை வர வழைத்து, வாடிக்கையாளர்களுக்கு வழங்க விருக்கிறோம். எனவே, ஏகப்பட்ட வெரைட்டி தயார். கடந்த ஆண்டுகளில் வடக்கு-தெற்கு சங்கமம் என்ற அடிப் படையில் ஐந்தாயிரத்துக்கு அதிக விலை யில் 'வஸ்திரகலா பட்டு' என்று ஒரு ரகத்தை அறிமுகப்படுத்தினோம். அதற்கு


* வசந்த குமார்

நல்ல வரவேற்பு. இப்போது சாமானிய மக்களும் வாங்கும் விதமாக ஆயிரம், இரண்டாயிரம் ரேஞ்சில் வஸ்திரகலா பட்டு கொண்டு வந்திருக்கிறோம். நிறைய எம்பிராய்டரி வகை ரகங்களும் கிடைக் கும். தீபாவளிக்கு இன்னும் நாளிருக்கே! இப்போதே சொல்லிவிட்டால் சஸ்பென்ஸ் போய்விடும். எனவே அப்புறமாகச் சொல்கிறேன்'' என்று சஸ்பென்ஸ் வைத்து முடித்தார் போதீஸ் ரமேஷ்.

காலேஜ் மாணவிகளைக் கவர்ந் திழுப்பதுதான் எங்களுடைய ஒரே நோக் கம். அதற்காக இப்போதே நாங்கள் களத்தில் இறங்கிவிட்டோம். 'College Vogue' என்று பெயரிட்டிருக்கிறோம். இதில் ஜீன்ஸ், டாப்ஸ், ஷர்ட், பேண்ட்ஸ்,


* அரவிந்த் ராமசாமி



டிரெண்டியான சூரிதார்ஸ் மற்றும் அவற்றுக்கான டாப்ஸ் என்று எல்லாமே லேட்டஸ்ட்டாக இருக்கும். இதெல்லாம் நாயுடுஹால் நய்ஹாவில். உள்ளாடைகளுக்கான பிரத்யேகமான 'மெர்மெய்டு' ஷோ ரூம்களில் வழக்கமான லேட்டஸ்ட் டிசைன் உள்ளாடைகள் தவிர பெண்களுக்கான நீச்சல் உடை, ஸ்போர்ட்ஸ் வேர் மற்றும் மெடர்னிடி வேர் எல்லாம் கிடைக்கும். ஆகஸ்ட் 15ஆம் தேதி 'ஃப்ரீடம் சேல்ஸ்' என்ற பெயரில் ஒரே ஒருநாள் மட்டும் வருடாந்திர தள்ளுபடி விற்பனை, இந்த வருடமும் உண்டு. தீபாவளிக்கு குட்டீஸ் முதல் பாட்டீஸ் வரை அனைத்து தரப்பினருக்கும் பல இனிய சர்ப்ரைஸ்கள் காத்திருக்கின்றன'' என்று உற்சாகமாக விளக்குகிறார் நாயுடு ஹால் நய்ஹாவின் அரவிந்த் ராமசாமி.

**“எ**ங்கள் வாடிக்கையாளர்கள் புதிய ஹயர் பர்சேஸ் திட்டத்தின் கீழ் முதல் தவணைப் பணத்தைக் கட்டிவிட்டு, பொருளை எடுத்துச் செல்லலாம்; கிரெடிட் கார்டு பயன்படுத்திகூட தவணை முறையில் பொருட்கள் வாங்க வசதி செய்யப்பட்டிருக்கிறது. கிரெடிட் கார்டுக்கு சர்வீஸ் சார்ஜ் கிடையாது. எந்த வீட்டு வசதி சாதனப் பொருளை வாங்க விரும்பினாலும், பல்வேறு கம்பெனிகளின் தயாரிப்புகளும் ஒரே கூரையின் கீழ் எங்களிடம் உள்ளன. எனவே, பொருட்களின் டெக்னிகல் விஷயங்கள், விலை, செயல்பாடு, சர்வீஸ் வசதிகள் என பல்வேறு வகையிலும் ஒப்பிட்டுப் பார்த்து, மகிழ்ச்சியுடன் தேர்ந்தெடுக்கலாம். எக்ஸ்சேஞ் விற்பனையில், பழைய பொருளுக்கு மிக அதிகபட்ச விலை கொடுத்து வாங்கப் போகிறோம். இதனால் வாடிக்கையாளர்களுக்கு கூடுதல் லாபம் கிடைக்கும்'' என்கிறார் வசந்த் அன்ட் கோ வசந்த குமார்.

**“70** வருட பாரம்பரியம் கொண்ட ஜெயபாரதம் நிறுவனத்தின் சிறப்பே பாரம்பரியமும், நவீனமும் கலந்து இன்றைய தலைமுறையினரையும், முந்தைய தலைமுறையினரையும் திருப்திப்படுத்துவதுதான். எங்களது சிறப்பு அம்சமே வெரைட்டிதான்! காரணம், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு டேஸ்ட்! ஒவ்வொரு பட்ஜெட். சோபா, டைனிங்டேபிள், கம்ப்யூட்டர் டேபிள் தொடங்கி, மாடுலர் கிச்சன் வரை எதை எடுத்துக் கொண்டாலும் முப்பது, நாற்பது மாடல்கள் எங்களிடம் இருக்கும். இந்த சீசனுக்கும் சோபா, டைனிங்செட், கட்டில் என்று எல்லாவற்றிலும் புதிய டிசைன்கள், புதிய மாடல்களை அறிமுகப்படுத்தி இருக்கிறோம்!

எங்களது லேட்டஸ்ட் அறிமுகம் 'ரிலாக்ஸ் ஆன்' என்ற பெயரில் வந்துள்ள புதுரக சாய்வு நாற்காலி. அமெரிக்காவில் 'ரெக்லைனர்' என்று இந்த ரக சாய்வு நாற்காலிகள் மிகவும் பிரபலம். இந்தியாவில் முதலில் அறிமுகப்படுத்திய பெருமை எங்களுக்கு உண்டு. இதனை மூன்று நிலைகளில் அமைத்துக்கொள்ள முடியும். சௌகரியமான பொசிஷனில் வைத்து ஜாலியாக இளைப்பாறலாம்!'' என்கிறார் ஜெயபாரதம் (ஜே.எஃப்.ஏ) ஃபர்னிச்சர் நிறுவனத்தின் நாகராஜ்!

தொகுப்பு : **மௌலி**

expect it only from




# Freshness

(like the good old days)



booking open

*Presenting*

## *Hithagriha*

*" The Abode of well being"*

Rediscover the joy of spacious living in today's world of cramped environs, time and space. Welcome to Hithagriha, homes that bring joy to your family. It's a liberal dose of space that leads to Well-being.

16 beautifull homes with extra large rooms to fit in your dreams. 2 bedroom homes with 1651 /1627 Sqft and 3 bedroom homes with 1956 Sqft. Ample parking space.

Located in a pocket of un-polluted freshness, on Dr.Ambedkar Road, Velandipalyam – a cycling distance from NSR Road Saibaba Colony, facing Tamilnadu Agricultural University's farms and over-looking Marudamalai Hills.

**Phase II Compact Homes under development**

To feel the calm, call us today.

**PNR HOUSING PVT LTD**
#23, 3rd Floor, Viswa Apartments, Khalidas Road, Ramnagar, Coimbatore - 641 009.
Call : +919442626677 Ph : 2232440, 2236997 Fax : 2230375
E-mail : pnrhousing@gmail.com | www.pnrhousing.com




Architects
**Fowler & Fowler**
Coimbatore.




கடந்த வருடம் அமெரிக்கா சென்றிருந்தேன். என் மகன் கேட்ட புதினாவுக்காக ஷாப்பிங் சென்றேன். போகும்போதே என் பத்தினி தெய்வம் ''இடம் தெரியுமா? விசிட்டிங் கார்டு எடுத்துப் போங்க'' என்றாள். (தெருவோர மளிகைக்கடையும் கிடையாது. கண்ணில்பட்டவர்களிடம் விலாசம் விசாரிக்கும் வசதி எல்லாம் இந்தியாவில் மட்டும் தானே?)

'மாலில்' எல்லாப் பொருள்களும் வெளியில் வைக்கப்பட்டிருந்தன. புதினாவுக்கு பில் போட யாருமில்லை. ஏதோ எழுதி ஒட்டப்பட்டிருந்தது. அதை யார் பார்த்தார்கள்? புதினாவுக்குக் குறிப்பிடப்பட்டிருந்த விலையை வைத்துவிட்டு எடுத்துக் கொண்டேன். அடுத்த விநாடி தாட்பூட் போலீஸ்காரர் எதிரே ஆஜர்!''

''எங்கிருந்து வர்றீங்க?'' என்று கேட்க, நான் அலட்சியமாக என் பிள்ளையின் விசிட்டிங் கார்டைக் காட்டினேன்.

அதைப் பார்த்ததும், ''அங்கிருந்து நடந்தா வந்தீங்க?'' என்று ஆங்கிலத்தில் விசாரிக்க, அப்போதுதான் பார்த்தேன், அது எனது மகனின் பழைய நியூயார்க் விசிட்டிங் கார்டு. இப்பொழுது அவன் இருப்பதோ நியூஜெர்ஸியில்!

போலீஸ்காரர் சந்தேகத்துடன் பின்தொடர, நான் வீடு வந்து சேர்ந்தேன்.

# புதினாவுக்குப் போலிஸ் பாதுகாப்பு!



கலவரமான என் பிள்ளை, விஷயத்தை விளக்கியதும், போலீஸ்காரர் திருப்தியாகச் சென்றார்.

''அப்பா, ஊருக்குப் போனதும் தினப் பத்திரிகைக்குச் சொல்லி போடச் சொல்லுங்கள். 'போலீஸ் பாதுகாப்புடன் புதினா வாங்கிய இந்தியன்' என்று கொட்டை எழுத்துடன் போடுவார்கள்'' என்று கேலி செய்தான்.

நானோ அலட்சியமாக, ''போடா! நான்கு ரூபாய் பெறாத புதினாவுக்காக என் பின்னால் வந்தாரே! அங்கே என்னென்ன போச்சோ?'' என்றேன். ஆமாம், போர்டில் என்ன எழுதியிருந்தது என்று சொல்ல மறந்தேனே!

*'புதுப்பிக்க வேண்டிய சூழ்நிலையில் இரண்டு நாட்கள் மால் லீவு'*

- சு. சங்கரன், சென்னை - 39.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை. பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம். சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி. வேலு தெரு. மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 19 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்

# பெண்ணே...

எதிர்பார்ப்புகளை மிக அதிகமாக வளர்த்துக் கொள்ளக் கூடாது. எதிர்பார்ப்புகள்தான் சம்சார சாகரத்தின் சுனாமி என்று சொல்லிக் கொண்டிருந்தேன் இல்லையா?

எதிர்பார்ப்பு பற்றி ஒரு சின்ன உதாரணம்... நாற்பது வயது முதல் சர்க்கரை, ரத்த அழுத்தம், இருதயக் கோளாறு என்று கண்டறியப்பட்ட கணவனை, மனைவி அப்படி கவனித்துக் கொண்டார். கொழுப்பு, சர்க்கரை கண்ணிலேயே காட்டாது பக்குவமாக வேளா வேளைக்கு ஆரோக்கிய உணவளித்து, எண்பது வயது வரை நோய் நொடியின்றி பாதுகாத்தாள். எண்பது வயதில் அவர் இறந்த அடுத்த நிமிடம் அவளும் இறந்து இருவரும் சொர்க்கம் போனார்கள். எப்படிப்பட்ட தம்பதிகள் இவர்கள்...

சொர்க்கத்தின் தேவதை சொர்க்கத்தின் ஆனந்தமான பகுதிகளைச் சுற்றிக் காட்டிவிட்டு

சுய முன்னேற்றத் தொடர்

12

சுகிசிவம்



# நீ வாழ்க!

உணவுக்கூடத்தில் நூற்றுக்கணக்கான இனிப்புகளுக்கு மத்தியில் அவர்களை விட்டுவிட்டு வேண்டியதைச் சாப்பிடுங்கள் என்றது. ஐயாவோ முகம் சுளித்து, ''ஐயோ, நான் சர்க்கரை நோயாளி... எதையுமே நான் சாப்பிடக்கூடாது'' என்றார். களுக்கென்று சிரித்த தேவதை, ''அதெல்லாம் பூமியோடு சரி.. இங்கு உடம்பே இல்லாத போது சர்க்கரை நோயெல்லாம் கிடையாது... புகுந்து

விளையாடுங்கள்'' என்றது. ஐயாவுக்கு வந்ததே கோபம்... பல்லை 'நறநற' என்று கடித்தபடி மனைவியைப் பார்த்து, ''பாவி... நான் எப்பவோ மேல வந்திருக்கலாம். நாற்பது வருஷமா பத்தியச் சாப்பாடு போட்டு பூமியிலேயே என்னை அநாவசியமாக தங்க வைச்சிட்டியேடி பாவி...'' என்று புலம்பினார். கதை எப்படி இருக்கு? கற்பனைதான் என்றாலும் ஒவ்வொருவர் எதிர்பார்ப்பு இந்த மாதிரி இருந்தாலும் இருக்கும்... என்ன செய்வது?

சின்னச் சின்ன எதிர்பார்ப்புகள்தான் வாழ்வின் சிலிர்ப்புக்கே காரணம். சீதை ராமனிடம் மான் கேட்டாள்... இலட்சுமணன் பிடிக்கப் புறப்பட்டபோது 'ஏன் நீங்களே பிடித்துத் தர மாட்டீர்களா?' என்று தன் எதிர்பார்ப்பை வெளியிடுகிறாள். மகாபாரதத்தில் திரௌபதி, பீமனிடம் சௌகந்திகம் என்கிற ஒரு பூ கேட்கிறாள்... அந்த மகாமுரடன் மென்மையான மனத்துடன் அதற்காகக் காடு மேடு கடந்து குபேரப் பட்டணம் வரை போய் வருகிறான்... இத்தகைய சின்னச் சின்ன எதிர்பார்ப்புகள் இருப்பது சுகமே. ஆனால் நமது எதிர்பார்ப்பை எதிர்தரப்பு நிறைவேற்றாத போது, என்ன செய்யப் போகிறோம் என்பதுதான் வாழ்வின் சிக்கலான நுட்பமான பகுதி!

இந்த உலகில் எல்லோரது எல்லா எதிர்பார்ப்புகளையும் நீங்கள் நிறைவேற்ற முடியாது என்பதற்கு ஒரு சம்பவம் சொல்கிறேன்.

நான் ஒரு பள்ளியில் பேசப் போயிருந்தேன். அங்கு வெகு துடிப்புடன் இயங்கிக் கொண்டிருந்த ஒரு மாணவனிடம் எதிர்காலத் திட்டம் ஏதும் இருக்கும் என்ற எண்ணத்தில், ''எதிர் காலத்தில் நீ என்ன ஆவாய்?'' என்கிற இயல்பான கேள்வியைக் கேட்டேன். கொஞ்சமும் தயக்கமின்றி, ''பைத்தியம் ஆவேன் என்றுதான் நினைக்கிறேன்'' என்றான் அவன். ஏன் இப்படிச் சொல்கிறாய் என்றதும், ''அப்பா என்ஜினியர் என்கிறார்... அம்மா டாக்டர் என்கிறார்... பாட்டி கலெக்டர் ஆகு என்கிறார்... தாத்தாவோ வியாபாரி ஆகு... அதான் பணம் பண்ணும் வழி என்கிறார். நண்பர்கள் நடிகர் ஆகச் சொல்கிறார்கள். இவர்கள் எல்லோரது எதிர்பார்ப்பையும் நிறைவேற்றினால் நான் பைத்தியமாகத்தான் முடியும்'' என்றான்.

எல்லோரது எதிர்பார்ப்புகளையும் நிறைவேற்ற நினைத்தால் அது தற்கொலைக்குச் சமம். பிறரது எதிர்பார்ப்புகளை எல்லாம் நிறைவேற்றவே நாம் பிறந்திருக்கிறோம் என்று கருதினால், நாம் பலியாகிவிடுவோம். நமது எதிர்பார்ப்புகளைக் கண்டிப்பாக பிறர் நிறைவேற்ற வேண்டும் என்று எதிர்பார்த்தால், நாம் பிறரைப் பலிவாங்கி விடுவோம். மனித ஆடுகளை பலி கேட்கும் இந்த அரிவாள்களை, தயவுசெய்து கீழே போடுங்கள் என்கிறேன். பிறகு உங்கள் இஷ்டம்!

## இந்தச் சனியன் பிடித்த கழுதை

அளவுக்கு அதிகமான துன்பத்தை ஒரு பெண் அடைவது எப்போது தெரியுமா? மிகையான வேலை செய்யும் போது... இல்லை! உணவு உறக்கம் குறைந்து விடும்போது. இல்லை.. இல்லை... இல்லவே இல்லை. அவள் எப்போது அதிக வேதனை அடைகிறாள்... தெரியுமா? தன் வேலையைப் பிறர் குறை சொல்லும்போது. பழிக்கும் போது. விமர்சிக்கும்போது. அவள் நொறுங்கிப் போய் விடுகிறாள். வேலைகள் தருகிற வேதனையை விடவும் வேலை பற்றிய விமர்சனங்கள் தருகிற வேதனை அவளை அதிகம் துன்புறுத்துகிறது.

ஒரு விமர்சனம் தரமானதா இல்லையா என்று கண்டறிய வேண்டும். அதை விட்டு விட்டு வேதனைப்படுவது நல்லதல்ல என்று உணரவும், நாம் எப்படி

நடந்து கொள்வது என்பதை மட்டுமே நாம் முடிவு செய்ய முடியும். அப்படியிருக்க நம்மைச் சுற்றியுள்ள அனைவரும் எப்படி நடந்து கொள்ள வேண்டும், என்ன பேச வேண்டும் என்பதை நாம் எப்படி நிர்ணயிக்க முடியும். நம் கட்டுப்பாட்டில் இல்லாத ஒரு விஷயத்திற்காக நாம் ஏன் துன்பப்பட வேண்டும்? இந்தத் தெளிவு பெண்களுக்குப் பிறந்து விட்டால் உங்களால் புது வாழ்வு வாழ முடியும்.



## எனக்கெதற்கு? அது சாகட்டும்!

ஒரு பழைய கதை. முல்லா நசுருதின் என்கிற சூஃபி ஞானி பற்றிய கதை. முல்லா ஒரு கழுதை வளர்த்தார். ஒருநாள் அது ஒரு பெரிய பள்ளத்தில் விழுந்துவிட்டது. ''காழ்... காழ்...'' என்று உயிரே போவது போல் அது கத்தியது. தெருவே கூடி வேடிக்கை பார்க்கிறதே ஒழிய ஒருவரும் கழுதையை வெளியே தூக்கிவிடத் தயாராக இல்லை. ''இரவெல்லாம் இந்தக் கழுதை இப்படிக் கத்தினால் நாங்கள் எப்படித் தூங்க முடியும்... முல்லா... கழுதையைத் தூக்கி வெளியில் விடு'' என்று கூட்டம் கூச்சல் போட்டது. முல்லா அலட்சியத்துடன், ''இந்தச் சனியன் பிடித்த கழுதை எனக்கெதற்கு.. அது சாகட்டும்... உங்களுக்கு அது கத்துவது பிடிக்கவில்லை என்றால் ஆளுக்கொரு சட்டி மண்ணை எடுத்து அதன் தலையில் போடுங்கள். புதைந்து போகட்டும் அது'' என்றார். வெட்டிய குழியில் இருந்து வெளியே குவிந்திருந்த மண்ணை எடுத்து ஆளுக்கொரு சட்டியாக கூட்டம் வெறித்தனத்துடன் கழுதையின் மேல் கொட்டியது.

அந்தக் கழுதை ஒரே ஒரு காரியத்தைப் பிடிவாதமாகச் செய்தது. சாகக் கூடாது என்ற வைராக்கியத்துடன், ஒவ்வொரு முறையும் தன் மேல் விழுந்த மண்ணைத் தலையை ஆட்டி உதறிக் கீழே தள்ளியது. பள்ளம் கிட்டத்தட்ட நிரம்பிய தும் தாவிக் குதித்து மேலே ஏறி கழுதை ஓடத் தொடங்கியது.

என்ன ஆச்சர்யம் பார்த்தீர்களா? தன் மீது ஒருவர் புழுதி வாரித் தூற்றும் போது அதைப் பயன்படுத்திக் கொண்டே மேலே வர வேண்டும் என்று ஒரு கழுதை அறிந்து வைத்திருக்கிறது. ஆனால் எத்தனை மனிதருக்கு இந்தத் தெளிவு இருக்கிறது. தன் மீது பிறர் புழுதி வாரித் தூற்றும் போது அதிலேயே புதைந்தல்லவா போகிறார்கள்? யோசியுங்கள்... பிறரது நியாயமற்ற விமர்சனங்களை அலட்சியப் படுத்துங்கள்... கோபப்படாதீர்கள்... அழுது புலம்பாதீர்கள்... கூனிக்குறுகி புதைந்து போகாதீர்கள். அதை அப்படியே உதறி விட்டு அடுத்த வேலையைக் கவனியுங்கள்... அதுதான் வாழும் கலை... சரியாக வாழும் கலை.

ஒரு விஷயம்... நம் மீது வீசப்படும் விமர்சனங்களில் உள்ள நியாயங்களைக் கண்டிப்பாகக் கவனத்தில் கொள்ள வேண்டும். அதே சமயம் அதில் உள்ள குரோதம், பகை, உள்நோக்கம் இவற்றை நினைத்து நாம் மனம் வாடக் கூடாது. அலட்சியப்படுத்த வேண்டும்... என்னைப் பற்றியே ஓர் உதாரணம் சொல்லட்டுமா?

(தொடரும்)




எங்களுக்குத் திருமணமான ஒரே மாதத்தில் என் கணவரது ஆய்வுப் பணிக்காக ஜப்பான் செல்ல வேண்டியதாயிற்று. அங்கு சென்று இறங்கியதுமே புரிந்தது; ஜப்பானிய மொழி தெரியாவிட்டால் விழி பிதுங்கி நிற்க வேண்டியதுதான் என்று.

முதல் நாளே, டிபார்ட்மெண்ட் ஸ்டோர் சென்று அங்கிருந்த பெண்ணிடம் 'மில்க்' என்று கேட்டு, அவர் காண்பித்த அட்டை



# "சொல்லவே இல்ல?"

டப்பாவை, தெளிவாக பசு மாட்டின் படத்தைப் பார்த்து உறுதிசெய்து வாங்கி வந்து காய்ச்சினால் திரிதிரியாய்ப் போனது. 'கெட்டுப் போய் விட்டதா?' என்று கவலையுடன் சுவைத்துப் பார்த்தபோதுதான் புரிந்தது அது லஸ்ஸி!

இது ஒன்றுமில்லை எனும்படி இன்னொரு கூத்து நடந்தது.

பக்கத்து வீட்டில் ஒரு பங்களாதேஷ் குடும்பம் தங்கியிருந்தது நாங்கள் சென்ற இரண்டு வாரங்களில் அவர்களுக்கு அழகான பெண் குழந்தை பிறந்தது. நம்ம ஊர் முறைப்படி ஒரு டிரஸ் எடுத்துக் கொண்டுபோய்ப் பார்த்துவிட்டு வரலாம் என்று ஷாப்பிங் புறப்பட்டோம்.

இரண்டு மணி நேரம் தேடியும் எங்களுக்குப் பிடித்தது போல் எதுவும் அமையவில்லை, அமைந்தால் விலை அதிகம். இதில் மொழிப் பிரச்னையும் சேர்ந்து கொண்டது. ஒருவழியாக ஒரு கடையில் கண்ணாடி ஷோகேஸில் இருந்த டிரஸ் மிகவும் பிடித்துப்போகவே, விலை சற்று அதிகம் என்றாலும் வாங்கிவிட்டோம். பெரிய சாதனை செய்து விட்ட பெருமிதம் எங்களுக்கு!

அந்த நேரம் அங்கு வந்த தமிழ் நண்பர் ஒருவர், ''என்ன, அதற்குள் நாய்க் குட்டி வாங்கியாச்சா?'' என்று எங்களைக் கேட்க, நாங்கள் ஒருவரையொருவர் பார்த்து விழித்தோம்.

''வெள்ளை நாய்க்குட்டி என்றால் இந்த டிரஸ் ரொம்ப பொருத்தமாயிருக்கும்'' என்று அவர் சொன்னதும் எங்களுக்கு அதிர்ச்சி.

''இங்க நாய்க்குட்டி, பூனைக் குட்டிக்கெல்லாம் டிரஸ் போட்டு அழகு பார்ப்பாங்களா.. சொல்லவேயில்லே?'' என்று வடிவேலு பாணியில் சமாளித்து வைத்தோம்!

- கல்பனா அரவிந்தன், புதுதில்லி.

சாதாரண பெண்களே, விதவிதமாய் ஷாப்பிங் செய்யும் போது, இந்த வி.ஐ.பி பெண்கள் எப்படி ஷாப்பிங் செய்வார்கள்? கேட்ட உடனேயே உற்சாகமாக சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள்!



• ஜெயஸ்ரீ சுந்தர்

# வி.ஐ.பி. ஷாப்பிங்!

புஷ்பா கந்தசாமி (நிர்வாக இயக்குநர் கவிதாலயா) :

“மனசு கொஞ்சம் டல்லா இருக்கிற மாதிரி தோணுச் சின்னாவே ஷாப்பிங் கிளம்பிடு வேன். உற்சாகமா இருந்தாலும் அப்படித்தான். ஷாப்பிங்னாலே என் சாய்ஸ் செடிகள்தான். எல்லாரும் ஆடி மாதம் துணியெடுக்கப் போனா நான் செடிகள் வாங்கப் போயிடுவேன். அக்னி நட்சத்திரம் முடிஞ்ச அந்த மாதம் கிளைமேட் நல்லாவும் இருக்கும். 'ஆடிப்



• ராஜஸ்ரீ இறையன்பு தம் குடும்பத்துடன்..




பட்டம் தேடி விதை'னு சொல்வாங்க. அதனாலேயே ஆடி மாசம்னா செடிகளை ஷாப்பிங் செய்வேன். அப்புறம் கைவினைப் பொருட்கள் சம்பந்தப்பட்ட கடைக்குப் போறது பிடிக்கும். துணி எடுக்கிறதா இருந்தா பக்கத்தில இருக்கிற கடைக்கே போயிடுவேன். கூட்டமும் இருக்காது. கார் பார்க் செய்யவும் வசதியா இருக்கும்.



■ லதா ராவ் ராஜ்கமல்



■ புஷ்பா கந்தசாமி

வெளிநாடு போனா மட்டும் என் பொண்ணுக்காக 'தன்னம்பிக்கை' புத்தகம் வாங்கிட்டு வருவேன். எங்க போனாலும் என்னோட ஷாப்பிங் டைம் 10 நிமிடம்தான்.''

முனைவர் கு.ம. இராமாத்தா
(தலைவர் தமிழ்நாடு மகளிர் ஆணையம்)

**''ஷா**ப்பிங்னாலே புத்தகம் வாங்கறதுதான். மற்ற தேவைகளை என் கணவரும், மகனும் பார்த்துக்குவாங்க. புத்தகக் கண்காட்சியில் மட்டும் தவறாமல் என்னைப் பார்க்கலாம். நல்ல படி நேரத்தில் ஷாப்பிங் செய்வதில் எனக்கு விருப்பமில்லை. நான்கு யானை வாங்கினால் ஒரு யானை இலவசம்னு சொன்னால் வாங்குவோமா? சாலையோரக் கடையில் வாங்கும் 10 ரூபாய் கத்தியை விட, ஏசி கடைகளில் 65 ரூபாய் கொடுத்து வாங்கும் கத்திதான் நன்றாக வெட்டும் என்று நினைப்பது மக்களின் மனோபாவம். இரண்டு கத்தியுமே கூர்மையானது என்று சிந்தித்துப் பார்த்தால் தெரியும். கடையின் விளம்பரப் படுத்தும் கட்டணத்தைக் கூட வாங்குவோரின் தலையில் கட்டுவது மக்களுக்குத் தெரியவில்லை. வாங்கிய பொருளின் விலையில் 10% கூட்டி விற்பதுதான் வியாபாரி

களின் வழக்கம். அதனால் தள்ளுபடி விலையில் எந்தப் பொருட்களையும் நான் வாங்குவதில்லை. புத்தகம் தவிர!''



* கும. இராமத்தா

ஜெயஸ்ரீ சுந்தர்
(செய்தி வாசிப்பாளர்) :

**ஷா**ப்பிங் போகணும்னா பர்ஸ் நிறைய பணமும், கார் நிறைய பெட்ரோலும் கண்டிப்பா இருக்கணும். நான் புடவைகள்தான் அதிகமா ஷாப்பிங் செய்வேன். மனசுக்குப் பிடிச்சா பார்த்தவுடனே எடுத்திடுவேன். இல்லேன்னா நூறு புடவையானாலும் புரட்டிப் போட்டு பிடிச்சாதான் எடுப்பேன். என் குழந்தைகளுக்கு மாதம் ஒரு தடவையாவது ஷாப்பிங் செய்யணும். வீட்டுக்குப் பக்கத்திலேயே பாண்டி பஜார்ங்கிறதால கிளிப், ஸ்டிக்கர், வளையல்னு அவ்வப்போது வாங்கிட்டே இருப்பாங்க. அதனால குறிப்பிட்ட மாதம்தான் ஷாப்பிங்னு சொல்லவே முடியாது. அவசியம்னா போய் வாங்குவோம்னு சொல்றதை விட வெளியே வரும்போதெல்லாம் ஏதாச்சும் ஒரு பொருளை ஷாப்பிங் செய்திட்டுத் தான் போவோம்.



* நளினி சரவணன் :

நளினி சரவணன் :
(செயல் அதிகாரி, லீ ராயல் மெரிடியன்)

**ஷா**ப்பிங்னு நீங்க சொன்னதுமே எனக்குப் போகணும் போல இருக்கு. கோபமா, சந்தோஷமா, சாந்தமா எப்படியிருந்தாலும் ஷாப்பிங் போயிடுவேன். என் பொண்ணுக்கும், எனக்கும் ஒரே மாதிரியான கலர்லதான் துணி எடுப்பேன். ஒரே கடைக்குப் போகாம புதுப்புது கடையா போவேன். முக்கியமா சின்னச் சின்னக் கடைகளுக்குத்தான் அதிகமா போவேன். அதிக துணியை எடுத்துக் காட்டுவதோடு, கூட்டமும் அதிகமிருக்காது. ஆனால் முக்கியமான விஷயம் ஷாப்பிங் போகும்போது அண்ணன், தம்பி, அப்பா, கணவன் என ஒரு ஆண் மகனையும் அழைத்துச் செல்லக் கூடாது. அவர்களுக்கும் எரிச்சல், நமக்கும் தொல்லை. என் ப்ரெண்ட்ஸ், என் பொண்ணுன்னு யாருக்கு ஷாப்பிங் செய்தாலும் ரிலாக்ஸ்டா செய்வேன். அப்பதான் ஷாப்பிங்கை சிறப்பா செய்ய முடியும்.

**உஷா சுப்ரமணியம் (எழுத்தாளர்) :**

"பேஷனுக்காகவோ, ஸ்டைலுக்காகவோ ஷாப்பிங் போகாம அவசியத்திற்காக மட்டும் ஷாப்பிங் போவேன். கடைக்குப்



* உஷா சுப்ரமணியம்

போறதுக்கு முன்னாடி என்னென்ன கலரில் புடவை வாங்கணும்னு முடிவு செய்துப்பேன். வேற கலரைப் பார்க்கவே மாட்டேன். குறைஞ்சது 10 நிமிஷத்துல ஒரு புடவையை செலக்ட் பண்ணிடுவேன். அதிக விலை கொடுத்து புடவை வாங்க மாட்டேன். என்னோட பொண்ணு கல்யாணத்துல அவளுக்கே நாலாயிரம் ரூபாய் மதிப்பில்தான் புடவை வாங்கிக் கொடுத்தேன். ஆனால் புடவையின் நிறம் மட்டும் பளிச்னு இருக்கிற மாதிரி எடுப்பேன். தவிர, பெரிய பெரிய மால்ல ஷாப்பிங் செய்யப் பிடிக்கும். சும்மா சுத்தி சுத்தி வருவேன். அங்க வர்ற ஆட்களைப் பார்க்க ஆர்வமா இருக்கும். ஆனா எங்க போனாலும் புதுமையா, அழகா இருக்கிற சின்னப் பொருட்களை வாங்கிடுவேன். அதே போல சமையலறையை அலங்கரிக்கிற அழகுப் பொருட்களையும் வாங்குவேன்.

**ராஜஸ்ரீ இறையன்பு (இல்லத்தரசி) :**

**ஷா**ப்பிங்கா எனக்கு மூணு விஷயம் பிடிக்கும். இயற்கைப் பொருட்கள், குழந்தை போல இருக்கிற செடிகள், மென்மையான காட்டன் புடவைகள்.

எந்த ஊருக்குப் போனாலும் அந்த ஊர் நினைவா அங்கிருக்கிற செடியை வாங்கிட்டு வருவேன். செடிக்கும், நமக்கும் இருக்கிற அழகான உறவு அதுகூட பழகினாத்தான் தெரியும். வித்தியாசமான இயற்கைப் பொருட்களைப் பார்த்தவுடனேயே வாங்கிடுவேன். எங்க வீட்ல அழகுக்காக வச்சிருக்கிற மரம் இயற்கையாவே மான் மாதிரி இருக்கும். இன்னொரு மரத்துல மூக்கு போல வளைஞ்சிருக்கும். இதெல்லாம் நான் ஷாப்பிங்கின் போது பார்த்துப் பார்த்து வாங்கியவை. எனக்கு வீட்டு உள் அலங்காரத்துல, தோட்ட வேலைகள்ல ஆர்வம் அதிகம். அது சம்பந்தப்பட்ட ஷாப்பிங் செய்வதுதான் அதிகம். அப்புறம் டெரகோட்டா பானைகளைப் பார்த்தா ஆசையா வாங்குவேன். துணிகளுக்கான ஷாப்பிங் என்பது தேவைப்பட்டால்தான்."

**லதா ராவ் ராஜ்கமல் (சின்னத்திரை நடிகை) :**

**நா**ங்க இரண்டு பேருமே ஒரே கலர்தான் டிரெஸ் போடுவோம். அதனால் அடிக்கடி ஷாப்பிங் போவோம். பெரும்பாலும் பாண்டிபஜார் சாலையோரக் கடைகள்தான். வழக்கமா பெண்கள்தான் ஷாப்பிங் செல்ல ஆர்வமா இருப்பாங்க. ஆனால் என் கணவர்தான் என்னை வெளியே அழைச்சிட்டுப் போவாரு. செலக்ஷனும் அவருடையதுதான். சமீபத்தில் மலேஷியா போன போதுதான் ஆசையா ஷாப்பிங் செய்தேன். எப்ப ஷாப்பிங் போனாலும் பட்ஜெட்டை மனசில வச்சிட்டுத்தான் பண்ணுவேன். அளவுக்கு மீறி செலவு செஞ்சா நாமதானே அவஸ்தைப்படணும்?

தொகுப்பு : **தனலக்ஷ்மி சுந்தர்**

## வாசகர் கருத்து

# இது தேவையா?

'வீண் விரயத்தைத் தவிர்க்கலாமே' என்ற தலைப்பில் சகோதரி ரங்கமணி எழுதிய கட்டுரையைப் படித்தேன். அதே போல திருமணங்களில் இன்னொரு பழக்கமும் உள்ளது. இருதரப்பினரும் மற்றவர்களுக்குத் துணி எடுத்துக் கொடுக்கும்



பழக்கம். அதையும் தவிர்ப்பது நலம்.

இந்தக் காலத்தில் துணிகள், வித விதமாகவும் மிகவும் மலிவாகவும் கிடைக்கின்றன. எல்.கே.ஜி. வாண்டு முதல், எண்பது வயது தாத்தா வரை ஆளுக்கொரு டேஸ்ட் உள்ளது. நாம் யாருக்காவது பிரியத்துடன் துணி எடுத்துக் கொடுக்க அவர்களோ அதை அப்படியே மடித்து வைத்து, வேலைக்காரிக்குக் கொடுக்க, அதை அவள் கட்டி வருவதை நாம் நேரில் பார்க்க வேதனை + கோபம்தான் மிஞ்சும்.

''சே! நாம் எவ்வளவு கஷ்டப்பட்டு வாங்கிய துணியை அலட்சியமாகத் தூக்கி வேலைக்காரிக்குக் கொடுத்து விட்டார்களே?'' என்று நினைத்து நாம் அவர்களிடம் கேட்க, ''ஆமாம், அந்தக் கலர் காடியாக இருக்கு. எனக்கு லைட் கலர்தான் பிடிக்கும். உன்னை யார் இதை வாங்கச் சொன்னா? இந்த மெட்டீரியல் எல்லாம் நான் கட்டவே மாட்டேன்'' என்று அடுக்குவார்கள். நம்மை உயர்த்துவதாகக் காட்டிச் செய்யும் இந்த அன்பு உபசாரம், மனஉளைச்சலில் ஆழ்த்திவிடும். இது தேவையா? பணமாகக் கொடுத்து விட்டால் பிரச்னை இல்லையே.

அதே போல மணமக்களின் ரசனையோ, விருப்பமோ அறியாமல் நகை வாங்குதலும் கூடாது. ''கல் வைச்ச ஜிமிக்கியா?'' என்று மணப்பெண் முகம் சுளித்தாலோ, இதென்ன... மரவட்டை மாதிரி செயின்!'' என்று மாப்பிள்ளை கமென்ட் அடித்தாலோ, மனம் புழுங்கிப் போகும்.

- கே. கீதா, சேலையூர்.



## ஆஹா 50!

குளியல் மற்றும் கழிவறைகளைச் சுத்தம் செய்ய சிரமப்படுபவர்கள், தினம் ஒரு வரிசை என டைல்ஸ்களைக் கழுவிச் சுத்தம் செய்து வந்தால், சிரமம் தெரியாது. ஒரே வாரத்தில் முழு அறையும் சுத்தமாகிவிடும்.

- எம். ராஜேஸ்வரி, கும்பகோணம்.



# பாரம்பரிய ஜோதிடர்

துயரத்தின் பிடியிலிருக்கும் பலரும் இவர் பார்வை பட்ட பிறகு வாழ்க்கையின் உயர்ந்த நிலையை அடைந்து விடுகின்றனர்.

திருமணத்தடை, குழந்தையின்மை, கணவன் மனைவி பிரிவு, கல்வித் தடை, வேலையின்மை, கொடிய நோய்கள் போன்றவற்றை எளிமையான பரிகாரம் மூலம் இவர் தீர்க்கும் விதம் வியக்கத் தக்கது.

ஜாதகம் கணிப்பதிலும், குழந்தைகளுக்கு அதிர்ஷ்டப் பெயர் சூட்டுவதிலும் வல்லவர் இவர்.

வெளியூர் அன்பர்கள் ஒரு ஜாதகத்தின் மூன்று கேள்விகளுக்குப் பதில் பெற ரூ.**150/-MO (or) D.D** அனுப்பவும். ஜாதக நகல் **+** ரூ.**5** அஞ்சல் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட கவர் இணைக்க வேண்டும். ஜாதகம் இல்லாதவர்களுக்கு எங்கள் பிரசன்ன முறையில் பதில் பெறலாம்.

## Prof. S. பஞ்சநாதன்

**வாக்குச் சித்தர் ஜோதிட நிலையம்,** எண். 8/27, 3rd மெயின்ரோடு, தில்லை கங்கா நகர், நங்கநல்லூர், சென்னை 600 061 தொலைபேசி - **(044) 22670573 , 9444453693**

ரகசியங்கள் ரகசியமாய் இருக்கும். ♦ தொலைபேசி மூலம் முன் அனுமதி பெற்று வருக!

**SATISFACTION GUARANTEED**

---

ஸ்ரீரஸ்து. சுபமஸ்து. ஸ்ரீ வெங்கடேச ப்ரசன்ன

## ஜெகத்குரு ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் ஆசியுடனும், ஆக்ஞையின்படியும் கீழ்கண்ட யாத்திரைகளை அறிவிக்கிறோம்.

1. 14.07.2008 முதல் 01.08.2008 வரை புதுடெல்லி, அக்ஷர்தாம், அமிர்தசரஸ், குருக்ஷேத்ரம், சிந்தாபூரணி, ஜுவாலாமுகி, வஜ்ரேஸ்வரி, நைனாதேவி, நங்கல், வைஷ்ணவிதேவி, அமர்நாத் உள்ளிட்ட யாத்திரை.
2. 04.08.2008 முதல் 14.08.2008 வரை அலகாபாத், காசி, கயா, பூரி, புவனேஸ்வர் உள்ளிட்ட யாத்திரை.
3. 21.08.2008 முதல் 09.09.2008 வரை.
   8.12.2008 முதல் 25.12.2008 வரை. பம்பாய் பண்டரீபுரம், ஷீர்டி கோலாப்பூர் சனிசிங்கனாப்பூர், சோலாப்பூர், 7 ஜோதிர்லிங்கம் மற்றும் அஷ்ட விநாயகர் உள்ளிட்ட யாத்திரை.
4. 03.09.2008 முதல் 09.09.2008 வரை ஓம்காரேஸ்வர், மஹாகாளேஸ்வர், மாஹீஷ்மதி, உஜ்ஜயின் யாத்திரை.
5. 11.09.2008 முதல் 30.09.2008 வரை. பத்ரிநாத், கேதார்நாத், கங்கோத்ரி, யமுனோத்ரி, கோமுக், புதுடெல்லி, அக்ஷர்தாம் உள்ளிட்ட சார்தாம் யாத்திரை.
6. 18.10.2008 முதல் 5.11.2008 வரை அலகாபாத் சித்திரக்கூடம் நைமசாரண்யம், அயோத்தியா, காசி, கயா உள்ளிட்ட தீபாவளி நிஜ கங்காஸ்நான காசி யாத்திரை.
7. 14.112008 முதல் 26.11.2008 வரை பூரி, புவனேஸ்வர், கொல்கத்தா, வைத்தியநாதம், ஒளரா உள்ளிட்ட சாமந்தியா யாத்திரை.

**ஒரு குரூப்பாக வரும் அன்பர்களுக்கு காண்ட்ராக்ட் முறையில் அவர்கள் விரும்பும் இடங்களுக்கு அவர்கள் விரும்பும் தேதியில் யாத்திரை செய்து தரப்படும்.**

குறிப்பு : 90 நாள்கள் முன்னதாக டிக்கட் ரிசர்வ் செய்ய வேண்டியிருப்பதால் அதற்கும் முன்னதாக ரிசர்வ் செய்துகொள்வது நல்லது.

தேதி வாரி அட்டவணை மற்றும் மேலும் விவரங்களுக்கு

## ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்

1, பூசுப் லேன், அருணாசலம் தெரு, சேப்பாக்கம், சென்னை-5. Phone : Off : 28516845 Resi : 28516957 STD : 044

# கடவுள் - நாம் - கேள்விகள்!

★ ''உன் வீடு எத்தனை சதுர அடி கொண்டது?'' என கடவுள் கேட்க மாட்டார். மாறாக, ''உன் வீட்டிற்கு எத்தனை பேரை இன்முகம் கொண்டு வரவேற்றாய்?'' என வினவுவார்.

★ ''உன் வார்ட்ரோபில் எத்தனை துணிமணிகள் உள்ளன?'' என கேட்கவே மாட்டார். ஆனால் ''தேவைப்பட்டவர்களுக்கு அதிலிருந்து கொடுத்தாயா?'' என கேட்பார்.

★ உன்னுடைய அந்தஸ்து பற்றிக் கேட்க மாட்டார். ஆனால் சமூகத்தில் உன்னை மதிக்கிறார் போல ஒழுக்கத்துடன் நடந்து கொண்டாயா என கேட்கவே செய்வார்.

★ ''உன் மாத வருமானம் எத்தனை? மிக அதிக அளவில் சம்பாதித்தது எப்படி?'' என கேட்க மாட்டார், ''அந்த அளவு சம்பாதிக்க என்னவெல்லாம் ஃபிராடு செய்தாய்?'' என தாராளமாகக் கேட்பார்.

★ ''அலுவலகத்தில் ஓவர்டைம் செய்தாயா?'' என கேட்க மாட்டார். ஆனால் ''உன் குடும்பத்திற்கெனவும் உன் மீது அன்பு செலுத்துவர்களுக்காகவும் மனதார உழைத்தாயா?'' என விசாரிப்பார்.

★ ''உனக்கு எத்தனை ப்ரமோஷன் கிடைத்தது?'' என வினவ மாட்டார். பதிலாக ''எத்தனை பேருக்கு உயர்வு கொடுத்திருக்கிறாய்?'' என நெத்தியடியாகக் கேட்பார்.

★ ''உனக்கு எத்தனை நண்பர்கள்?'' என கடவுள் கேட்க மாட்டார். ஆனால் ''எத்தனை பேருக்கு நீ உண்மையான நண்பனாக இருந்திருக்கிறாய்?'' எனக் கேட்பார்.



★ ''உன்னுடைய நிறமென்ன?'' என்று கடவுள் கேட்க மாட்டார். ஆனால் ''உன்னுடைய குணமென்ன?'' என்று கேட்பார்.

★ ''உன்னுடைய பதவியின் பெயரைக் கேட்க மாட்டார். ஆனால் அந்தப் பதவியில் எளியவர்களிடம் இனிமையாக நடந்து கொண்டாயா?'' எனக் கேட்பார்.

★ ''என் கோயிலுக்கு எத்தனை முறை வந்தாய்?'' என கடவுள் கேட்க மாட்டார். ''எத்தனை முறை உன் பெற்றோரின் மனம் மகிழச் செய்தாய்?'' எனக் கேட்பார்.

– லதா சேகர், நவி மும்பை

## அதிராமல் துவைக்கும்!



ஆஹா 50!

வாஷிங்மெஷினில் 'டிரையரை' உபயோகிக்கும்போது வாஷிங் டப்பிலும் தண்ணீர் இருந்தால் அனாவசியமான அதிர்வுகள் தடுக்கப்படும். மிஷின் எளிதில் பழுதடையாது.

- ஏ. வாராகி, திருவத்திபுரம்.

## இவை எல்லாமே ஆஹா 50! தான்!

தோசை மிளகாய்ப் பொடி, ஊறுகாய்க்கான மிளகாய்ப் பொடி ஆகிய வற்றுக்குக் காய்ந்த மிளகாய் போட்டு மிக்ஸியில் அரைக்கும்போது சரியாக அரைபடாது. முதலில் மிளகாயுடன் சிறிது கல் உப்பு சேர்த்து அரைத்தால் நன்கு அரைபடும். பிறகு, அதனுடன் மற்ற பொருட்களைச் சேர்த்து அரைக்கலாம்.

- க. வேடியப்பன், கும்மிடிப்பூண்டி.

கண்களில் தூசி விழுந்து விட்டால் சிறிது வெண்ணெயை மை இடுவது போல் இட்டால் கண் சூட்டில் வெண்ணெய் உருகி தூசியுடன் வெளிவந்து விடும்.

- ஆர். சாருலதா, சென்னை - 33.

வெயில் காலத்தில் குழந்தைகளுக்கு இறுக்கமான ஃபிராக், பாலியஸ்டர் டிரஸ், பாண்ட் போட்டு பஸ்ஸிலும், நெரிசலிலும் அழைத்துச் செல்லாதீர்கள். குழந்தை வியர்வையிலும், வேதனையிலும் வாடும். காற்றோட்டமான காட்டன் உடைகளையே பயன்படுத்துங்கள்!

- வி.எல்.என். ராமமூர்த்தி, சென்னை - 64.

ஊசியில் நூல் கோத்து அதை 'கட்' பண்ணாமல் அப்படியே வைத்திருந்தால், பார்வை சற்று குறைந்தவர்கள் தேவைக்கேற்றபடி வெட்டிக் கொண்டு தைக்க வசதியாக இருக்கும்.

- எம். அபர்ணா, சென்னை - 4.

மோர்க் குழம்பு செய்யும்போது மாம்பழத் துண்டுகளை இட்டு ஒரு கொதி வந்ததும் இறக்கவும். மிதமான இனிப்புச் சுவையுள்ள மோர்க் குழம்பு கிடைக்கும்.

- வே. தனசேகர், கும்மிடிப்பூண்டி.

வத்தல் குழம்பு, புளிக்காய்ச்சல் செய்யும்போது கொதித்தபின்னர் நெல்லிக்காயளவு வெல்லம் போட்டால் சுவை அதிகரிக்கும்.

- கே. ராகவி, திருவண்ணாமலை.

தரையில் பிளாஸ்டிக் கவரோ, பால் கவர் கட் செய்த துண்டோ கீழே கிடந்தால், மொசைக், டைல்ஸ் தரையில் அதன் மீது காலை வைக்கும்போது வழுக்கிவிடும். அலட்சியப்படுத்தாமல் உடனே அகற்றவும்.

- ஆர். பார்வதி, சென்னை - 53.



இதைப் பாருங்க... "எஸ்.எஸ். இராஜேந்திரனும் நானும் நடிச்ச 'ஆலயமணி' ஸ்டில் இது! எனக்கு எஸ்.எஸ்.ஆரிடம் மிகவும் பிடிச்சது அவரோட அட்சரம் பிசகாத தமிழ் உச்சரிப்பு. தமிழை, தமிழ் போல மிக அழகாகப் பேசுவார். 'மைக்'கே தேவையில்லை. அவருடைய கம்பீரமான குரல் நாடக அரங்கம் முழுக்க தெளிவாக ஒலிக்கும்.

'ஓடி விளையாடு பாப்பா', 'பிரெசிடென்ட் பஞ்சாட்சரம்', 'மணப் பந்தல்' 'ஆலயமணி', 'பாசமும் நேசமும்', 'குலவிளக்கு' இப்படி எஸ்.எஸ். ஆருடன் ஜோடி சேர்ந்து நடித்தவை ஏராளம்.

அன்றும், இன்றும், என்றும் எனக்கு எஸ்.எஸ்.ஆரிடம் நான் கண்டு வியக்கும்

* 'ஆலயமணி' படத்தில்...

# தொட்டால் பூ மலரும்

ஒரு குணம், அவரது சிரித்த முகம். துளிக்கூட கோபமே வராது. எப்பவும் ஜோக் அடிச்சுக்கிட்டு, சிரிச்சுக்கிட்டே இருப்பார். இத்தனைக்கும் அவர் அரசியல்ல வேற இருந்தார். அப்பக் கூட எதுக்கும் டென்ஷன் ஆக மாட்டார். அவருடைய சுத்தத் தமிழ் முன்னால், என்னுடைய கொஞ்சல் தமிழ் என்ன கிண்டலுக்கு உள்ளாகியிருக்கும் என நீங்களே ஊகிச்சுக்குங்க!

''கூடி வாழ்ந்தால், கோடி நன்மை!''னு பொதுவா சொல்வாங்க இல்லையா? நான் அதை 'கூடி வாழ்ந்தால் கோடி குழந்தைகள்'னு தமாஷ் செய்வேன். என் மழலைப் பேச்சை மிகவும் ரசிப்பார்.

அவர் என்னை, 'சரோஜா'னு கூப்பிடுவார். நான் ''எஸ்.எஸ்.ஆர்'' என்பேன். சில சமயம் சிவாஜி அழைப்பது போல ''ராஜு'' என்பேன்.

'ஆலயமணி' படம் ஒரு கிளாஸிக் ஹிட்! கதைப்படி, நானும் எஸ்.எஸ்.ஆரும் காதலிப்போம். அது தெரியாத சிவாஜி, என்னைக் காதலிப்பார். இதற்கு நடுவே விஜயகுமாரி, எஸ்.எஸ்.ஆரைக் காதலிப்பார். இந்த மாதிரியான முக்கோணக் காதல் கதைகளில், நான்தான் எப்பவும் சிக்கல்ல மாட்டிக்குவேன். என் சினிமா ராசி அப்படி!

'ஆலயமணி'யின் முதல் பாதி முழுக்க எனக்குச் சுட்டி கேரக்டர்; பின் பகுதி சோகச் சித்திரம்.

'கண்ணான கண்ணனுக்கு அவசரமா!' பாடல் காட்சியை ஏற்காட்டு மலைப் பாதையில் படமாக்கினார்கள். எஸ்.எஸ்.ஆர். கார் ஓட்டிக் கொண்டிருப்பார். நான் திடீரென்று காரின் டிக்கியிலிருந்து வெளிப்பட்டு, பின் சீட்டில் குதித்து, பிறகு அங்கிருந்து முன் சீட்டுக்குத் தாவி, எஸ்.எஸ்.ஆருக்கு, ஸ்வீட் சர்ப்ரைஸ் கொடுத்தபடியே பாடுவேன்.



* 'பிரெசிடென்ட் பஞ்சாட்சரம்' படத்தில்...

மேற்கூரையில்லாத ஓபன் டைப் கார் அது! ஹேர்பின் வளைவுகள் மிக்க அந்த மலைப்பாதையில், ஓடுகின்ற காரில், தாவிக் குதிப்பதை எல்லாம் மிக அநாயாசமாகச் செய்திருக்கிறேன். இப்போது அந்தப் பாடல் காட்சியைப் பார்த்தாலும், ''நானா அது?'' என்று ஆச்சரியப்படத் தோன்றுகிறது.

'ஆலயமணி' படத்தில் விஜயகுமாரி நடித்திருந்

6

தாலும், அந்த ஷெட்யூலில் அவருக்கான காட்சிகள் இல்லை என்பதால், விஜய குமாரி ஏற்காட்டுக்கு வரவில்லை. ஆனால் அடிக்கடி சென்னையிலிருந்து ட்ரங்கால் செய்து கணவரை, நலம் விசாரித்துக் கொள்வார்.

நான் உடனே, ''கவலைப்படாதே விஜி! உன் புருஷனை இங்க எல்லாரும் நல்லா கவனிச்சுக்கறோம்!'' என்பேன்.

சிவாஜி - எஸ்.எஸ்.ஆர் இருந்தால், அந்த இடமே பிரகாசமாகி விடும். வெடிச் சிரிப்புகளுக்குப் பஞ்சமேயிருக் காது. சிவாஜி, கமலாம்மா, எஸ்.எஸ்.ஆர்., நான்... நாங்க நாலு பேரும் ஏற்காட்டில் உள்ள பயணியர் தங்கும் விடுதிக்கு (அப்பல்லாம் ஸ்டார் ஹோட்டல்கள் ஏது?) முன்னால் நாற் காலிகள் போட்டுக் கொண்டு பேசிக் கொண்டிருப்போம்.

எழில் சூழ்ந்த ஏற்காட்டு மலை! மாசில்லாத குளிர்க்காற்று. பச்சைப் பசேல் என்ற மரஞ்செடிகள். பறவை களின் கீச்சொலி, கைக்கெட்டும் தூரத்தில் புகையாய் மறையும் மேகக் கூட்டம். ஆங்காங்கே வெள்ளி ரேகையாய் சிறு ஓடைகள்.. அடேயப்பா! அதையெல் லாம் வியந்து ரசித்துக் கொண்டே அனுபவித்து நடித்தது மறக்க முடியாது!

'**ம**ணப்பந்தல்' படத்தில் என்னு டைய காதலராக எஸ்.எஸ்.ஆரும், கண வராக எஸ்.ஏ. அசோகனும் நடித்தார்கள்.

நான் முதலில், எஸ்.எஸ்.ஆரைக் காதலிப்பேன். ஆனால் சந்தர்ப்பச் சூழ் நிலைகளால், அவரது அண்ணனான எஸ்.ஏ. அசோகனை மணக்க நேரிடும்.

ஒருகட்டத்தில் நாங்கள் காதலித்த விஷயம், அசோகனுக்குத் தெரிந்து விடும். அப்போது அவர் எங்கள் உற வைச் சந்தேகிப்பார். தன் அண்ணனைத் திருத்துவதற்காகவும், எங்களுடைய களங்கமில்லாத உறவை நிரூபிப்பதற் காகவும், எஸ்.எஸ்.ஆர். ஒரு தந்திரம் செய்வார்.

''நீ ரொம்ப நல்லவளா இருந்து என்ன பிரயோஜனம்? எங்க அண்ணன்தான்



வீணாகச் சந்தேகப் படறாரே! நாம்ப சேர்ந்து புது வாழ்க்கை வாழலாம், வா!''னு என்னைக் கூப்பிடுவாரு. நான் உடனே பயங்கரக் கோபப்பட்டு, ''சீ! விலகிப் போ! அறியாப் பருவத்திலே, நான் உன்னைக் காதலித்தது உண்மைதான். ஆனால் எனக்கு என் கணவர்தான் கடவுள்... அவர்தான் என் வாழ்க்கை!''னு அழுதுகிட்டே, எஸ்.எஸ்.ஆரை அடிக்கணும்.



ஆனால் சிரித்த முகத்தோடு, நல்ல பிள்ளையாக எதிரில் நிற்கும், எஸ்.எஸ்.ஆரைக் கைநீட்டி அடிக்க, அது நடிப்புக்காகவே இருந்தாலும் மனசு வருமா?

எனக்குக் கைநீட்டவே வரலை!

''அடிம்மா...! நல்லா விளாசு!''னு டைரக்டர் டி.ஆர். ராமண்ணா எவ்வளவோ உசுப்பேத்திப் பார்த்தார். அப்புறம் வேறு வழியில்லாமல், நான் வேகமாகக் கையை வீசுவது போல ஃப்ரண்ட் ஷாட்டிலும், அடிவாங்குவது போல எஸ்.எஸ்.ஆரை க்ளோஸ் அப்பிலும் காட்டிச் சமாளித்தார்.

அந்தக் காட்சிக்குப் பிறகு, எல்லாவற்றையும் மறைந்திருந்து பார்க்கும் எஸ்.ஏ. அசோகன், திருந்தி விடுவார். எஸ்.எஸ்.ஆர். சோகமாக, எங்கள் வாழ்க்கையிலிருந்தே விடைபெற்றுக் கொண்டு போய் விடுவார்.

அந்தக் காட்சியை இப்போது பார்த்தாலும் எனக்கு மெய்சிலிர்க்கும். எஸ்.எஸ்.ஆருக்கு டைரக்டர் நிறைய க்ளோஸ்-அப் காட்சிகளை வைத்திருந்தார். ஒவ்வொரு ஃபிரேமிலும் ஒவ்வொருவிதமாக முக பாவம் காட்டி, மிகத் தத்ரூபமாக நடித்திருப்பார் எஸ்.எஸ்.ஆர். சற்றும் மிகையில்லாத டீசென்டான நடிப்பு என்றால் அது எஸ்.எஸ்.ஆர்தான்!

''திரைப்படங்களிலிருந்து விலகி, பல வருடங்கள் கழித்து எனக்கு டீ.வி. சீரியலில் நடிக்க வாய்ப்பு வந்தது.

'கங்கா, யமுனா, சரஸ்வதி... சங்கமம்' என்ற தொடர், சன் டீ.வி.யில் ஒளிபரப்பானது நினைவிருக்கலாம். நான் வழக்கறிஞர் வேடத்தில் நடித்தேன். அதில் என்னுடைய சிறு வயதுக் கதையைச் சொல்லும்போது, சில காதல் காட்சிகளும் இடம்பெற்றிருந்தன.

அப்போது, ''அந்தக் காலத்துல உங்களுக்கு ஜோடியா நடிச்ச கதாநாயகர்களிலே இப்ப இருக்கிறது எஸ்.எஸ்.ஆர். மட்டும்தான்!''னு சொல்லி, அவரை எனக்கு ஜோடியா நடிக்க வெச்சாங்க. 'ஆலயமணி' படத்தில் வரும் காதல் காட்சிகளை ஃபிளாஷ்பேக் ஆக இணைத்துக் கொண்டார்கள். அந்தச் சமயத்தில், எஸ்.எஸ்.ஆரின் குடும்பமே என் மீது அன்பு பாராட்டியதை மறக்க முடியாது.

''சமீபத்துல கூட, 'தமிழ்த் திரையுலகம் 75' என்கிற கலை நிகழ்ச்சிக்காக, சிங்கப்பூர் போயிருந்தேன். எஸ்.எஸ்.ஆரும்



குடும்பத்தோடு வந்திருந்தார். எனக்கு அந்த விழாவில் 'வாழ்நாள் சாதனையாளர்!' விருது வழங்கினாங்க. அப்போ, அவரது மனைவி செல்வி, மகன் கண்ணன் இருவரும் அதே பாசத்துடன் பழகியதைக் கண்டு, மனம் நெகிழ்ந்து போனேன்.

பேச்சுவாக்கில், ''எனக்குக் கால்வலி இருக்கு. சென்னைக்கு செக்-அப்புக்கு வரவேண்டியிருக்கும்!'' னு செல்வியிடம் காஷுவலாகச் சொல்லிக்கிட்டிருந்தேன். நான் சென்னைக்கு வந்ததையும், ஆபரேஷன் ஆனதையும், கேள்விப்பட்டிருக்கிறார்கள். ஆனால் எந்த மருத்துவமனை என்று தெரியாமல், தேடு தேடு என்று தேடி, 'மியாட்' வந்திருக்கிறார்கள். ஆனால் அங்கே பார்வையாளர்களை அனுமதிப்பதில்லை என்பதால், என்னைப் பார்க்காமலேயே வருத்தத்துடன் திரும்பி விட்டார்களாம்!

அதற்குப் பிறகு தொலைபேசியில் தொடர்பு கொண்டு, ரொம்பவே நலம் விசாரிச்சாங்க. அந்த அன்புக்கெல்லாம் நான் என்ன கைம்மாறு செய்வேனோ?

இங்கே எஸ்.எஸ்.ஆரின் மனைவி செல்வியைப் பற்றி இரண்டு வரியாவது சொல்லணும். மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம்னு சொல்வாங்க. அது உண்மைதான்! எஸ்.எஸ்.ஆரை இப்படி கண்ணும் கருத்துமாக, அவர் பார்த்துக் கொள்வதால்தான், இந்த வயதிலும் அதே சிரித்த முகத்துடன், ட்ரிம்மாக இருக்கிறார் எஸ்.எஸ்.ஆர்!

*(மலரும்)*

சந்திப்பு, தொகுப்பு :
அனுராதா சேகர்
படங்கள் : ஃபிலிம் நியூஸ்
ஆனந்தன், ஞானப்பிரகாசம்

ஒரு பக்கக் கதை

# ஆளுக்கு ஒரு நியாயம்!

**வெ**குநாட்களுக்குப் பின் என் கல்லூரி சிநேகிதி பாமினியை கடைத் தெருவில் சந்தித்தேன். பக்கத்தில்தான் வீடு என்று சொல்லி அழைத்துப் போனாள். காப்பி குடித்து சிறிது நேரம் பழைய நினைவுகளையும், பின்னர் நடந்த நிகழ்வு களையும் பகிர்ந்து கொண்டபின்,

''லக்ஷ்மி, வீட்டைப் பார், வா'' என்று வீட்டைச் சுற்றிக் காட்டினாள். அந்த வீடு கட்டி வந்து ஒரு வருடம்தான் ஆகிறது என்றாள். வீடு நன்றாகப் பெரிதாக இருந் தது. ஒரு சிறிய அறையில் ஒரு அலமாரி யில் மேல்தட்டில் பழைய குடும்ப ஃபோட்டோக்கள் சிலவும், கீழ்தட்டில் பைண்ட் செய்யப்பட்ட பழைய புத்தகங் களும் இருந்தன.

''இந்த ஃபோட்டோக் கள் எல்லாம் என் அம்மா வைத்திருந்தவை. அம்மா நிறைய நாவல்கள் படிப்பாள். அதை யெல்லாம் பைண்ட் பண்ணி வைத்துக் கொள்வாள். அண்ணா புது ஃப்ளாட் வாங்கிக் கொண்டு போனபின் மன்னி இதையெல்லாம் வைக்க இடமில்லை யென்று தூக்கிப் போட்டு விட்டாள். அம்மா என்னிடம் சொல்லி வருத்தப்பட் டாள். நான் வாங்கி வந்து வைத்துக் கொண் டேன். இங்கு வரும்போதெல்லாம் இவற் றைப் பார்த்து சந்தோஷப்படுவாள். நல்ல வேளையாக அம்மாவுக்கு இடமில்லை யென்று மன்னி சொல்லவில்லை'' என்று சிரித்தாள்.

**நா**ன் விடைபெறுமுன் ஞாபகம் வந்தவளாகக் கேட்டேன்.

''பாமினி, முன்பு ஒரு முறை உங்கள் பழைய வீட்டுக்கு வந்தபோது பார்த் திருக்கிறேன். உன் மாமியார் நிறைய கை வேலைகளை மணியிலும், ஒயரிலும் செய்வாரே. வால்ஹாங்கர்கள் கூட அழகா கச் செய்து மாட்டி வைத்திருப்பாரே அதெல்லாம் எங்கே காணோம்?'' என் றேன்.

''எனக்கு சுவரில் கண்டபடி மாட்டி வைப்பது பிடிக்காது. அதுவும் புது வீட்டில் அந்தப் பழசையெல்லாம் மாட்டி வைத் தால் நன்றாகவா இருக்கும்? எல்லாவற்றை யும் உங்கள் அறைக்குள்ளேயே வைத்துக் கொள்ளுங்கள் என்று சொன்னேன். அவ ருக்குக் கோபம் வந்து விட்டது. எல்லாவற் றையும் தெரிந்தவர் களுக்கும், உறவுக் காரர்களுக்கும் கொடுத்து விட் டார்'' என்றாள்.



- மீரா, சென்னை - 96.




சமீபத்தில் குற்றாலம் சென்றிருந்தோம். ஐந்தருவிக்கு அருகில் அழகாக பாக்கிங் செய்யப்பட்ட ஊறுகாய் பாட்டிலுடன் வியாபாரி ஒருவர், ஜாதிக்காய் ஊறுகாய் பாட்டில் 25 ரூபாய் என்று சொல்லி 20 ரூபாய்க்குத் தருவதாகக் கூறிக்கொடுத்தார். நாங்களும் சிறு வியாபாரிடம் பேரம் வேண்டாம் என்று அவர் சொன்ன விலைக்கே வாங்கிக் கொண்டோம்.

வீட்டுக்கு வந்து பாட்டிலைத் திறந்து பார்த்தால், வெம்பிய வடு மாங்காயுடன் உப்பு, காரம் சேர்க்கப்பட்டிருந்தது. பேருக்குக் கூட அதில் ஒரு ஜாதிக்காய்த் துண்டு இல்லை. விலை அதிகம் சொல்லியிருந்தால் கூட நாங்கள் வாங்கித்தான் இருப்போம். ஆனால் தரமற்ற பொருட்களைக் கொடுத்து ஏன் வெளியூர்க்காரர்களை ஏமாற்ற வேண்டும்? திரும்ப வந்து கேட்க மாட்டார்கள் என்ற அலட்சிய நினைப்பு தானே?

ஒருசிலரது தந்திரப் போக்கால்



# ஏமாறாதே.. ஏமாற்றாதே...

எல்லோருக்கும் கெட்ட பெயர். அடுத்த முறை வரும்போது ஊறுகாய் வாங்கத் துணிவார்களா? இனிமேல் யாராவது குற்றாலத்தில் ஊறுகாய் வாங்க ஆசைப்பட்டால் பாட்டிலைத் திறந்து ஜாதிக்காய்தானா என்று பார்த்து வாங்கவும்.

- எஸ். மங்கையர்க்கரசி,
நெய்வேலி.




செயற்கை இழை புடைவைகளில் 'ஃபிலமெண்டஸ்' என்று அச்சடித்திருக்கும். இவ்வகை புடைவைகளை வாஷிங்மெஷினில் துவைத்தால் விளிம்பு கிழிந்து விடும். வெளிநாடுகளில் இருந்து வரும் புடவைகளும் இவ்வகையானவைதான். இவற்றைக் கையால் துவைப்பதுதான் நல்லது.

- கிருஷ்ணவேணி ரங்கநாதன்,
திருவான்மியூர்.

வழிபாடு

இருபத்தியேழு நட்சத்திரங்களில் உறைந்து கிடக்கும் விசேஷ அருளைப் பெற பிரார்த்தனைகள் தரப்பட்டுள்ளன. அந்தந்த நட்சத்திரத்திற்கு உரியவர்கள் கூறினால் விசேஷ பலன்கள் கிடைக்கும்.

1. சுமநஸ வந்தித தேவ மனோகரி அஸ்வினி தேவ சஹாயக்ருபே
2. க்ஷீர ஸமுத்பவ திவ்யரூபிணி பரணி தேவி சஹாய க்ருபே
3. பங்கஜவாஸினி பாப விமோசனி க்ருத்திகா தேவி சஹாய க்ருபே
4. மோக்ஷப்ரதாயினி மஞ்சுள பாஷிணி ரோகிணி தேவி சஹாய க்ருபே
5. மந்த்ர நிவாஸினி சந்திர பத்தினி ம்ருக சிர்ஷ தேவி சஹாய க்ருபே
6. தேவஸ¬பூஜித ஸத்குண வர்ஷிணி திருவாதிரை தேவி சஹாய க்ருபே
7. அம்புஜவாஸினி தேவகண ஸேவித புனர்பூசதேவி சஹாய க்ருபே
8. ஜெயவர வர்ணிநி ஜெயப்பிரதாயிணி சிவபூச தேவி சஹாய க்ருபே
9. சீக்ர பலப்ரத பவபய ஹாரிணி சுப ஆயில்யதேவி சஹாய க்ருபே
10. சாது ஜடாச்ரித தேவமுனி பூஜித யோக மகம் தேவி சஹாய க்ருபே
11. துர்கதி நாசினி தூபப் ப்ரகாசினி ஜெயபூரம் தேவி சஹாய க்ருபே
12. ஞானமய மோகினி சாஸ்த்ர ஸ்வரூபிணி உத்திரதேவி சஹாய க்ருபே
13. ஹனஹர சகாய ஆனந்த பூஜிதலாப ஹஸ்த தேவி சஹாய க்ருபே
14. ரதகஜ துரக பதாதி சேவக சாஸ்திர மயசித்ரா தேவி சஹாய க்ருபே

## நன்மை தரும் நட்சத்திர ஸ்லோகங்கள்!



# அறிவுரை!

சுதா தனியாக வருவதைப் பார்த்ததும், மாலாவுக்கு 'திக்' என்றது. ''மறுபடியும் சண்டையா? உன்னைப் போல நான் பிறந்த வீட்டிற்கு ஒரு முறையேனும் தனியே வந்திருக்கிறேனா? சச்சரவுகள் வந்தாலும், நாங்களே சரி செய்துக்கலையா? உன் பிடிவாதக் குணம்தான், பிரச்னைக்குக் காரணம். பாவம், அவர் ரொம்ப நல்லவர், இன்னொருவராய் இருந்தால், உன்னை விட்டு ஓடியிருப்பார்? என்று சிடுசிடுத்தாள்.

சுதா கண்ணீருடன்,



ரூ.150 பரிசு பெறும் பெட்டிக் கதை

''உனக்கு என் கஷ்டம் என்ன தெரியும்? அடிக்க வருகிறார் தெரியுமா?'' என்றாள்.

''சரி... சரி... வா! உன்னை வீட்டில் விட்டுட்டு, அப்படியே அப்பாவையும் சமாதானப்படுத்திட்டு வர்றேன். அம்மா, உனக்கும் 54 வயசாச்சு! இனியாவது அப்பாவுடன் சண்டை போடாமல் சந்தோஷமாய் இரு' என்று அறிவுரை கூறிய மகள் மாலாவுடன் அரைமனதாகக் கிளம்பினாள் சுதா.

- எஸ். லக்ஷ்மி,
வேளச்சேரி.

15. சக்ரிணி ராக விவர்தினி ஞானமய சவாதிதேவி சஹாய க்ருபே

16. குங்கும அர்ச்சித அநுதின ஸேவித விசாக தேவி சஹாய க்ருபே

17. சந்த்ரப்ரகாசினி கந்தர்வ கானமய அனுஷாதேவி சஹாய க்ருபே

18. பாரதி பார்கவி மந்த்ரமய கோபுர கேட்டை தேவி சஹாய க்ருபே

19. சங்கர தேசிக சாந்த பூரண அன்னமூல தேவி சஹாய க்ருபே

20. அனுதின ஸேவித அச்சுத வரப்பபிச்ரஸாத பூராடதேவி சஹாய க்ருபே

21. சோக விநாசினி ரத்னாலங்கார உத்திராடதேவி சஹாய க்ருபே

22. மணிமயபூஜித சாந்த சொரூபிணி திருவோண தேவி சஹாய க்ருபே

23. காவிரி கங்கா நதிவர ஸேவித காந்த அவிட்ட தேவி சஹாய க்ருபே

24. மூலிக ஸேவித முனிப்ரஸாத சதயதேவி சஹாய க்ருபே

25. நவநிதி - தாயினி நம : சிவாயினி பூரட்டாதி தேவி சஹாய க்ருபே

26. சங்க பதும நிதி சஹாய ரக்ஷக உத்திரட்டாதி தேவி சஹாய க்ருபே

27. ஸ்வர்ணப்பிரதாயினி சூட்சும சஹாயினி ரேவதி தேவி சஹாய க்ருபே

- லலிதா வெங்கட்ராமணன்,
சென்னை - 4.

கவிதை

# பாதங்கள்!

● தஞ்சை சுதா



பொதுவாக பாதங்கள்
நடப்பதற்காக
படைக்கப்பட்டவை
நீ மட்டும்தான்
சதா
மிதப்பதற்காகவே பயன்படுத்துகிறாய்!

* * *

சில பாதங்களை
கொலுசுகள் அலங்கரிக்கும்
சில பாதங்கள்
கொலுசுகளை அலங்கரிக்கும்
உன் பாதங்களோ
என்
பார்வைகளை அலங்கரிக்கின்றன!

* * *

சில பாதங்களை
கண்களில்
ஒற்றிக்கொள்ள தோனும்
உன் பாதங்களோ
கன்னங்களில்
ஒட்டிக்கொள்ள தோனும்!

* * *

பாதங்களெல்லாம்
இசை கொடுக்கும்
என்றாலும் -
இருபதில் ஒலிப்பது
மட்டும்
இதயத்தில் பதியும்
என்ற பேருண்மை
உன்னால் புரிந்தது!

* * *

மருதாணி செடிகள்
தம் இலைகளில்
சிறப்புப் பச்சயங்களைப்
பாய்ச்சத் துவங்கிவிட்டன
சிவந்த
உன் பாதங்களைப்
பார்த்து விட்டதால்!

* * *

பார்வையில் வந்து போனவை...
பலவிதமான பாதங்கள்
எல்லா பாதங்களும்
அழகானவைதான்
பாதைகளோ பார்வைகளோ
மாறும்வரை!

# குக்கரி க்வீன்!

## மிக்ஸ் அண்ட் மேட்ச் சமையல் போட்டி



குக்கரி தர்பாரில் கலந்துக் கொள்ள சமையல் ராணிகளை அழைக்கிறோம். ஒரிஜினல் சமையல் குறிப்புகளைத் தெளிவாக எழுதி, கீழே உள்ள கூப்பனையும் நிரப்பி அனுப்புங்க: தேர்ந்தெடுக்கப்படும் ஐந்து ரெஸிபிகளுக்கு தலா ரூ. 250/- பரிசு!

குக்கரி க்வீன் சமையல் போட்டி (ஜூலை)

கண்டிப்பாகப் பயன்படுத்த வேண்டிய பொருட்கள் :
உளுந்து + சின்ன வெங்காயம்

பெயர் : ..................................................

முகவரி : ..................................................

..................................................

..................................................

கடைசித் தேதி : 25.7.2008

# அடிச்சாங்க பரிசு!

ஆஹா பரிசு (ஜூன் 2008) போட்டியில், "பள்ளி மாணவ மாணவியருக்கு வழங்கப்பட்டிருக்கும் அடையாள அட்டையில் அவர்கள் பள்ளி, முகவரி படிக்கும் வகுப்பு குறிப்பிட்டிருப்பது போல், அவர்களுடைய இரத்தம் என்ன வகை என்பதையும் அவசியம் குறிப்பிட வேண்டும். ஆபத்துக் காலத்தில் அது அவர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும்" என்ற குறிப்பை எழுதி ரூ. 150/- பரிசு பெறுகிறார் எஸ். ராமபத்ரன், தஞ்சாவூர். அதே டிப்ஸை சிறந்ததாகத் தேர்வு செய்த பல வாசகியரில் குலுக்கல் முறையில் ரூ. 150/- பரிசு பெறுகிறார் திருமதி சா. ருக்மணி, கடலூர்.



ஆஹா பரிசு!

இந்த இதழில் 'ஆஹா 50!' என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ள டிப்ஸ்களைப் படியுங்கள். மிகச் சிறந்த ஒரே ஒரு குறிப்பைத் தேர்ந்தெடுத்து, எழுதி அனுப்புங்கள். உங்கள் தேர்வும், ஆசிரியர் குழுவின் தேர்வும் பொருந்தினால் குலுக்கல் முறையில் ரூ. 150/- பரிசு! தேர்ந்தெடுப்பவருக்கு மட்டுமல்ல, அந்தக் குறிப்பை எழுதியவருக்கும் ரூ. 150/- பரிசு! 'ஜூலை - ஆஹா பரிசு!' என்று மறக்காமல் குறிப்பிட்டு, பக்க எண், வாசகி பெயருடன் அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி அனுப்புங்கள்.

15.7.2008

திருச்சி மாநகர் மிக அருகில்
குறைந்த விலையில்
தரமான வீடுகள்....




**திருச்சி சத்திரம் பேருந்து நிலையத்திலிருந்து ஐந்தே கி.மீட்டரில் ரம்மியமான சூழலில் அமையப் பெற்ற மிகச் சிறந்த வீடுகள் குறைந்த விலைகளில் விற்பனைக்குள்ளன.**

அப்பாடா! இது வேலைக்குச் சென்று திரும்பும் கணவர்கள் மற்றும் மனைவி மார்கள் விடும் பெருமூச்சின் வெளிபாடாகும். வீட்டிற்கு வந்தவுடனேயே மனைவி அல்லது கணவர் சொல்லும் குறைகள் தாராளமாக ஏராளம். அதாவது குடிநீர் சரிவர கிடைப்பதில்லை, குழாயில் அடைப்பு, சாக்கடை துர்நாற்றம், குப்பை தொட்டி பிரச்சனை இப்படி அடுக்கி கொண்டே போனால் நிம்மதி இழக்க நேரிடும் அபாயம் ஏற்படுகிறது. இப்படி மன அமைதி தொலைந்து நிற்கும் குடும்பத் தலைவர்கள் குடியிருப்புகளை தேர்ந் தெடுப்பதில் கவனம் செலுத்தியாக வேண்டிய கட்டாய சூழ்நிலைக்கு தள்ளப்படுகின்றனர். இவைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டியது அவசியமாகிறது. இவற்றிற் கெல்லாம் வடிகாலாக அமையப் பெற்றது தான் பிரவின்ஸ் சோலை எனும் அடுக்குமாடி குடியிருப்புகள். 24 மணி நேர பஸ் வசதி, அனைத்து வீடுகளையும் இணைக்கும் இலவச இண்டர்காம் வசதி, லிப்ட் மற்றும் கார் பார்க்கிங் வசதி களுடன் திருச்சி சென்னை நான்கு வழிப்பாதை மற்றும் தேசிய நெடுஞ்சாலை அருகில் மனதிற்கேற்ப அமைதியான சூழலில் அனைத்து வசதிகளையும் உள்ளடக்கி Real சோலையாகவே பரிணமிக்கிறது.



## பிரவின்ஸ் சோலை

கட்டுமானப் பொருட்களின் திடீர் விலையேற்றத்தால் அதிக விலைக்கு விற்கப்படாமல் குறைந்த மற்றும் நியாயமான விலைகளில் தற்பொழுது விற்பனைக்குள்ளன. இதில் முக்கிய அம்சமாக சென்னை - திருச்சி நான்குவழிப் பாதை அருகில் அமையப் பெற்றுள்ளதால் இதன் மதிப்பு மாதத்திற்கு மாதம் அதிகரித்துக் கொண்டே செல்கிறது என்பது குறிப்பிடத்தக்கது. கனவு இல்லங்களை தேர்ந்தெடுக்கும் பொருட்டு வருகை தரும் அனைவரையும் வாஞ்சையோடு வரவேற்க தயாராக உள்ளோம்.

# ஸ்ரீ பிரவின் பில்டர்ஸ் & ஹவுசிங் புரமோட்டர்ஸ்

முதல்தளம், சிவசக்தி டவர்ஸ், எண் -5, வடக்கு ஆண்டார் வீதி, திருச்சி -2.
தொலைபேசி : 91431-2709554, மொபைல்: 91 98432 43566, 91 97897 - 71466,
தொடர்பு கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.
Email: shreepravin_try@yahoo.com

# தசாவதாரம் எப்படி?



அனுஷா நடராஜன்

எம்.எஸ். சசிரேகா, ராணிப்பேட்டை.

மங்கையர் மலருக்கு எழுதி அனுப்பப்படும் 'ஆஹா-50!' குறிப்பு, ஏற்றுக் கொள்ளப் பட்டதா இல்லையா என்று எத்தனை நாட்களில் தெரிந்து கொள்ளலாம்?

புத்திசாலியாக இருந்தால், எழுதின உடனேயே!

என். ஜமுனா, திருப்பத்தூர்.

சரி, உங்க வழிக்கே வரு கிறேன். இளையராஜா, ஏ.ஆர். ரஹ்மான் ஒப்பிடுங்க!

முன்னவர், தேசிய பொக் கிஷம்;

இளையவர், சர்வதேச வியாபாரம்!

கு. லதா, கும்பகோணம்.

தொலைக்காட்சியில் வரும் நடனப் போட்டி நிகழ்ச்சிகள், கணவன் - மனைவி பொருத்தப் போட்டி நிகழ்ச்சிகளைத் தாங்கள் பார்த்ததுண்டா? அதைப் பற்றி தங்களின் கருத்து...?

கரப்பான்பூச்சி ஆற்றில் குதிக்கச் சொல்லுங்கள்... மிளகாய்ப் பொடி ஷவரில் குளிக்கச் சொல்லுங்கள். ஒரு கரண்டி வேப்பெண்ணையைக் குடிக்கச் சொல்லுங்கள்... தாராளமாகச் செய்கிறேன். நீங்கள் குறிப்பிட்ட இரண்டு மட்டும் எனக்கு அலர்ஜி!



விஜயா ரவீந்திரன், ஒசூர்.

எனக்கு ரொம்ப நாளா ஒரு விஷயம் கேட் கணும்னு. எறும்புகள் சாரி சாரியாகப் போகும் போது, எதிரே வரும் எறும்புகளுடன் மூக்கால் உரசிக் கொள்கின்றனவே! அது ஏன்?

எதிர்ல வர்ற ஆளு, நம்ப பேட்டை ஆசாமியா இல்லை வேறே ஏரியாவான்னு நுகர்ந்து பார்க்கிற 'சந்தோஷ் சுப்ரமணியம்' டிக்கி அது! நம்ப பேட்டைதான்னு தெரிஞ்சா, 'சந்தாம்பா!'னு வழிவிடும்!




இல்லைன்னா, மெர்ஸல் பண்ணிடும்!

[கைகுடுங்க விஜயா... எறும்பு சாரியைப் பார்த்ததும், உடனே எறும்புப் பவுடரைத் தேடாமல், அதற்குக் கொஞ்சம் ரவையோ சக்கரையோ போட்டு, எறும்பின் அணிவகுப்பை ரசிக்கிற பழக்கம் உங்களுக்கும் இருக்கும் போலிருக்கே!]

*அலமேலு நாராயணன், புதுடில்லி.*

*சீதாராமாராவ், நவிமும்பை.*

**மங்கையர் மலரில் நிறைய போட்டிகள் வைக்கிறீர்கள். டில்லி, மும்பை போன்ற நகரங்களில், புத்தகம் வந்ததுமே காலியாகி விடுகிறது. கடைக்காரர்கள் மறுபடி வரவழைத்துக் கொடுப்பதற்குள், எங்களுக்கு டென்ஷன் ஆகிவிடுகிறது. வேற்று மாநிலத்தில் உள்ளவர்களுக்கு, போட்டிக்கான கடைசித் தேதியை நான்கு நாட்கள் தள்ளி வைத்தால் வசதியாக இருக்குமே!**

உண்மையில் அப்படித்தான் செய்து கொண்டிருக்கிறோம். வெளிநாடு, வெளியூர் வாசகியருக்காக, இரண்டு நாட்கள் வரை சலுகை தந்தே பரிசீலித்து வருகிறோம். இனியும் அப்படியே செய்வோம். குக்கரி க்வீன் சமையல் போட்டிக்கு மட்டும் ஒரு மாதம் அவகாசம் உண்டு. இப்ப திருப்தியா?

*எம். பிரபாவதி ராமன், கோவை - 641 006.*

**விலைவாசி எல்லாம் படுபயங்கரமாக ஏறிவிட்டதே..?**

ஆமாம். கொஞ்சம் ஓவரா தான் போயிடுச்சு போலிருக்கே! தி. நகரில் ஒரு பஸ்ஸில் உட்கார்ந்திருந்தேன். ஒரு பெண்மணி, இரண்டு பெரிய பைகளுடன் ஏறி என் அருகில் நின்று கொண்டார்.

# ஆசை!

''அம்மா, இன்னிக்கு என்னைப் பொருட்காட் சிக்குக் கூட்டிட்டுப் போறேன்னு சொன்னியே?'' ஆறு வயசு உற்சாகமாகக் கேட்டாள்.

''ம்ம்... சாயந்திரம் கூட்டிப் போறேன். ரெடியா இரு''

உமா, இரண்டு மணிக்கே தலைவாரி, முகம் கழுவி, தீபாவளிக்கு எடுத்த ரோஸ் கலர் பாவாடை போட்டு, ஆவலுடன் காத் திருந்தாள்.

மார்க்கெட்டுக்குப் போயிருந்த அம்மா வந்ததும், துள்ளலுடன் கிளம்பினாள்.

பொருட்காட்சி, தூரத்தில் கலர் கலர் லைட்டுகளும் ராட்டினங்களுமாய் பளிச்செனத் தெரிந்தது. உமா உலகத்தையே மறந்துவிட்டாள்.

வண்ண விளக்கு களையே பார்த்து கண்கொட்டாமல் நின்றவளின் தலையில் கொட்டி, ''ஏய், வேடிக்கை பார்க்காம ஒழுங்கா இந்தப் பூவை எல்லாம் முழம் அஞ்சு ருபாயின்னு கூவி வித்துட்டு வா!'' என்றாள் அம்மா!

கைநிறைய மல்லிகைச் சரங்களையும், மனம் நிறைய ஆசைகளையும் சுமந்தவாறு நின்றாள் உமா.

- செ. ஜோதிலட்சுமி,

சென்னை - 21.



ரூ.150 பரிசு பெறும் பெட்டிக் கதை

''பைகளைக் கொடுங்களேன்... நான் வேணும்னா வெச்சுக்கறேன்!'' என்றேன். என்னை மேலும் கீழுமாகச் சந்தேகத்தோடு பாத்தவர், ஒரு பையை மட்டும் என்னிடம் கொடுத்துவிட்டு, இன்னொன்றை தன்னிடமே வைத்துக் கொண்டார்.

''என்கிட்ட கொடுத்த பையில், விலை உசந்ததா ஏதும் இல்லையே!'' என்று கேட்டேன்.

''அதுல கொஞ்சம் ஜுவல்ஸ் இருக்கு. இந்தப் பையிலதான் மளிகைச் சாமான், காய்கறி எல்லாம் இருக்கு!'' என்று தன் பையை கெட்டியாக அணைத்துப் பத்திரப் படுத்தினார்.

[கொஞ்சம் டூ மச், த்ரீ மச் கற்பனை தான்! ஆனால் யார் கண்டது? நமது மாண்புமிகுக்களின் தயவில் 2010ல் இந்தச் சம்பவம் உண்மையாகித் தொலைந்தால் 'கரி பேனா!' என்று சபிக்கக் கூடாது!]

வி. சரோஜா ரங்கநாதன்,

சென்னை - 20.

**தசாவதாரம் எப்படி?**

முதல் பதினைந்து நிமிடங்கள் அப்பாடியே உறைய வைக்கின்றன. நாலு பாத்திரம் நச்! அவரது யூனிட்டின் உழைப்பும், சினிமாவின் மீதான கமலின் வெறித்தனமான காதலும் பிரமிக்க வைக்கின்றன. மொத்தத்தில் ஹைடெக் மிரட்டல்!

புவனா சாமா, சீர்காழி.

**வேப்பம் பூ ரசம், மிளகு ரசம் தங்களின் ஓட்டு யாருக்கு?**

கர்நாடக மாநிலம் உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணர் கோயிலில் பக்தர்களுக்கு அன்னதானத்தில் பரிமாறப்படும் ரசத்தை சாப்பிட்டிருக்கீங்களா! அதுதான் நிஜ ர'ஜம்'! மத்ததெல்லாம் சம'ரசம்'தான்!

**“எத்தனையோ கடைகள் ஏகத்துக்கும் இருக்க, ‘பிரசாந்தி’க்கு மட்டுமே படையெடுக்கறீங்களே…? அதுல அப்படி என்னதான் ஸ்பெஷலா இருக்கு?” என்று ‘பிரசாந்தி’யில் மும்முரமாக ஷாப்பிங் செய்து கொண்டிருந்த வாடிக்கையாளர்கள் சிலரிடம் கேட்டோம். அவ்வளவுதான் உற்சாகம் பொங்கி எழ, பாராட்டு மழையைப் பொழிந்துவிட்டார்கள்!**



* சௌம்யா



* அனுராதா கிருஷ்ணமூர்த்தி

சௌம்யா: *(கர்நாடக இசைப் பாடகி)*

‘பிரசாந்தி’ ஆரம்பித்த நாளில் இருந்தே வாங்கிட்டு இருக்கேன். மேடைக் கச்சேரிகளாகட்டும், கல்யாணம், பார்ட்டி போன்றவற்றுக்கும் என்னோட சாய்ஸ் ‘பிரசாந்தி’தான்! முதல் காரணம், அதோட ரிச் லுக்! பட்டுப் புடைவை மாதிரியே கிராண்டா இருக்கும். அதே சமயம், நம்ம ஊர் கிளைமேட்டுக்கு ஏற்ற மாதிரி கூலா, லைட் வெயிட்டாவும் இருக்கும். எப்பவும், எங்கேயும் ‘ஜம்’முன்னு கம்ஃபர்டபிளா கட்டி அசத்தலாம்.

உள்ளூர் கச்சேரிகள்னு இல்லை, வெளிநாடுகளுக்குப் போகும் போதும், என்னோட சாய்ஸ், ‘பிரசாந்தி’யின் சில்க் காட்டன் புடைவைகள்தான். ஏன்னா, ஒரு பெரிய பட்டுப் புடைவை எடுத்துக்கிட்டு போற இடத்துல, மூணு பிரசாந்தி புடைவைகளைக் கொண்டு போகலாம்.

பிரசாந்தி கலெக்ஷன்ஸுக்குன்னே, தனி வார்ட்ரோப் வெச்சுக்குற அளவுக்கு, எக்கச்சக்க நிறங்களில், ஏகப்பட்ட புடைவைகளை வாங்கி அடுக்கியிருக்கேன். திருமதி. மாலதிக்கு என்னோட டேஸ்ட் தெரியுங்கிறதனால, புது காம்பினேஷன் போட்டதும், எனக்குத்தான் சொல்லியனுப்புவார். விளம்பரத்துல சொல்றது அத்தனையும் நிஜம்தான்! சில்க் காட்டன் என்றாலே பிரசாந்திதான்.



அனுராதா கிருஷ்ணமூர்த்தி *(கர்நாடக இசைப் பாடகி, சின்னத்திரை நட்சத்திரம்)*

‘பிரசாந்தி’ ல இருக்கிற




அத்தனை பேரும் நிச்சயம் இயற்கையை ரசிக்கிறவங்களா இருப்பாங்கன்னு நினைக்கிறேன். இயற்கையின் அற்புதங்களான மலர்கள், வண்ணத்துப்பூச்சி, பறவைகள், காய்கனி இவற்றில்தான் எத்தனையோவிதமான அபூர்வ நிறங்களைப் பார்க்கலாம். பிரசாந்தியின் புடவைகளிலும், நான் கற்பனைக்கே எட்டாத கலர் காம்பினேஷன்களைப் பார்க்கிறேன்.

வழக்கமா, மஞ்சள்ல சிவப்பு பார்டர், பச்சையில ரோஸ் பார்டர்னு போட்ட கலரே போடாமல், ஒரு மாதிரி பிஸ்தா க்ரீன்ல, சாஃப்டான பர்ப்பிள் பார்டர், மஷ்ரூம் க்ரேல, பேபி பிங்க் பார்டர்னு ரொம்ப வித்தியாசமா, ஏஸ்தடிகா உருவாக்கியிருப்பாங்க. அந்த அழகான படைப்புகள்தான் என்னை பிரசாந்திக்குப் போக வைக்கின்றன.

என்னுடைய மேடைக்கச்சேரிகளுக்கு, ஸ்பெஷல் அட்ராக்ஷன் தரும் பிரசாந்திக்குப் பட்டான பாராட்டு!

**நிர்மலா கண்ணன் (வங்கிப் பணியாளர்)**

'பிரசாந்தி' குட்டிக் கடையா இருந்த போதிலிருந்தே, நல்ல பழக்கம். எங்க வங்கி சிநேகிதிகள் எல்லாம் வருஷா வருஷம், புத்தாண்டுக்கு பிரசாந்தியில ஆர்டர் கொடுத்துடுவோம். அவங்களும், எங்க டேஸ்ட்டுக்கு ஏற்ற மாதிரி, டிஸைன் செஞ்சு, யூனிக் காம்பினேஷன்ல ஸ்பெஷலா தயாரிச்சுக் கொடுத்துடுவாங்க. நியூ இயர் அன்னிக்கு, நவீன மோஸ்தர் புடைவை கட்டிக்கிட்டு, பரபரப்பா வேலை செய்யும் சந்தோஷமிருக்கே! இன்னொரு விஷயம் பிரசாந்தி புடைவைகளைப் பராமரிக்கிறது ரொம்ப சுலபம்! இலேசா அயர்ன் பண்ணி, கட்டிக்கிட்டாலே, நான் முழுக்க அழகா இருக்கும். பார்ட்டிவேர், ஆஃபீஸ்வேர், எனிவேர், எவ்ரி வேர்... என்னோட சாய்ஸ் பிரசாந்திதான்!

**பத்மாநாயக் (பத்மஶ்ரீ ஃபுட்ஸ்)**

தரத்திலும், விலையிலும் பிரசாந்தியை 'பீட்' பண்ணவே முடியாதுங்க. பெஸ்ட் குவாலிடி! ஏழு வருஷத்துக்கு முன்னால வாங்கின புடவைதான் கட்டிக்கிட்டு வந்திருக்கேன்; ஜரிகையும், பாடி ஷைனிங்கும் புதுசு மாதிரி இருக்கு பாருங்க! காட்டன், பாலிகாட், சில்க் காட்டன்னு எந்த வெரைட்டியாக இருந்தாலும், என்னோட

■ மாலதி முரளி

# பிரசாந்தியில் அப்படி என்ன ஸ்பெஷல்?



ஃபேவரிட் கடை பிரசாந்திதான்! சமீபத்துல, நான் அடர் பச்சையில, தங்க கோபுர பார்டர் போட்டு ஒரு புடைவை வாங்கினேன். என்ன நேர்த்தி? என்ன லுக்? பட்டின் நளினமும், பருத்தியின் இதமும் இணைந்த அற்புதப் படைப்புகள் 'பிரசாந்தி' புடவைகள்!

**வசுதா முரளி (விஃப்கோ பதிப்பகம்)**

**ரொம்**பவே ராசியான கடை! கல்யாணம், கிரஹப்பிரவேசம்னு எந்த விசேஷமானாலும், பிரசாந்தியிலதான் பர்சேஸ் ! பிரசாந்தியோட சிறப்பம்சம் என்னன்னா, அங்கே கிடைக்கிற மனமார்ந்த உபசாரம். மிஸஸ் மாலதியோட அன்பான பேச்சுலயே மயங்கி, நாலைஞ்சு புடைவைகளை எடுத்திருக்கேன். வெரிஃப்ரெண்ட்லி ரிஸப்ஷன். பார்க்கிங் பிரச்னையோ, பரபரப்போ இல்லாமல், அமைதியான சூழலில் ஷாப்பிங் செய்யலாம். இன்னிக்கு பட்டு விற்கிற விலையில, பிரசாந்தியின் சில்க் காட்டன் மிகப் பெரிய வரப்பிரசாதம்.

**டாக்டர் வசந்தி வாசுதேவன் :**

**போ**ன ஜுன் மாதம் என் பொண்ணுக்குக் கல்யாணமாச்சு. 'பிரசாந்தி'யில எழுபத்தைந்து புடவைகள் வாங்கி பரிசளிச்சேன். எங்க மருத்துவமனை பெண் ஊழியர்கள் அனை வரும் 'பிரசாந்தி' புடைவைகளைக் கட்டிக் கொண்டு, உற்சாகமாக வளையவந்ததைப் பார்க்கும்போது, அத்தனை அழகாக இருந்தது. பார்க்கிறவங்க எல்லாம், ''பட்டா... பட்டா?'' என்று வியந்தார்கள். பிரசாந்தி புடைவைக்கு குந்தன், எம்ப்ராய்டரி செய்தும் அணிவேன். ''உன்கிட்ட இருக்கிற பிரசாந்தி புடைவைகளை வைச்சே, தனியா ஒரு பொட்டிக் ஆரம்பிக்கலாம்!''னு தமாஷ் செய்வார் என் கணவர்.

**சரஸ்வதி ராமன் (இல்லத்தரசி):**

**'பி**ரசாந்தி'யில எனக்குப் பிடிச்சதே அவங்களோட குவாலிடிதான்! தரத்துல மட்டும் சமரசம் பண்ணிக்கவே மாட்டாங்க. எத்தனை முறை நனைச்சுக் கட்டினாலும், பார்ப்பவர்கள் 'புதுசா?'னு கேட்பாங்க. குடும்பப்பாங்கான சூழல்ல ஷாப்பிங் பண்ணலாம். கலர் காம்பினேஷனும் ரொம்ப யூனிக்கா இருக்கும். சமீபத்துல, எங்க வீட்டு சஷ்டியப்தபூர்த்தி, பூணூல் எல்லாத்துக்கும் இருபது புடைவைகளுக்கும் மேல வாங்கினோம். எலுமிச்சம் பழ க்ரீன்ல, அரக்கு பார்டர் வெச்சு பாவஞ்சி புடைவையை சமீபத்துல நான் வாங்கினேன். என்ன அழகுங்கறீங்க?

நம்ப பர்ஸுக்கும், ரசனைக்கும் ஏற்ற விதத்தில் கிடைக்கிறது. ஒருமுறை பிரசாந்திக்கு பிரியத்தோட போனால், அப்புறம் நித்யமும் விவாஹவைபோஹம்தான்!

– மாணஸா

படங்கள் : ஸ்ரீஹரி

மேலும் விவரங்களுக்கு :
சென்னை - 044-24991850
பெங்களூர் - 080-2334 1632
முகவரி : 16, 6வது குறுக்குத் தெரு, சி.ஐ.டி. காலனி, சென்னை - 4.






## ஆஹா 50!

இந்தியா போன்ற வெப்ப நாடுகளில் பள்ளி செல்லும் குழந்தைகளுக்கு சாக்ஸ், ஷூ அணிந்து செல்வது என்பது மிகவும் கஷ்டமான ஒன்று. அதனால் அத்தகைய விதியைக் கொஞ்சம் தளர்த்தி, பக்கிள் வைத்த செருப்புகளை அணிந்து வரச் சொன்னால் குழந்தைகள் கஷ்டப்படாமல் இருப்பார்கள். பள்ளி நிர்வாகத்தினர் கவனிப்பார்களா?

- கீதா வெங்கடேஸ்வரன், சிட்லபாக்கம்.

## இவை எல்லாமே ஆஹா 50! தான்!

தண்ணீரை அண்ணாந்து பார்த்தவாறே மடமடவென்று குடிக்கக் கூடாது. தண்ணீர் உள்ளே போகும்போது இறங்குகிற இடங்களில் உள்ள காற்று சமப்பட வேண்டும். அதனால் தொண்டை நனையும்படி நிதானமாக ரசித்து நீரை அருந்த வேண்டும்.

- சு. கண்ணகி, மிட்டூர்.

வீட்டில் வயதானவர்கள் இருந்தால், அவர்களுக்கு வேளாவேளைக்கு ஆகாரம் கொடுத்து, துணி துவைத்துப் போட்டு, மருந்து, மாத்திரை கொடுத்து, அவர்கள் மனம் நோகாமல் நடந்தாலே, பகவானுக்கு சந்தனக் காப்பு சார்த்தி, அபிஷேகம் செய்வதற்குச் சமம்.

- ஆர். பார்வதி, அம்பத்தூர்.

கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பு, 6 மிளகாய் வற்றல் இவற்றைச் சிறிது எண்ணெய் விட்டு வறுத்துக் கொள்ளவும். அத்துடன் பொடியாக நறுக்கிய வாழைப்பூவை சிறிது எண்ணெயில் வதக்கி உப்பு, புளி வைத்து துவையல் அரைத்தால் சுவையோ சுவை. சூடான சாதத்தில் பிசைந்து சாப்பிடலாம்.

- கே.எஸ்.கிருஷ்ணவேணி, குடந்தை.

வணிக நிறுவனங்கள் தாங்கள் வெளியிடும் விளம்பரங்களை அட்டையில் அச்சிட்டு, மரங்களில் ஆணி அடித்து மாட்டுகிறார்கள். இதனால் சாலையோர மரங்கள் சேதமடைகின்றன. இவ்வகை விளம்பரங்களை அரசு தடைசெய்ய வேண்டும்.

- ஜி. சுந்தரராஜன், வேளச்சேரி.

பாக்கெட்டுகளில் வெண்ணெய், நெய், டால்டா முதலியன வாங்கி வந்தால், ஒரு மணி நேரம் ஃப்ரிட்ஜில் வைத்து விடுங்கள். அவை கெட்டியாகிவிடும். பிறகு, மெதுவாக மேலே உள்ள காகிதத்தைப் பிரித்தால், கொஞ்சம் கூட வீணாக்காமல் அவற்றுக்குரிய பாத்திரங்களில் எடுத்து வைத்துவிடலாம்.

– பெங்களூர், என். ஜெயந்தி.

ஊறுகாய் பாட்டிலில் காய் எல்லாம் தீர்ந்த பிறகு மிளகாய் வண்டல் மீந்திருந்தால் பாகற்காய், வெண்டைக்காய், குடைமிளகாய் போன்றவற்றுள் அடைத்து ஸ்டஃப்ட் வெஜிடபிள் கறி செய்து பாருங்களேன்! ருசி அள்ளும்.

- ஷீலா, சென்னை - 17.

# நாஞ்சில் நாட்டுச் சமையல்

# சொய்ங்...சொய்ங் ஆசை தோசை!



தோசைமாவு மிகவும் புளித்திருந்தால், ஒரு கைப்பிடி மைதா, ஒரு ஸ்பூன் சர்க்கரை சேர்த்துக் கலக்கவும். புளிப்பு மட்டுப்படுவதோடு, சுவையான ஸ்பாஞ்ச் தோசையும் தயார்!

நளபாகச் சக்ரவர்த்தி ஜேக்கப்

புழுங்கலரிசி 3 கப், கெட்டி அவல் 1 கப், உளுந்து 1 கப் விகிதத்தில் ஊற வைத்து, தோசைமாவைத் தயாரித்துப் பாருங்கள். முறுகலான தோசை சும்மா பட்டுப் பட்டாக வரும்.

தோசைக்கு அரைக்கும்போது, ஒரு கைப்பிடி கடலைப் பருப்பு, துவரம்பருப்பு, ஒரு டீஸ்பூன் வெந்தயம் ஊற வைத்து அரைத்தால் செந்நிற தோசை மினுமினுக்கும்.



கலந்த தோசை எந்த மாவில் செய்தாலும், கறிவேப்பிலை, கொத்தமல்லிதழை, சிறு துண்டு இஞ்சி, இரண்டு பச்சை மிளகாய், அரை டீஸ்பூன் மிளகு, அரை டீஸ்பூன் ஜீரகம், கைப்பிடி சின்ன வெங்காயம் அரைத்துக் கலந்தால் வாசனையும் தூக்கும். தோசையும் காரசாரமாக இருக்கும்.



# மாம்பழ தோசை!

**தேவையான பொருள்கள் :**

நல்ல சதுப்புள்ள
மாம்பழம் - 5,
கோதுமை மாவு - 1கப்,
கடலை மாவு - ½ கப்,
அரிசி மாவு - 1 கப்,
வெல்லம் - ½ கிலோ,
முந்திரி - 100 கிராம்,
நெய் - 200 கிராம்.

செய்முறை :

★ மாம்பழத்தைச் சுத்தம் செய்து உள்ளிருக்கும் சதைப்பற்றை மட்டும் தனியாக எடுத்து மசித்துக் கொள்ளவும்.

★ வெல்லத்தை சிறிதளவு தண்ணீர் சேர்த்து, கல், மண் நீக்கவும். அடிபிடிக்காத வாணலியில் வைத்து நுரைபாகு வரும்வண்ணம் பாகு செய்து வடிகட்டிக் கொள்ளவும்.





★ முந்திரியைச் சிறு சிறு துண்டுகளாக்கி, நெய்யில் வறுக்கவும்.

★ மசித்த மாம்பழத்துடன் வெல்லப்பாகு, கோதுமை மாவு, கடலை மாவு, அரிசி மாவு, முந்திரி சேர்த்து நன்றாகக் கலக்கிக் கொள்ளவும்.

★ இக்கலவையை சிறு சிறு தோசையாக ஊற்றி சுற்றிலும் நெய் விட்டு வேகவிடவும்.

★ நன்றாக வெந்து இருபுறமும் பொன்னிறமாக ஆனவுடன் எடுத்துப் பரிமாறவும்.

சுவையான மாம்பழ தோசை தயார்.

**பின்குறிப்பு :**

புளிப்பில்லாத, நார் இல்லாத அல்போன்ஸா, பங்கனப்பள்ளி, செந்தூரா போன்ற பழங்களைப் பயன்படுத்தவும். ●



# பைனாப்பிள் தோசை!

**தேவையான பொருள்கள் :**

புழுங்கலரிசி - 3 கப்,
பச்சரிசி - 1 கப்
உளுந்து - 1 கப்,
உப்பு - ருசிக்கு.

**பைனாப்பிள் டாப்பிங்குக்கு :**

நன்கு பழுத்த அன்னாசிப் பழத் துண்டங்கள் - 10,
காய்ந்த மிளகாய் - 6,
கெட்டியான புளிக்கரைசல் - 1 டேபிள் ஸ்பூன்,
உப்பு - ருசிக்க,
கொத்துமல்லித் தழை - கைப்பிடியளவு,
எண்ணெய் - தேவையான அளவு.



# மனம் விரும்பும் மாற்றத்துடன் மகிழ்ச்சியான வாழ்க்கைச் சூழல்






ஓர் புதிய வடிவத்தை உருவாக்குவதை கொள்கையாகக் கொண்டு எங்களால் பூர்த்தி செய்யப்பட்ட பணிகள் மூலம், கோவை நகருக்கு ஏராளமான புதிய அடையாளங்களை உருவாக்கியிருக்கிறோம்.

சுற்றுப்புறச்சூழல், அதனைச் சார்ந்த அத்துணைப் பணிகளிலும் எங்களுக்கு உண்டான பொறுப்புணர்வை, எங்களால் உருவாக்கப்பட்டு அதில் வசித்து வருபவர்களும், பிரிட்டிஷ் அறிஞர்களின் கூட்டமைப்புக் குழு மற்றும் ராக் அமைப்பினரும் அங்கீகரித்துள்ளனர்.

ஷ்ருதி எனும் பாரம்பரியம் மிக்க வாழ்க்கை முறையினை அடிப்படையாகக் கொண்டு பல நூற்றாண்டுகளாகக் கட்டப்பட்டு வரும் இல்லங்களைப் போன்றே ஆர்.வி.எஸ். ஷ்ருதியும் நிலைத்து நிற்கும் மனச்சாந்தியையும், வசதியாக வாழும் சூழலும் இணைந்த தனி வீடுகள் மற்றும் அடுக்குமாடி குடியிருப்புகளை உங்களுக்கு வழங்குவதில் முன்னணியில் உள்ளது.

ஆர்.வி.எஸ். ஷ்ருதி பாதுகாப்பான சமூக மாற்றம் நன்கு விளங்கும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. இது சூலூர் அருகாமையில் அமையவுள்ளது. திருச்சி ரோட்டில் அமையவுள்ள 4 வழிப்பாதை வழியாக விமான நிலையத்திலிருந்து வெகு சுலபமாக 15 நிமிடங்களிலும், இரயில் நிலையத்திலிருந்து 20 நிமிடங்களிலும் சென்றடையும் தூரத்தில் இது அமையவுள்ளது. மேட்டுப்பாளையம், திருப்பூர், பாலக்காடு போன்ற நகரங்களையும், அவிநாசி சாலையையும் நேரடியாக இணைக்கும் மிக முக்கியமான மற்றும் பெரிய சுழல் நகரமாக சூலூர் அமையவுள்ளது.






செய்முறை :

புழுங்கலரிசி, பச்சரிசியைச் சேர்த்தும் உளுத்தம் பருப்பைத் தனியாகவும் ஊறவைக்கவும். எப்போதும் தோசைக்கு அரைப்பது போல, நைஸாக அரைத்து, உப்பு சேர்த்துக் கலக்கவும்.

மறுநாள் மாவு பதமாகப் பொங்கியிருக்கும்.

பைனாப்பிள் பழத்துண்டங்களை, பொடிப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும். வாணலியில், 2 டீஸ்பூன் எண்ணெய் விட்டு, காய்ந்த மிளகாய், அன்னாசிப்பழத்



தேவையான பொருள்கள் :

மைதா மாவு - 1 கப்,
அரிசி மாவு - 1½ கப்,
சர்க்கரை - 2 கப்,
பேரீச்சம்பழம் - 2 கப்,
முந்திரி - 100 கிராம்,
நெய் - 200 கிராம்

செய்முறை :

★ மினுமினுப்பும், பசையும் உள்ள பேரீச்சம்பழங்களைத் தேர்வு செய்யவும்.

★ பேரீச்சம்பழத்தை கொட்டைகள் நீக்கி, சுத்தம் செய்யவும். சிறு துண்டங்களாக்கி, நன்றாக மசிக்கவும். அத்துடன் தேவையான அளவு சர்க்கரை, மைதா, அரிசி மாவு சேர்க்கவும்.

# பேரீச்சம்பழ




★ எல்லாவற்றையும் நன்றாகக் கலக்கிக் கொள்ளவும்.

★ முந்திரியை சிறு சிறு துண்டுகளாகப் பொடித்து,

துண்டங்கள் இரண்டையும் சிறு தணலில் வதக்கவும். நல்ல நிறம் வேண்டுபவர்கள், சிறிது மஞ்சள் தூளைச் சேர்த்து வதக்கலாம்.

பைனாப்பிள் வதக்கலுடன், உப்பு, புளிக்கரைசல், கொத்து மல்லித் தழை எல்லாவற்றையும் சேர்த்து, மிக்ஸியில் கரகரப்பாக ஒரு சுற்று சுற்றவும்.

தவாவைக் காயவைத்து, ஒரு கரண்டி தோசை மாவை ஊற்றிப் பரப்பி, அதன் மீது சிறு கரண்டி பைனாப்பிள் வதக்கலைப் பரப்பவும். சுற்றிலும் எண்ணெய் விட்டு, சிறு தணலில் வைத்து, முறுகலாகப் பரிமாறவும். ●



# பலாப்பழ தோசை!

**தேவையான பொருள்கள் :**
பலாப்பழம் - 3 கப்,
கோதுமை மாவு - 1 கப்,
அரிசி மாவு - 1½ கப்,
கருப்பட்டிப் பாகு - 1 கப் (திக்கானது),








நெய்யில் பொன்னிறமாக வறுக்கவும். வறுத்த முந்திரியை மைதா - அரிசி மாவு கலவையுடன் சேர்த்து நன்றாகக் கலக்கிக் கொள்ளவும்.

★ பின்னர் இதைச் சிறு சிறு தோசையாக ஊற்றி நெய் சேர்த்து வேகவைக்கவும்.

★ தோசை பொன்னிறமாக வரும் வரை வேகவைத்து பின்னர் பரிமாறவும்.

பின்குறிப்பு :

இந்த இனிப்பு தோசையை குழந்தைகளுக்கு பள்ளி மதிய உணவாக அனுப்பலாம்.. இரும்புச் சத்துமிக்க சிற்றுண்டி. ●




பொடித்து வறுத்த முந்திரி - 100 கிராம்,

நெய் - 200 மில்லி.



செய்முறை :

★ பலாப்பழத்தை கரகரப்பாக, ஒன்றிரண்டாக அரைத்துக் கொள்ளவும். நார் இல்லாத, கனிந்த பலாப்பழமாக இருந்தால் சிறு துண்டங்களாக்கி, கையாலேயே மசித்துக் கொள்ளலாம்.

★ அத்துடன் கருப்பட்டிப் பாகு, கோதுமை, அரிசி மாவு சேர்ந்து திக்காக கலக்கிக் கொள்ளவும்.

★ பொன்னிறமாக வறுத்த முந்திரி சேர்த்துக் கலக்கவும்.

★ இதை தோசை கல்லில் உள்ள சூடான நெய்யில் சிறு சிறு தோசையாக ஊற்றவும்.

★ இருபுறமும் பொன்னிறமாக ஆனவுடன் எடுத்துச் சூடாகப் பரிமாறவும்.

# நளபாகப் போட்டி–18 (முடிவு)

## ஜூன் 2008ல் இடம்பெற்ற போட்டியின் விடை

வந்து குவிந்த கூப்பன்களில் ரூ. 150/- பரிசு பெறும் 20 அதிர்ஷ்டசாலி வாசகர்களுக்கு வாழ்த்துகள்!

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1 க | த் | 2 த | கி | க் | கா | 3 ய் |
| ரு | ■ | க் | ■ | ■ | ■ | நெ |
| ணை | ■ | 4 கா | ப் | 5 பி | ■ | ■ |
| ■ | 6 கு | ளி | ■ | ஸ் | ■ | ■ |
| ■ | டை | ■ | 7 மை | தா | மா | வு |

1. பத்மா ரமா, ஹைதராபாத் - 28, 2. பானுமதி, திருவள்ளூர், 3. என். பானுமதி, வாலாஜாபேட்டை, 4. வந்தனா குமார், போரூர், 5. லலிதா சீனிவாசன், சென்னை - 17, 6. ச. சுந்தரிசங்கர், நெல்லை, 7. நாக லட்சுமி, காரிமங்கலம், 8. அகிலா பஞ்சாபகேசன், பெங்களூர் - 8, 9. கே. கிருத்திகா, காட்பாடி, 10. ராமசுவாமி, மல்லேஸ்வரம், 11. ஆர். டி. சத்யா ராஜேஷ், தஞ்சாவூர், 12. கௌசல்யா ராமன், புனே, 13. எஸ். லக்ஷ்மி, மதுரை - 16, 14. ஜி. சீதா, அம்மாப்பேட்டை, 15. பி. நிரஞ்சனி, சீரங்கபாளையம், 16. சவிதா, பெங்களூர் - 76, 17. ஆர். பத்மா, திருச்சி - 17, 18. ஆர். ஷிபானா ஜாஸ்மின், கம்பம், 19. க. கமலா, மேட்டுப்பாளையம், 20. வி. லட்சுமி, உடுமலைப்பேட்டை.







கீழே உள்ள கட்டங்களில் கஞ்சி வைக்கக்கூடிய பத்துப் பொருட்கள் உள்ளன. அவற்றைக் கண்டுபிடியுங்கள்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கு | ர | வ | ழ் | கே | கோ | து | மை |
| பி | ட் | பா | ர் | லி | ட | வ | க |
| ஏ | த் | ஓ | தை | ர | வெ | ரை | று |
| ஜ | யு | தோ | ட் | பி | ந் | ப் | ய |
| வு | வ் | க | அ | ஸ் | த | ங் | ப |
| மா | ம | வ | வொ | நி | ய | கொ | ப் |
| ள | ல் | எ | ரி | யீ | ம் | மூ | சி |
| சோ | ல் | க் | ரு | சி | ள | வு | பா |

தொகுப்பு : ஜி.எஸ்.எஸ்.

இங்குள்ள புதிரைச் சரியாக நிரப்பி வெட்டி மங்கையர் மலருக்கு அனுப்புங்க. குலுக்கல் முறையில் 20 பேருக்கு 150 ரூபாய் பரிசு! ஜெராக்ஸ் அனுப்பக் கூடாது!

கடைசித் தேதி : 15.7.2008

உறையின் மீது நளபாகப் போட்டி - 19 என்று குறிப்பிடவும்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

பெயர் : .................................................. விலாசம் : ....................................................

.............................................................................................................................................

.............................................................................................................................................

தொலைபேசி எண் : ..........................................................................................................

**வயதான பசுக்களை பாதுகாத்து பராமரிக்கும் பசுமடத்தில் (மாட்டு தொழுவத்தில்**

# மஹாளய அமாவாசை அன்று (28-9-2008) நடைபெறு

**பித்ரு தர்ப்பண பூஜையில் அனைவரும் கலந்து கொண்டு பித்ரு தேவதைகளி**

**ஆசிர்வாதத்தை பெற்று அனைத்து தோஷங்களில் இருந்தும் நிவர்த்தி பெற அன்புடன் அழைக்கிறோ**

**பித்ரு பூஜை செய்பவர்களுக்கு முன்னோர்களுடைய பரிபூரண ஆசியும் ஆதரவும் நிச்சயம் உண்டு**

- முன்னோர்களுக்கு உணவு அளிக்க விரும்பினால் பசுவிற்கு கொடுத்தால் போதும்; அது நம் முன்னோர்களை சென்று அடைய
- கோதானத்திற்கு மிஞ்சி ஒரு புண்ணியமும் இல்லை. பரிகாரத்துக்கு அதுவே பெரிய மருந்
- கோமாதாவிற்கு அகத்தி கீரை, அருகம் புல், கறுப்பு எள் உருண்டை, வெல்லம், பொங்கல் போன்ற உணவு அளித்தா மகாலட்சுமி நம் இல்லத்தில் என்றும் குடியிருப்பாள். எல்லா செல்வங்களையும் அளித்து, நிலை பெற செய்வா
- அன்பர்கள் தங்களுடைய திருமண நாள், பண்டிகை நாட்கள் முன்னோர்களின் திதி நாட்கள், அன்பிற்குரியவரி நினைவு நாள் என தங்களுக்கு உகந்த நாட்களின்போது கோதானம் செய்து, பசுக்களின் பராமரிப்பிற்கு நன்கொடை அளித்தால், ரிஷிகளின் ஆசி கிடைக்கும். மேலும் தேவர்கள் மகிழ்ச்சியால் மனம் குளிர்ந்து நம்மை வாழ்த்துவார்க
- மாட்டுத் தொழுவத்தில் பசுவின் சாணம், கோமியத்தில் (கன்றுபோட்ட பசுவின் கோமியம்) சுத்தம் செய்து பித்ரு பூஜை செய்வதால், தேவர்கள் வந்து நேரடியாக நட வைப்பார்கள். பித்ருக்கள் ஆன்மா சாந்தியடைய உதவி செய்து, ஆரோக்கியம் அளித்து, அனைத்து தோஷங்களில் இருந்தும் விடுவித்து நீண்ட ஆயுளையும் அளிப்பார்க
- பசு மடத்தில் தினமும் நடைபெறும் கோபூஜையில் அன்பர்கள் நேரில் கலந்து கொண்டு கோமாதாவின் அருளை பெற வேண்டுகிறோ

**பசு மடத்தில் உள்ள வயதான நோயுற்ற பசுக்களில் ஒரு பசுவை பராமரிக்க**

| | | | |
|---|---|---|---|
| ஒரு வாரத்திற்கு ..... | ரூ.105.00 | ஒரு வருடத்திற்கு ..... | ரூ.5400.00 |
| ஒரு மாதத்திற்கு ..... | ரூ.465.00 | கோதானம் (பசுவும் கன்றும்) ..... | ரூ.9000.00 |

**பித்ருக்கள் நினைவாக வயது முதிர்ந்த, பால் வற்றிய, ஊனமுற்ற, நோயுற்ற பசுக்களை பசுமடத்தில் பாதுகாத்து பராமரிக்க உங்கள் அன்புக்காணிக்கையை கனிவுடன் மனமுவந்து தாரீர்**

- ரூ. 500 - அனுப்பும் அன்பர்களுக்கு வெள்ளியிலான ஸ்ரீராமர் பாதம் 2 அனுப்பி வைக்கப்படும்
- ரூ. 1000 - அனுப்பும் அன்பர்களுக்கு பசுவும், கன்றும் சேர்ந்த (கோமாதா) வெள்ளியிலான விக்ரகம் அனுப்பி வைக்கப்படும்
- ரூ. 2000 - அனுப்பும் அன்பர்களுக்கு வெள்ளியிலான துளசி மாடம் அனுப்பி வைக்கப்படும்
- ரூ. 3000 - அனுப்பும் அன்பர்களுக்கு வெள்ளியிலான தவழும் கண்ணன் அனுப்பி வைக்கப்படும்
- ரூ. 5400 - அனுப்பும் அன்பர்களுக்கு பெரிய வலம்புரி சங்கு அனுப்பி வைக்கப்படும்
- ரூ. 9000 - கோதானம் செய்யும் அன்பர்களுக்கு வெள்ளியிலான ஐஸ்வர்ய பெருமாள் விளக்கும், பசுவும் கன்றும் சேர்ந்த (கோமாதா) பித்தளையிலான பெரிய விக்ரகமும் அனுப்பி வைக்கப்படும்.

பசுவை பாதுகாக்க மேற்கண்ட நன்கொடையை அனுப்பும் அன்பர்களுக்கு (மஹாளய அமாவாசை அன்று) முன்னோர் வழிபாடு முறையா செய்து பிரசாதத்துடன் மேற்கண்ட பூஜிக்கப்பட்ட பொருட்கள் மற்றும் கோமாதா வண்ணப்படம் அனுப்பி வைக்கப்படும். பசுவை பாதுகாக்க ரூபாய் அனுப்பும்போது யாருக் திதி செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர் திதி மற்றும் கோத்திரம் போன்ற விவரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோ

முன்னோர்கள் நினைவாக மஹாளய அமாவாசை அன்று கோதானம், மகிஷ (எருமை) தானம், காராம் பசு தான செய்தால் பித்ரு தோஷம், புத்திர தோஷம், நாகதோஷம், ஆபிசார தோஷம், நவக்கிரஹ தோஷம், திருமண தடை வியாபாரத் தடை மற்றும் அனைத்து தோஷங்களும் விலகி ஐஸ்வர்யம் தங்களுக்கும், தங்களுடைய சந்ததியினருக்கும் கிடைக்கு

பணம் அனுப்பும் அன்பர்களுக்கு ரசீதும், மேற்கண்ட பிரசாதங்களும் மஹாளயபக்ஷம் முடிந்த பிறகு அனுப்பி வைக்கப்படு



நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.

தங்களால் இயன்ற அளவு நன்கொடையை Cheque / D.D/ M.O. மூலமாக Shri Ghosala Seva Trust, Chennai. என்ற பெயரில் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

# பசு மடம்

**(Recognised by Animal Welfare Board of India)**

**வயதான பசுக்கள் பாதுகாப்பு இல்லம்**

**பெருமாளகரம், திருவேற்காடு (P. O), சென்னை - 600 077.**

**TEL: 044 - 3299 9888 Fax: 044 - 4206 6525**



வாசல் அழகு

# வண்ணக் கோலங்கள்



23 புள்ளி ஒன்று விட்டு 15 வரை கோலம் பார்த்து புள்ளி வைக்கவும்.
- சுபாஸ்ரீ,
கோவை -41.



12 - 12 வரை (நேர்ப்புள்ளி)
- எஸ். ஜானகி சுப்ரமணியன்,
திருப்பூர் - 1.



நடுவரிசை 31 புள்ளி 16ல் நிறுத்தவும் (இடைப்புள்ளி)
- உமா வெங்கடேசன்,
சென்னை - 20



23 புள்ளி 12 வரை (சந்துப்புள்ளி)
- எஸ். லலிதா, சென்னை - 61.

# குட்டிச் செல்லத்துக்குக் கொட்டிக் கிடக்குது!



'பான் பேபீஸ் – லிட்டில் கிட்ஸ்'ல் (Born Babies Little Kids) நுழையும்போதே அது ஒரு தனி உலகம் என்பது பளிச்சென்று தெரிகிறது. பிறக்கப் போகின்ற குழந்தையிலிருந்து மூன்று வயது வரை உள்ள குழந்தைகளுக்கு மட்டுமேயான தனி உலகம்.

நம்மைப் போலவே அங்கு நுழைந்திருந்த லதாவுக்கு ஆச்சரியம் இன்னும் அடங்கவே இல்லை. தன் குட்டிக்கு அது வேண்டும், இது வேண்டும் என்று அந்த இளம் தாய் ஒரு பட்டியலையே கொண்டு வந்திருந்தார். ஆனால் 'பான் பேபீஸ் லிட்டில் கிட்ஸ்' கடைக்குள் நுழைந்த பிறகுதான் தெரிய வந்தது, மேலும் குழந்தைக்கான பொருள்கள் அங்கே நிறைய கொட்டிக் கிடக்கின்றன என்று.

குழந்தைக்கான குளியல் தொட்டி, எண்ணெய் மசாஜ் செய்யும்போது தேவைப்படும் ஷீட், குழந்தை சுகமாக தூங்குவதற்கு தேவைப்படும் மெத்தை, சிறிய தலையணை மற்றும் கொசுவலை எல்லாவற்றையும் வாங்கியாகிவிட்டது.

"அம்மா, இந்த ஜப்லா நைஸா இருக்கும்மா, நிச்சயம் என் குழந்தைக்கு உறுத்தாது" என்று லதா கூற, அவளது அப்பா "பெரியவர்களுக்கான Nail Cutter சின்னக் குழந்தைகளுக்குப் பயன்படுத்தக் கூடாது. அதனாலே இந்த Nail Cliper வாங்கிக்க. இந்த ஸ்வெட்டரைக் கூட யூஸ் செய்யலாம். மிருதுவாக இருக்கும். குழந்தைக்கு உறுத்தாது" என்றவரின் கண்களில் அலமாரியில் அடுக்கப்பட்டிருக்கும் Nasal Aspirator, Thermometer ஆகியவையும் கண்ணில் படுகின்றன. ஆமோதிப்பது போல் அவர் தலை அசைகிறது.

ஃபீடிங் பாட்டில், நிப்பிள், ப்ரஷ் போன்றவற்றைப் பார்த்து "வழக்கமான விஷயங்கள்தான். ஆனாலும் தரமானதாக இருப்பதைச் சொல்லியே ஆகணும்" என்கிற லதாவின் அம்மா முகம் சட்டென வியப்பாக மாறுகிறது. "ஃபீடிங் பாட்டிலையும், நிப்பிளையும் ஸ்டெரிலைஸ் செய்யும் கருவியும் இருக்கே. குட்" என்று பாராட்டுப் பத்திரம் வழங்குகிறார்.

பின் சட்டென அதே அம்மா வேறொரு பகுதியில் இருக்கும் சில பொருள்களை வாங்குவதில் கவனம் செலுத்தத் தொடங்குகிறாள்.

"என்னம்மா நீங்க என்ன தனியாக செலக்ட் செய்யறீங்க?" என்று லதா குரல் கொடுக்க, "உன் குழந்தையை நீ நல்லா கவனிச்சிக்கிறே. என் குழந்தைக்கு வேண்டியதை நான் வாங்க வேண்டாமா?" பதில் வருகிறது. அவளது கூடையில்

தலையணை', Breast Pump, இடுப்பு பெல்ட், Nipple Sheild, பால் கொடுப்பதற்கு ஏதுவான நைட்டிகள் மற்றும் பிரேசியர்கள் காட்சியளிக்கின்றன.

"குழந்தைகளுக்கான உடைகளை டிசைன் செய்வது நீங்கதானா?" என்று பான் பேபீஸ் உரிமையாளர்களைக் கேட்டோம்.

"வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகும் அதே தரம் கொண்ட குழந்தை களுக்கான உடை களை உள்நாட்டிலும் தரவேண்டும் எனும் எங்களுடைய நோக்கம் தான் பான் பேபீஸைத் தொடங்கவைத்தது" என்கிறார்கள்.

இவர்கள் கூறுவதை நம்ப முடிகிறது. காரணம் இவர்களுக்கு இந்தத் துறையில் உள்ள நீண்ட அனுபவம். இருபது வருடங்களாக திருப்பூரில் ஆடை தயாரிப்பில் ஈடுபட்டவர்கள். 2002ல் கோவையில் 'பான் பேபீஸ்' முதலில் துவங்கப்பட்டது. இப்போது சென்னையில் அண்ணாநகரிலும், நுங்கம்பாக்கத்திலுமாக இரு கிளைகள், கொச்சினில் ஒரு கிளை என்று படர்ந்துள்ளது.

'குழந்தை பிறப்பதற்கு முன்னாலேயே அதுக்காக எதுவும் வாங்கக் கூடாது. கண்படும்' எனும் உறவினர்களின் செண்டிமெண்ட் ஒருபுறம். 'பிரசவமானால் கொஞ்ச காலத்துக்காவது கடைக்கு வரமுடியாதே. பிறகு எப்படி என் செல்லத்துக்கு என் இஷ்டப்படி அழகான பொருள்களை வாங்குவது?' என்கிற ஆதங்கம் மறுபுறம். இரண்டையும் அழகாக பாலன்ஸ் செய்கிறார்கள் இந்தக் காலத்து புத்திசாலிப் பெண்கள். குழந்தைக்கான பொருள்களை தன் விருப்பத்துக்கு வாங்கிய ஒரு கர்ப்பவதி "இதையெல்லாம் பேக் செய்து வச்சுடுங்க. குழந்தை பிறந்ததும் தகவல் சொல்றோம். அப்போ டெலிவரி செஞ்சுடுங்க" என்றார். இந்த 'டெலிவரிக்குப் பிறகு டெலிவரி' டெக்னிக் நன்றாகவே பரவி வருகிறதாம்.

பொருள்களைத் தேர்வு செய்துவிட்டு உரிய தொகையைச் செலுத்திவிட்டால் இலவசமாக வீட்டில் கொண்டு சேர்க்கும் 'ஃப்ரீ டோர் டெலிவரி' வசதியை அளிக்கிறார்கள் 'பான் பேபீஸ்' நிறுவனத்தினர்.

வாசகர்கள் மேலும் விவரங்களை அறிந்து கொள்ள, கீழ்க்கண்ட தொலைபேசிக்குத் தொடர்பு கொண்டால் அவர்களே பிறந்த குழந்தைக்குத் தேவையான பொருட்கள் அடங்கிய அட்டவணை

# அதிர்ஷ்டத்

மழைக்குக் கூட இந்த மாதிரி கடைகளில் ஒதுங்காதவள் உச்சி வெயிலிலிருந்து தப்பிக்க ஆழ்வார்ப்பேட்டை 'ஹெல்த் அண்ட் குளோ' கடைக்குள் நுழைந்தேன். 'ஜிலுஜிலு' என்று ஏசி குளிருக்குள் இதமாய் நடந்தேன். ஒவ்வொரு ஷெல்ஃபிலும் அடுக்கி வைக்கப்பட்டிருந்த அழகு சாதனப் பொருட்களை நோட்டம் விட்டு வந்த எனது கண்கள், ஓர் இடத்தில் 'டக்' என்று சீரியல் முடிவு மாதிரி ஃப்ரீஸ் ஆயின.

''ஃபேர் அன் லவ்லி' ஒரு டியூப் வாங்கி, கூப்பன் ஒன்றில் உங்கள் பெயர், விலாசம், தொலைபேசி எண் நிரப்பி பெட்டியில் போட்டுச் செல்லுங்கள். பரிசு மோட்டரோலா செல்ஃபோன்'' என்ற பலகை என்னை இழுத்தது.



எனக்கு இறைவன் தந்த 'ஃபேர்' போதும் 'லவ்லி' எதேஷ்டம்! இருந்தாலும் வாங்கினேன்.

ஐஏஎஸ்க்கு விண்ணப்பம் செய்யும் சிரத்தையுடன் கூப்பனை வாங்கினேன், அதிர்ஷ்ட தேவதையை வேண்டியவாறு நிரப்பி, செல்ஃபோன் எண்ணையும் எழுதினேன். (லேண்ட்லைன் எண் தருவதில்லை. வீட்டில் இல்லாதபோது அழைப்பு வந்தால் பரிசு தவறிப் போய்விடுமே!)

அழகாக மடித்து, கூப்பனை பெட்டியில் போட்டு, உள்ளே நுழைந்ததா என்று எழுதிய பேனாவால் குத்திக் தள்ளி ஊர்ஜிதப்படுத்திய பிறகு, ரசீதை என் ஹாண்ட்பாகில், ரகசிய கோடவுனுக்குள் பத்திரமாகச் செருகிவிட்டு, கடையை விட்டு வீடு திரும்பினேன்.

சில வாரங்கள் கழித்து ஒரு நல்ல நாளில் என் செல் 'ஜிங்கிள்' பண்ணியது. ''கோமதி நடராஜனா?'' ''ஆமா, நான்தான் பேசறேன்...''

''மேடம் நாங்க ஹெல்த் அண்ட் குளோவிலிருந்து பேசறோம்... (வாவ்...!) ''...உங்களுக்கு... மோட்டரோலா செல்ஃபோன் பரிசு விழுந்திருக்கு... நாளைக்குச் சாயங்காலம் ஐந்து மணிக்கு




# தேவதையின் செல்லக்குட்டி!

வந்து பரிசை வாங்கிக்க லாம்... மறக்காம ரசீதைக் கொண்டு வாங்க...''

மறுநாள் மாலை ஐந்து மணிக்கு கடைக்குள் நுழைந்தேன். அங்கே என்னைப் போல் மேலும் ஆறு அதிர்ஷ்டசாலிகள் பூரிப்போடு நின்று கொண்டிருந்த னர்.

ஒவ்வொருக்கும், கடை உரிமையாளர், மானேஜர், அதிகாரிகள், மோட்டரோலா அதிகாரிகள் என்று வரிசையாகப் பரிசைத் தந்து ஒரு ஃபிளாஷ் அடித்து, வாழ்த்தி அனுப்பி வைத்தனர்.

கணக்கிட்டுப் பார்த்தால் இது எனக்கு இரண்டாவது செல்ஃபோன்; 15வது அதிர்ஷ்டப் பரிசு. '78ல் தொடங்கி, தையல் மெஷின் (பாம்பே டையிங் போட்டி) கறுப்பு வெள்ளை டெலிரமா டிவி (ஹார்லிக்ஸ் தந்தது), பானசோனிக் 2 இன் 1 (இம்ப் ரெஸ் பிரெஸிங் சென்டர்), நோகியா செல்ஃபோன் (முருகன் ஸ்டோர்), சாம்சங் வாஷிங்மெஷின் (மோர் ஃபார் யூ...) 2 கிராம் தங்க நாணயம் (ஆல் அவுட்). இவை போக உதிரி உதிரிகளாக, கிஃப்ட் செக், குழந்தைகளுக்கான டிஜிடல் வாட்ச், சினிமா டிக்கெட் இத்யாதி... இத்யாதி...

இதையெல்லாம் ஏன் எழுதுகிறேன் என்றால், சும்மா பீற்றிக் கொள்ள அல்ல! கடைகளில் இதுபோல் விளம்பரம் கண்டால், ''நமக்கெங்கே கிடைக்கப் போகிறது?'' என்றோ, ''இவையெல்லாம் ஏமாற்று வேலை, வியாபாரத் தந்திரம்'' என்றோ அலட்சியமாய்ப் போகாதீர்கள்.

அதிர்ஷ்டதேவதைக்கு, நான் மட்டும்தான் செல்லக்குட்டியா? நீங்களாகவும் இருக்கலாம். உங்கள் வீட்டுத் தொலைபேசியும் ஒருநாள் இதுபோல் இன்ப அதிர்ச்சியைத் தரலாம். முயன்று பாருங்கள்.

பொருளின் மதிப்பை விட பரிசு பெற்றோர் என்ற செய்தி தரும் பூரிப்பு, பரிசு கிட்டவில்லையென்றாலும் கலந்து கொண்ட களிப்பு இரண்டையும் அனுபவித்துப் பாருங்கள், புரியும்!

- கோமதி நடராஜன்,
சென்னை - 28.



## ஆஹா 50!

சாம்பார் பொடிக்கு மிளகாய் அரைக்கும்போது குண்டு மிளகாயை மட்டுமே போடாமல் சரிக்குச் சரி நீள மிளகாயையும் கலந்து பொடி அரைத்தால் காரமாகவும், நிறமாகவும் இருக்கும்.

- என். விஜயலெட்சுமி,
தபோவனம்.

*சாந்தி பாபுவின் வயது இருபத்தியெட்டு. ஆனால் எட்டியுள்ள சாதனைகளின் உயரம்... அண்ணாந்து பார்க்க வைக்கிறது.*

# காலையில் காலேஜ்.

**கா**லையில் அவர், மாணவ - மாணவிகளின் மனம் கவர்ந்த கல்லூரி விரிவுரையாளர். மாலையில் கிராமப்புற மக்களின் மனம் நிறைந்த, ஊராட்சி ஒன்றியக் குழுத் தலைவி. இத்தனைக்கும் அவருக்கு வயது இருபத்தியெட்டு மட்டுமே. இத்தனை இளம் வயதில் ஊராட்சி ஒன்றியக் குழுத் தலைவியாக பதவியேற்றுள்ளது, இந்தியாவில் முதன் முதலில் சாந்திபாபு ஒருவர்தான்.

''**கோ**வை, ராம கிருஷ்ணா பொறியியல் கல்லூரியில் பி.இ. பயின்றேன். அதன் பின்னர் நான்கு ஆண்டுகள் விரிவுரை யாளர் பணியாற்றிவிட்டு, எம்.ஈ. தேர்ச்சி பெற்றேன்.

''அதன் பின்னர் கோவை, கருமத்தம்பட்டியில் உள்ள தமிழ்நாடு பொறியியல் 'தனியார்' கல்லூரியில், கணிப்பொறித் துறையில் விரிவுரையாளராகச் சேர்ந்தேன். இந்த நிலையில் ஊராட்சி மன்றத் தேர்தல் வந்தது. கல்லூரி காலங்களிலேயே என்.எஸ்.எஸ். பிரிவில் இருந்து, பல கிராமங்களிலும் சமூகப் பணி செய்துள்ள தால், ஊராட்சித் தேர்தலில் போட்டியிட ஆர்வம் கொண்டேன். எனது கிராமமான நம்பியாம்பாளையம் வார்டு மெம்பராகப் போட்டியிட்டு வென்றேன். அதன் பிறகு ஊராட்சி ஒன்றியக் குழுத் தலைவியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன்.

கடந்த இரண்டு வருடங்களாகக் காலையில் கல்லூரிக்குப் போகிறேன்.



★ கல்விப் பணியில்...

மாலையில் கிராமப்புறங்களுக்கு சென்று வருகிறேன்!'' என்கிறார் அவினாசி ஊராட்சி ஒன்றியக் குழுத் தலைவி சாந்தி பாபு.

**அ**வினாசி ஊராட்சி ஒன்றியம், முப்பத்தியொரு கிராம ஊராட்சிகளைக் கொண்டது. இவற்றில் இருநூற்றி முப்பது குக்கிராமங்கள் இருக்கின்றன. இவற்றில் வசித்து வரும் ஒவ்வொருவரும், ஊராட்சி ஒன்றியக் குழுத் தலைவிக்கு நன்கு அறிமுகமாகியுள்ளனர். தான் உற்சாகமாகச் செயல்பட இதுவே முதல் காரணம் என்று சொல்கிறார் சாந்தி பாபு.

''தினசரி சாயந்திரமாச்சுன்னா, ஏதாவது ஒரு கிராமத்துல இருப்பாங்க. சனி,

இளைய சாதனை

# மாலையில் வில்லேஜ்...

"சேவூர் ஆரம்பச் சுகாதார ஆஸ்பத்திரியில முன்னெல்லாம் பிரசவக் கேசுன்னா அவினாசிதான் போகணும். சாந்தியம்மா வந்ததுக்கப்புறம்தான், எங்க ஊராட்சி ஒன்றியத்துல இருக்கற அரசு ஆரம்ப சுகாதார நிலையங்கள்ல பிரசவக் கேசுகளை எடுத்துக்கிறாங்க. தினசரி அறுபது பேர் புறநோயாளியா வந்து பார்த்துட்டுப் போறாங்க!'' என்கிறார் மூலக்குரும்பம்பாளையம் கிராமத்தின் கூலித் தொழிலாளி செல்வராஜ்.

"நான் பணிபுரியும் கல்லூரியின் மாணவ-மாணவியரிடையே 80 யூனிட் ரத்தம் பெற்று, திருப்பூர் அரசு மருத்துவமனைக்கு அனுப்பி வைச்சோம். அனைத்துக் கிராமங்களிலும் போலியோ சொட்டு மருந்து மருத்துவ முகாம் நடத்தியுள்ளோம். ஒவ்வொரு மாதமும் வெள்ளிக்கிழமைகளில் 'வருமுன் காப்போம்' மருத் துவமுகாம் நடத்தி வருகிறோம். எங்கள் வட்டார வளர்ச்சி அலுவலர் மற்றும் அனைத்துக் கவுன்சிலர்களும் என்னு டைய பணிகளுக்கு முழு ஒத்துழைப்பு தந்து வருகின்றனர். நான் பணிபுரியும் கல்லூரி நிர்வாகமும், எனது கணவரும் என்னை மேலும் உற்சாகப்படுத்தி வருகின்றனர்!'' என்கிறார் சாந்தி பாபு.

ஞாயிறு அவங்களுக்கு காலேஜ்ல லீவு. அந்த இரண்டு நாளும் ஒவ்வொரு கிராமமா போயிடுவாங்க. இதுவரை இவர் தலைமைதாங்கிய ஒன்றியக் கவுன்சிலர்கள் கூட்டத்தில் சின்ன சலசலப்பு கூட நேர்ந்ததில்லை. காரணம், அனைவரது கருத்துகளையும் பொறுமையாகக் கேட்டு, அவற்றில் சிறந்ததைத் தேர்ந்



★ கிராமப் பணியில்...

தெடுத்து செயல்படுவதே'' என்கிறார் கானூர் ஊராட்சி உதவியாளராகப் பணியாற்றி வரும் கோமதி.

அவினாசி ஊராட்சி ஒன்றியத்துக்கு உட்பட்ட கிராமங்களில், அரசு ஆரம்ப சுகாதார நிலையங்கள் மூன்று இடங்களில் இயங்குகின்றன. இருபத்தைந்து இடங்களில் கிளை சுகாதார மையங்கள் செயல்படுகின்றன. அரசு ஆரம்ப சுகாதார நிலையங்கள் இருபத்தி நான்கு மணி நேரமும் இயங்கி வருகின்றன. திடீர் 'விசிட்' அடித்து, கண்காணிப்பதும் உண்டு. அப்படிச் செய்ததில், கையும் களவுமாக மாட்டிக் கொண்டார் டாக்டர் ஒருவர்! தற்போது அந்த மருத்துவர், அவினாசி ஊராட்சி ஒன்றியத்தில் பணியிலும் இல்லை!



- கட்டுரை, படங்கள் : ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

*ரஜினி பாலசுப்ரமணியன், சென்னை.*
*பெண்கள் 'நகை-கவை'யிலிருந்து நகைச்சுவைக்கு மாறுவது எப்போது?*

பொன்னகையை விடப் புன்னகையே போதுமானது எனப் புரிந்து கொள்ளும் போது.

**எஸ். ராதாகிருஷ்ணன், பாபநாசம்.**
*ஐ.பி.எல். மாதிரி உங்களை ஏலம் எடுத்துட்டாங்களா? பாப்பையா பட்டி மன்றம் தவிர எதிலும் பங்கேற்பதில்லையே?*

'நான் என்ன 'தோனியா?' ஏலத்தில் 'போணி'யாவதற்கு! சாலமன் பாப்பையா சார்தான் என்னை அறிமுகம் செய்தவர். அதனால்தான் கூடுமானவரை, ஐயாவின் நிகழ்ச்சிகளில் மட்டும் இடம்பெறுகிறேன்.

*...டியதை முன்பே தயாரிப்பீங்களா? இல்லை திடீர்னு தோணுவதைப் பேசுவீர்களா?*

தயாரிப்பு பாதி; சமாளிப்பு மீதி. ''ஒண்ணு வாங்குனா ஒண்ணு இலவசம்னு'' ஷாப்பிங் பண்றாங்க. இதே ரேஞ்சுல போச்சுன்னா எதிர்காலத்துல 'துடைப்பம் வாங்குனா குப்பை இனாம்'ன்னு விளம்பரம் வந்தாலும் வரும்...

''மெட்டி ஒலி முடிஞ்சாத்தான் ரொட்டி ஒலி...''

இவையெல்லாம் மேடையில் தோன்றிய இன்ஸ்டன்ட் ஜோக்குகள்.

**பூரணி, காசிதபுரம்.**
*எப்படி இவ்வளவு 'ஸ்லிம் ராஜாவா' மெயின்டெய்ன் பண்றீங்க? என்ன டயட் சாப்பிடறீங்க?*

வேறென்ன தயிர் சாதந்தான்... அடிக்கடி பயணம் பண்றதால அரை வயித்துக்குச் சாப்பிட்டே பழகிட்டேன்... அதுவும் ஒரு காரணம்... அன்னலட்சுமிகளான பெண்களை அடிக்கடி கேலி பண்ணிப் பேசுறதால 'சாப்பிடுற எதுவும் சத்தியமா உடம்புல ஒட்டாது'ன்னு சாபம் போட்டுச் சந்தோஷப்படுறாங்க எதிரணிப் பேச்சாளர்கள்...

# நீங்க பட்டத்து ராஜா

வாசகியரின் 'லகலக' கேள்விகளுக்கு பட்டிமன்றம் ராஜா தந்த 'கலகல' பதில்கள்!

**எம். ஷாலினி, சேலம்.**
*பெண்களிடம் நகைச்சுவை உணர்வு ஏன் அதிகம் இல்லை?*

'பொம்பளை சிரிச்சாப் போச்சு'ன்னு சமூகம் போட்டு வச்ச தடைகளையெல்லாம் தாண்டி வளர்ந்துட்டாங்க இன்றைய பெண்கள். 'டீன் ஏஜ்ல' பையன்களை விடப் பொண்ணுங்கதான் பள்ளி, கல்லூரி கள்ல படுஜாலியா இருக்கறாங்க. மெகா தொடர் மேனியா இருக்கறதாலேயே பெண்களை நகைச்சுவை உணர்வில்லாதவங்கன்னு முடிவு கட்டிடாதீங்க ஷாலினி மேடம்...!

**ப்ரீத்தா ராமஸ்வாமி, சென்னை.**
*மேடையில் பேச வேண்...*

**கே.எஸ். கிருஷ்ண வேணி, குடந்தை.**
*உங்கள் பெற்றோர் பற்றி...?*

தந்தை : அமரர்

## பெப்பர் பாப்கார்ன்

ஜே. சிம்சன். ஆரம்பப் பள்ளித் தலைமை ஆசிரியராய்ப் பணி யாற்றியவர்.

தாயார் : திருமதி கமலாபாய் - ஆசிரியப் பணியில் ஓய்வுபெற்று என் இல் லத்தைத் தன் பிரார்த்தனைகளால் தாங்கு பவர்.

**எஸ். லலிதா, சென்னை.**

*பெண்களை ரொம்பவே கலாய்க்கிறீங் களே! சொந்த வாழ்க்கை அனுபவமா?*

ஆமாங்க... அய்யோ! இல்லீங்க... (ஏன்னா அந்தம்மாவும் மங்கையர் மலர் வாசகிதானே!) உலக நடப்புக்களை உற்றுப் பார்த்து கொஞ்சம் கற்பனை மசாலா கலந்து பரிமாறுறதுதான் நெசமுங்க.

**புவனா சர்மா, சீர்காழி.**

*எதிர்காலத்தில் சினிமாவுல கதா நாயகனாக நீங்க உலாவரப் போறதா செய்தி அடி படுதே?*

செய்தி 'அடிபட்டா' சிக்கல் இல்லை. செய்தி நிஜமாகி ஒரு வேளை நான் 'அடிபட்டா, கையெ ழுத்து கூடப் போடத் தெரியாதவர், கவுன்சிலர் ஆக ஆசைப்படலாம்; பிரதமர் ஆக பேராசைப்படலாமா? அப்பா வேஷமே இந்த மூஞ்சிக்கு அதிகபட்சம்மா...!

**சி.என். ரமாதேவி, சென்னை.**

*'எஸ். ராஜாவான நீங்கள் 'நோ' சொன் னது எப்போது? ஏன்?*

'எஸ்' சொல்ல முடியாதபோதெல் லாம்... சமீபகாலமா 'நான்-வெஜ்ஜுக்கு' 'நோ'... 'உயிர்(கள்)' மீது கொண்ட அக்கறையால்.

**கே. வெங்கடேஷ், மும்பை.**
**மு.ரா. பாலாஜி, கோலார்.**
**ராஜேஸ்வரி வெங்கட், சென்னை.**

*பட்டிமன்றப் பேச்சாளராகத் தயாராவது எப்படி?*

நெறைய வாசிக்கணும்... நெதமும் யோசிக்கணும்.. சமூகத்தை நேசிக்கணும்... அப்புறமா கடவுள் அருளும் கனிந்து வந்துட்டா செந்தமிழும் நாப்பழக்கந்தான்.

**பத்மா பாஸ்கர், ஆழ்வார்ப்பேட்டை.**

*பட்டிமன்றத்தில் மனைவி, பிள்ளை கள் பற்றிப் பேசுவதெல்லாம் 'ரீலா'- 'ரியலா?*

'அந்த நியூஸ்பேப்பரைக் கொஞ்சம் எடுங்க... கோதுமை மாவு சலிக்கணும்'

# ஆனால்?



என்று என் வீட்டம்மா ஒருநாள் காலையில என்கிட்டச் சொன்னதைக் கொஞ்சம் கற்பனைக் கலந்து, 'என் மனைவி காலங் கார்த்தால கையில பேப்பரை எடுத்தான்னா மாவு சலிக்கப் போறான்னு அர்த்தமுன்னு சன் டி.வி. பட்டிமன்றத்துல பேசிப் பிறகு வசமா வாங்கிக் கட்டுனேன். மேடைப் பேச்சுக்கு மெருகூட்டுவதே கற்பனை கலந்த நிஜம்தானே!

**சுபா முராரி, சேலம்.**
***சிரிக்காத மனிதர்களைப் பற்றி என்ன நினைக்கிறீங்க?***

ரொம்ப சீரியஸ்ஸானவங்கன்னு நெனைக்கிறேன். எல்லா நேரத்திலேயும் நாம சிரிச்சுக்கிட்டே இருக்கவும் முடியாது...

ஒருநாள் காலையிலேருந்து எதுவும் சாப்பிடாம, வாய் வழியா நீளமான 'என்டோஸ்கோப்பி' கருவியை வயித்துப் பக்கமா நுழைச்சு, டெஸ்ட் பண்ணி முடிச்சு, உடம்பும் மனசும் நொந்து போக, டாக்டர் ரூமை விட்டு மதியம் ஒருமணிக்கு நான் வெளியே வந்தா ''சார்.. டீவியிலே யெல்லாம் ஜோக்கடிக்கிறீங்களே.. இப்ப என்ன சார் 'உம்முனு' இருக்கீங்க?''ன்னு ஒரு அம்மா என்கிட்ட கேட்டாங்க. அப்ப என் நிலைமையைக் கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க!



**ஆர். மீனலதா, மும்பை.**
***பேச்சுக்கு நடுவே மனைவியை அடிக்கடி கிண்டல் பண்றீங்களே - கண்டிப்பாங்களா? கண்டுக்க மாட்டாங்களா?***

ஆரம்பத்துல கொஞ்சம் தஸ்ஸு புஸ்ஸுன்னு குதிக்க, தரையை டேமேஜ் பண்ணுனாங்க. இப்பல்லாம் தண்ணி தெளிச்சு விட்டுட்டாங்க. கண்டுக்கிறது இல்லை.

**என். கோமதி, நெல்லை - 7.**
***பட்டிமன்ற ராஜா, 'பட்டத்து ராஜா'வாகி பாப்பையா தாத்தா 'மந்திரி' ஆனால்?***

'ஆராய்ச்சி மணி' அடிச்சாக்கூட 'ஐயா'தான் பெல் அடிக்குறாருன்னு நெனச்சு 'அரசர்'ங்கிறதையும் மறந்து, பேச்சை நிறுத்திக்குவேன்... (பட்டி மன்ற ஞாபகந்தான்)

**எம். சுபா, சேலம்.**
***தங்களுக்குப் பிடித்த நகைச்சுவை நடிகர்?***

நடிகர் கவுண்டமணி... அவரோட 'டைமிங்' ரொம்ப சூப்பர்!

**பிருந்தா ரமணி, மதுரை.**
***வங்கிப் பணியிலிருந்து பட்டிமன்றங்களுக்கு வந்ததெப்படி?***

பேராசிரியர் சாலமன் பாப்பையாவின் பேச்சில் மயங்கி 1976 முதல் ஒரு 'எடுபிடி' மாதிரி அவருக்குப் பின்னால் சுற்றித் திரிந்தவன் நான். 1984ல் வங்கிப் பணிக்கு வந்தப்புறமும் இந்த வாலென்டரி சர்வீஸ் தொடர்ந்தது. 1991ம் ஆண்டு ஜூலை 18ம் தேதி அன்னிக்கு மதுரையில நடந்த ஒரு பட்டிமன்றத்துக்குப் பேச்சாளர் ஒருத்தர் வர முடியாமல் போனதால 'சப்ஸ்டிடியூட்டா' என்னை மேடையேற்றினார் ஐயா. அன்று தொடங்கியது, மக்கள் ஆதரவோடு இன்றும் தொடர்கிறது.

# படிக்க... பயன் பெற...

**டயானா - ஒரு தேவதைக் கதை - ச. ந. கண்ணன், கிழக்கு வெளியீடு, சென்னை - 18. விலை ரூ. 70.00**

இங்கிலாந்து இளவரசி டயானாவின் சுவையான வரலாறு. விபத்தா கொலையா என்கிற பிரச்னை இன்னும் கூட நிழலாடுகிறது. துணிச்சல் மிக்க தேவதையை நேருக்கு நேர் சந்திக்கும் பிரமை உண்டாகிறது.



**மந்திரங்களின் மஹத்துவம் - வை. ராஜகோபாலகனபாடிகள் வைதிகஸ்ரீ வெளியீடு. 488,**













**டி.டி.கே. சாலை, சென்னை - 600 018 விலை ரூ. 100.00**

மந்திரங்களின் பொருள் புரிந்து சொல்லும் போது கிடைக்கும் மகிழ்ச்சியே அலாதியானது. ஆசமநம் உட்படச் சிறு சிறு மந்திரங்களுக்கும் வடமொழி எழுத்து, தமிழ் வரி வடிவம் என்று தந்து உரிய விளக்கமும் தந்திருக்கிறார் ஆசிரியர்.

**மன ஊஞ்சல் - அனுராதா ரமணன், தங்கத் தாமரை பதிப்பகம், 37, கால்வாய்க் கரை சாலை, கஸ்தூரிபா நகர், சென்னை - 20. விலை ரூ. 65.00**

வாழ்க்கையின் கடந்து போன நாட்களை நினைவில் கொண்டு வந்து அசை போடுவது சுகமோ சுகம். அப்படிப்பட்ட மகரந்த நினைவுகளை எழுத்தாக்கி மகிழ்விக்கிறார் ஆசிரியை.

**குறைந்த செலவில் கைவினைப் பொருள்கள் தயாரிப்பு ரமணி ரங்கநாதன், மணி மேகலைப் பிரசுரம், சென்னை - 17. விலை ரூ. 40.00**

பாக்குத் தட்டு ஓவியங்கள், மரத்தூள், பத்திக் பாணி, எக்ஸ்ரே ஃபிலிம் பெயிண்டிங் போன்ற பல நுட்பமான கலைகளைப் பற்றிய செய்முறை விளக்கங்கள்.

**ஆகாய ஆசைகள் - ஜேம்ஸ் ஹாட்லீ சேஸ், தமிழில் சுதாங்கன். கண்ணதாசன் பதிப்பகம், சென்னை - 17. விலை ரூ. 100.00**

'ஹூ ஹாவ் காட் இட் கமிங்' என்ற தலைப்பில் சேஸ் எழுதிய விறுவிறுப்பான நாவல் இப்போது சுதாங்களின் அழகு தமிழில்! பாத்திரப் பெயர்கள் மட்டும் ஹாரி, ஜோன், குளோரி என்று உறுத்தாவிட்டால், இதை மொழிபெயர்ப்பு நூல் என்று சொல்லவே முடியாது. அத்தனை சரளமான நடை.

**யாரென்று மட்டும் சொல்லாதே - இந்திரா சௌந்தர்ராஜன், திருமகள் நிலையம், சென்னை - 17. விலை ரூ. 70.00**

விறுவிறுப்பான மர்மக் கதை. அமானுஷ்யமான நிகழ்வுகளைக் கண்முன் காட்டுவதில் ஆசிரியர் திறமையானவர்.

- வாசகன்


















## தேவையான பொருட்கள்

- மண் பானை - 1 (விருப்பத்திற்கு ஏற்ப)
- ஃபேப்ரிக் பெயிண்ட் (விருப்பத்திற்கு ஏற்ற நிறங்கள்)
- பேர்ல் கலர் (அ) மெட்டாலிக் கலர் (பானை பளபளப்பாகத் தெரிய...)
- 3 பெயிண்ட் அடிக்க தனித்தனியே பிரஷ் ('0' '2' மற்றும் '8' நெ. அளவுள்ளது)
- வெள்ளை நிற எம்சீல் (பூக்கள் போன்ற

# மண்பானையில்

குறிப்பு : தற்மயம் கோடைக்காலம் என்பதால் மண்பானைகள் எல்லா ஊர்களிலும் நிறைய வடிவங்களில் கிடைக்கின்றன. மெட்டாலிக் பெயின்ட் ஆனது, கோல்டு, சில்வர் மற்றும் காப்பர் ஆகிய நிறங்களில் மட்டுமே கிடைக்கும். தேவையான மற்ற பொருட்கள் அனைத்தும் ஃபேன்ஸி கடைகள், ஆர்ட் அண்ட் கிராஃப்ட் கடைகளில் கிடைக்கின்றன.

## செய்முறை

முதலில் வெள்ளை நிற ஃபேப்ரிக் கலர் பெயின்டை தேவையான அளவுக்கு வர்ணம் கலக்க உதவும் சிறு தட்டில் ஊற்றவும். இந்த பெயின்ட்டுடன் சிறிது தண்ணீர் (சுமார் 5 சொட்டு) சேர்த்து 8 நெ. பிரஷ் கொண்டு நன்றாகக் கலக்கவும். (எந்த ஃபேரிக் பெயிண்டாக




வடிவங்கள் செய்து பானையில் ஒட்டுவதற்கு).

- சார்கோல் (Charcoal) பவுடர் - 50 கிராம் (எம்சீல் பிசையும்போது கையில் ஒட்டாமல் இருக்க)
- செயற்கை மலர்கள் (பூக்கள் செய்யும்போது அதன் நடுவே வைப்பதற்கு - விருப்பமான நிறங்களில்)



# மலர் ஓவியம்!

இருந்தாலும் சிறிது தண்ணீர் சேர்த்துத்தான் அடிக்க வேண்டும்).

பின்னர் நாம் தேர்ந்தெடுத்த மண் பானையின் மீது, கலக்கி வைத்த வெள்ளை நிற பெயிண்ட்டை முழுவதுமாக பிசிறின்றி அடிக்கவும். (முதன் முதலில் மண் பானையில் வெள்ளை நிற பெயிண்ட் அடித்து



விட்டு, பின்னர்தான் நம் விருப்பத்திற்கு ஏற்ற நிறத்தை அடிக்க வேண்டும். அப்போதுதான் பானையின் நிறம் பளிச்சென்று நன்றாகத் தெரியும்). பெயிண்ட் நன்கு காய்ந்த பிறகு கறுப்பு (அ) நாம் விரும்பும் நிறத்தை பியர்ல் (அ) மெட்டாலிக் கலருடன் நன்றாகக் கலந்து மீண்டும் பானையில் அடிக்க வேண்டும். இப்போது பானை பளபளப்பாக இருக்கும்.

எம்சீலை சிறிதளவு கத்தியால் வெட்டி எடுத்து சார்க்கோல் பவுடரை (கிடைக்கவில்லை என்றால் நாம் முகத்திற்குப் பயன்படுத்தும் டால்கம் பவுடரையே பயன்படுத்தலாம்) கையில் தடவிக்கொண்டு முழுவதும் வெள்ளை நிறமாக வரும் வரை நன்றாகப் பிசையவும்.

பிசைந்த அரைமணி நேரத்திற்குள் நமக்குத் தேவையான பூக்கள் வடிவத்தை செய்திட வேண்டும். இல்லையென்றால் எம்சீல் காய்ந்துவிடும். பூக்கள் தயாரானதும் நமக்கு விருப்பமான இடத்தில் பானையில்

# பஞ்சாமிர்தம்!

எஸ். தாயாரம்மாள்
பி. லக்ஷ்மிபாய்
டி. கீதாராணி
மஞ்சுளா தேவி
காரிகா.



ஒட்டி விடவும். (இதைப் போல் எத்தனை பூக்கள் மற்றும் இலை, கொடிகள் தேவையோ அவற்றைச் செய்து பானையில் ஒட்டவும்). பிறகு செயற்கை 'பட்'டை கொத்தாக மடித்து பானையின் நடுவே எம்சீல் காய்வதற்குள் ஒட்டவும்.

இந்தப் பூக்கள் நன்கு காய்ந்த பிறகு, (சுமார் 1 மணி நேரமாகும்) அந்தப் பூக்கள் மற்றும் இலை, கொடிகள் மீது நாம் விரும்பும் கலர் பெயிண்ட்டை வர்ணம் கலக்க உதவும் சிறு தட்டில் ஊற்றி, white pearl கலருடன் நன்றாகக் கலந்து பெயிண்ட் அடிக்கவும். (இதற்கு '0' நெ. (அ) '2' நெ. பிரஷ்ஷை பயன்படுத்தலாம்).

பூக்கள் ஒரே நிறமாக இல்லாமல் வெவ்வேறு நிறங்களில் இருந்தால் மிகவும் அழகாக இருக்கும். முக்கியமாக பூவின் இதழ்களின் ஓரங்களில் அழகிய மெல்லிய கோடுகளாக பெயிண்ட் அடித்தால் பூக்கள் எடுப்பாகவும் அழகாகவும் தெரியும்.

பின்னர் பானையின் கழுத்து மற்றும் மேற்பகுதியில் நமக்கு விருப்பமான ஓவியத்தை வரையலாம். எல்லா வேலைகளும் முடிந்தபிறகு கடைசியாக அழகிய செயற்கைப் பூங்கொத்தை, பானையில் வைத்துவிடவும்.

இப்போது அழகான பானை ஓவியம் ரெடி. இதை வீட்டின் வரவேற்பறை, படிப்பறை போன்ற இடங்களில் வைத்தால் நம் வீட்டிற்கு மேலும் அழகு சேரும்!

கலை, படங்கள் :
ஜெயகிருஷ்ணபிரியா தமிழரசன்,
ஈரோடு - 1.





தாத்தா : ஆர். காமேஷ்
பாட்டி : லதா காமேஷ்
பேரன் : ரோஹித் ராமச்சந்திரன்

தாத்தா : எல். சேஷன்
பாட்டி : சாரதா சேஷன்
பேத்தி : எல். மைதிலி சௌதாமினி







தாத்தா : இ. நாராயணன்
பாட்டி : இ. தாட்சாயணி
பேரன் : க. அபிஷேக்





தாத்தா : ராமநாதன்
பாட்டி : ரமாதேவி
பேரன் : ஸ்ரீராம்

தாத்தா : அம்புராணி க. நாராயணன்
பாட்டி : என். செண்பகவல்லி
பேரன் : எஸ். முத்துச்சுப்பிரமணியன்



# என் செல்லமே!

# ஜெயஸ்ரீ ராஜ் நினைவுச்

## வாசகியரே...
## உங்கள் படைப்புத் திறனை நிரூபிக்க மீண்டும் ஒரு வாய்ப்பு!

மும்பை ஜெயஸ்ரீ ராஜ் கல்கி, மங்கையர் மலர் வாசகியருக்கு நன்கு அறிமுகமானவர், நல்ல எழுத்தாளர், சிறந்த பேட்டியாளர். மறைந்த ஜெயஸ்ரீயின் நினைவாக அவரது கணவர் திரு. ராஜகோபால், மங்கையர் மலர் வாசகியருக்கு கடந்த இரண்டு வருடங்களாக சிறுகதைப் போட்டிகள் நடத்தி, பரிசுகளை அளித்தார். நீங்கள் தந்த பேராதரவைக் கண்டு உற்சாகமடைந்த திரு. ராஜ், இந்த வருடமும் ஒரு சிறுகதைப் போட்டியை நமது மங்கையர் மலர் வாசகியருக்காக நடத்த முன்வந்திருக்கிறார். நல்லதொரு வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்!

முதல் பரிசு ரூ.10,000

இரண்டாம் பரிசு ரூ.7,500

மூன்றாம் பரிசு ரூ.5,000

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.2000 சன்மானம் பெறும்.

விதிமுறைகள் :

★ பெண்கள் மட்டுமே கலந்து கொள்ள வேண்டும். முழு முகவரி, புகைப்படம் தேவை.

★ மங்கையர் மலரில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.

★ சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.

★ கையால் எழுதப்பட்ட அல்லது தட்டச்சு செய்யப்பட்ட கதைகள் மட்டுமே ஏற்றுக் கொள்

கதைகள் வந்து சேர வேண்டிய

# சிறுகதைப் போட்டி - 2008



ளப்படும். ஜெராக்ஸ் பிரதிகள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டா.

★ முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.

★ ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

★ போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக் கூடாது.

★ பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

★ முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

★ தேர்வாகாத கதைகள் திருப்பி அனுப்பப்படமாட்டாது.

★ முதல் பரிசுக் கதை செப்டெம்பர் இதழில் வெளியாகும்.

ஜெயஸ்ரீ ராஜ் நினைவுச் சிறுகதைப் போட்டி - 2008

என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு அனுப்ப வேண்டிய முகவரி :

ஆசிரியர், மங்கையர் மலர், கல்கி பில்டிங்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.

**கடைசித் தேதி : ஆகஸ்ட் - 5**

# எலி, கிலி மல்லி!

ஆஃபீசுக்கு வந்த தொலைபேசியில் என்னுடைய திருமதி மல்லியின் குரல், ஆயிரம் வாட்ஸ் ஷாக் வாங்கிய அபூர்வ சிகாமணியாய் ஒலித்தது.,

''ஏங்க... நீங்க வீட்டிலே எலி...''

''ஆமாம். நான் வீட்டுல எலி. வெளியில புலி. இதை எத்தனை தடவை சொல்லுவே? இப்ப நான் அவசர வேலையில் இருக்கேன். போனை வை!'' என்று கடித்தேன் நான்.

''ஐயோ... அதில்லைங்க. வீட்டுல பெரிய எலி புகுந்துடுச்சு. உங்கம்மா பால்கனி கதவை அடிக்கடி திறந்து வைக்கும்போதே நினைச்சேன், இதான் நடக்கும்னு. நீங்க வீட்டிலே எலிப்பொறி எதையாவது பரண் மேலே பார்த்த ஞாபகம் இருக்கான்னு கேக்கத்தான் போன் பண்ணினேன்.''

''பரண்ல எலிப்பொறி, கிலிப் பொறி எதுவுமில்லை!''

''அப்ப ஆபீஸிலிருந்து வரும்போது ஒரு நல்ல பொறி வாங்கிட்டு வாங்க. எலி விழற வரைக்கும் எனக்குத் தூக்கமே வராதுங்க!'' என்று போனை வைத்தாள்.

''இந்தப் பொறி ஒண்ணுதாங்க இருக்கு!'' என்ற ஒரு துருப்பிடித்த கம்பியுடன் கூடிய உளுத்துப் போன டப்பாவை நீட்டினார் கடைக்காரர். ஐம்பது ரூபாய் தண்டம் அழுதுவிட்டு அதைக் கையில் பிடித்தபடி ஓடிப் போய் பஸ்ஸைப் பிடித்தேன்.

சாயங்காலம் வீடு முழுதும் 'கமகம'வென மசால் வடை வாசனை. எலிக்காக விசேஷமாகத் தயாரிக்கப்பட்டதாம்.

பொறியில் வைத்த 'எலி கோட்டா' போக, மீந்ததையெல்லாம் எங்களுக்குக் கொடுத்தாள். ஆனால் அன்றைக்கு அந்த எலிக்கு என்ன புரோகிராமோ... அன்றைக்கு வரவேயில்லை!

மறுநாள் உளுந்து வடை, அடுத்த நாள் பஜ்ஜி, மறுநாள் மைசூர் போண்டா என அந்த வாரம் 'எலித்தீனி' வாரமாகக் கழிந்தாலும் எமகாதக எலி எங்களுக்குக் கடுக்காய் தந்துவிட்டு சர்வ சுதந்திரமாக வீட்டைச் சுற்றி வந்தது. என் மனைவியோ தூங்கும்போது எலி மேலே








விழுந்து பிராண்டுவது போல அடிக்கடி கனவு கண்டு அலறியதில் வீடு இந்தோனேஷிய பூகம்பம் வந்தாற்போல குலுங்கியது.

ஒருநாள் ஆபீஸ் மானேஜரின் மாமா மண்டையைப் போட்டதால் அரை நாளிலேயே நான் வீடு திரும்பியபோது, டீவி சீரியல் ஓடிக் கொண்டிருந்தது. மல்லி ஒரு பெருச்சாளி புகுமளவு வாயைத் திறந்தபடி சோபாவில் அமர்ந்தபடி சயனித்திருக்க, சமர்த்தாக அவள் மடியில் அமர்ந்து டீ.வி. பார்த்துக் கொண்டிருந்தார் திருவாளர் எலி! எதிர்பாராமல் வந்த என்னைக் கண்டு அதிர்ச்சியடைந்து ஒரு எகிறு எகிறி, மல்லியின் தலை மேல் கொஞ்ச நேரம் 'பாலே' ஆடி விட்டு, அரிசி மூட்டைக்குப் பின்னால் அந்தர் தியானமானார்.

எலி - கிலி காரணமாக மல்லிக்கு ஜுரம் வந்து முந்நூறு ரூபாய் தண்டச் செலவு. மூன்று நாள் லீவு வீண். அன்று வரை எலிக்காக தனிச் செலவு ஐந்நூறு ரூபாய் ஆனது தனி பட்ஜெட்!

■ ஆர்.மாலதி தமன்



அடுத்த வாரத்தில் ஒருநாள், நான் ஆஃபீசிலிருந்து திரும்பியபோது மல்லி ஏகக் குஷியாக ஒரு மைசூர்பாக்கை நீட்டினாள்.

''ஓ! கார வகைக்கு எலி விழாததால் ஸ்வீட் வகையறா ஆரம்பமா?'' என்று அதிர்ச்சியுடன் கேட்டேன்.

''அதில்லைங்க. நான் எழுதிய 'ரெஸிபி' 'நங்கையர் நலன்' பத்திரிகையில வந்திருக்கு. பரிசு ஐந்நூறு ரூபாயாக்கும். எல்லாம் ரோஸி (எலியின் நாமகரணம்) வந்த நேரம். அவளாலதான் ஏகப்பட்ட ரெஸிபி செஞ்சு நான் எக்ஸ்பர்ட் ஆயிட்டேன். இனிமே வாரா வாரம் எல்லா பத்திரிகைக்கும் ரெஸிபி எழுதப் போறேன்'' என்றாள்.

''ஆமா.. அதென்ன கொரக்... கொரக்... சத்தம்? எலியார் பொறியில மாட்டிக்கிட்ட மாதிரி இருக்கே!''

''ஆமாங்க. எலி மாட்டிக்கிச்சு!''

''நிஜமாவா, எப்படி?''

''எப்படியும் எலிதான் விழமாட்டேங்குது. பொறியை க்ளீன் பண்ணி, பரண் மேலே வச்சுடலாம்னு சோப்புத் துண்டு போட்டுச் சுத்தம் செஞ்சு திறந்து வச்சிருந்தேன். சோப்பு வாசனையிலே மயங்கி உள்ளே போய் மாட்டிக்கிச்சுங்க!'' என்றாள் மல்லி.

இந்த 'எலி'மெண்டரி விஷயம் முதலிலேயே தெரிஞ்சிருந்தால் எவ்வளவோ நேரமும் செலவும் மிச்சமாயிருக்கும். ம்... எல்லாம் நேரம்! ●

# கம கம பூண்டு



பூண்டு பிறந்த கதையிலிருந்து ஆரம்பித்தால்தான் சுவாரசியமே.

பாற்கடலைக் கடைந்தபோது வெளிப்பட்ட ஆலகால விஷத்தை, மகாதேவன் சாப்பிட்டு விட்டார். அப்போது பார்வதிதேவி, அவருடைய கழுத்தை அழுத்தி விஷம் உள்ளே சென்று விடாமல் ஈஸ்வரனைக் காப்பாற்றினாள். வெளிப்பட்ட அமிர்தத்தை குடத்தில் ஏந்திக் கொண்டார்கள் தேவர்கள். அமிர்தத்தை உண்டால் சாகாவரம் பெறலாம். அதனால் அசுரர்களும் அமிர்தத்தை அடைய ஆவல் கொண்டார்கள். அசுரர்களும் அமிர்தத்தை உண்டுவிட்டால், தேவர்கள் கதி என்னாவது? அதனால் தேவர்கள் அமிர்தம் இருந்த குடத்தைத் தூக்கிக் கொண்டு ஓடினார்கள். அசுரர்கள் விடுவார்களா? தேவர்களைத் துரத்திக் கொண்டு ஓடினார்கள். இந்தத் துரத்தல் கலாட்டாவில் குடம் சற்றே சாய்ந்து அதிலிருந்து இரு துளிகள் பூமியில் விழுந்தனவாம். ஒரு துளி உள்ளிப் பூண்டாகவும், இன்னொரு துளி வெங்காயமாகவும் பூமியிலிருந்து முளைத்ததாம். இப்படியாகக் கதை போகிறது...



உள்ளிப்பூண்டின் மருத்துவக் குணங்களைப் பார்க்கும்போது அது உயிர் காக்கும் அமிர்தம் போலத்தான் தோன்றுகிறது.

தாய்ப்பால் சுரக்கணுமா? ஜலதோஷம் குணமாகணுமா? உடம்பு இளைக்கணுமா? ரத்தம் சுத்தமாகணுமா? சர்க்கரையும், கொழுப்பும் கட்டுப்படணுமா? காயங்கள் ஆறணுமா? இதயம் பலமாகணுமா? பூண்டு சாப்பிடுங்க... இதுதான் ஒரே பிரிஸ்கிரிப்ஷன்!



# அழகி!

அயல்நாட்டில்

மேலைநாட்டிலும், உள்ளிப் பூண்டுக்கு ஒரு கதை உண்டு. பைபிளில் சொல்லப்பட்டிருக்கும் ஈடன் என்னும் தோட்டத்திலிருந்து சைத்தான் வெளியேறிய போது அதன் இடதுகாலிலிருந்து பூண்டும், வலது காலிலிருந்து வெங்காயமும் தோன்றியது என்று மேலை நாட்டினர் நம்புகிறார்கள். இந்தியாவின் வடகிழக்குப் பகுதிகளில், பூண்டை நசுக்கி தண்ணீரில் கலந்து அந்தக் கலவையை வீட்டைச் சுற்றித் தெளித்து வைத்தால் பாம்பு வராது என்கிறார்கள்.





பூண்டின் அருமைப் பெருமையைத் தெரிந்து கொண்டதால்தான், அமெரிக்காவில், கலிபோர்னியா மாகாணத்தில் இருக்கும் 'கில்ராய்' என்னும் இடத்தில், பூண்டு ஏராளமான நிலப்பகுதிகளில் பயிரிட்டு, வருடா வருடம் ஜூலை மாதக் கடைசியில் இதற்கு விழாவும் எடுக்கிறார்கள்.

1979-ம் வருடத்திலிருந்து நடந்து வரும் இந்தத் திருவிழாவின் மூலம், ஏழரை மில்லியன் டாலர்கள் வரை பணம் கிடைக்கிறது. இந்தப் பணம் பல நற்பணி அமைப்புகளுக்குப் பயன்படுகிறது.

விழா முழுக்க பூண்டு மகாத்மியம் தான். கைவேலைப் பொருட்கள், பூண்டிலிருந்து தயாரிக்கப்படும் உணவுப் பொருள்களை அங்கேயே மக்கள் முன் செய்து காண்பித்தல், குழந்தைளுக்கான விளையாட்டுப் போட்டிகள், இசை, நடனம் இவற்றோடு உள்ளிப் பூண்டு அழகிக்கான போட்டி என

# ரகசியம்!



ரூ.150 பரிசு பெறும் பெட்டிக் கதை

சல்லடை போட்டுத் தேடி கிடைத்த அமெரிக்க வரன் அது. பெண் பார்க்க மாப்பிள்ளையும் அவர் அப்பாவும்தான் வந்தார்கள். பிள்ளைக்கு அம்மா இல்லை. சுவையான பஜ்ஜி, சொஜ்ஜியை என் பெண் ரம்யா செய்ததாகப் பொய் சொல்லி பரிமாறினாள் என் மனைவி.

''உங்கம்மா சமையல் புத்தகம் எல்லாம் போட்டிருக்கா. என் பெண்ணையும் கல்யாணத்துக்கு முன்னாடி சமையலில் கெட்டிக்காரியா ஆக்கிடறேன்'' மனதாரப் பொய் சொன்னாள் என் மனைவி.

வாய்விட்டுச் சிரித்த மாப்பிள்ளை, ''என்னப்பா ரகசியத்தைப் போட்டு உடைக்கவா?'' என்றார்.

''ம்''

''எங்கப்பா அந்தக் காலத்தில் காஷ்மீரல சுயம் பாகம் பண்ணிப் பார்த்ததைத்தான் எங்கம்மா புத்தகமா போட்டாங்க. நானும் அஞ்சு வருஷமா அமெரிக்காவில் சுயம்பாகம்தான். அதையெல்லாம் 'ரம்யாஸ் குக்கரி ரெசிபீஸ்'னு போட்டு உங்கப் பொண்ணும் டாலரில் பணத்தை அள்ளலாம். கவலையே வேண்டாம்.''

மாப்பிள்ளையின் சிரிப்பு எல்லோரையும் தொற்றிக் கொண்டது.

- எஸ். சரஸா,
மதுரை -2.

---

ஜமாய்க்கிறார்கள்.

'பூண்டு அழகி' என்ற போட்டியும் ஒவ்வொரு வருடமும் நடக்கிறது. பூண்டு போல அந்த அழகி காரத்துடன், நெடியுடன் இருப்பாளாம்.

முதல் பரிசு 1000 டாலர்கள். இரண்டாவது பரிசு 750 டாலர்கள். மூன்றாவது பரிசு 500 டாலர்கள்.

பூண்டை முக்கியப் பொருளாகக் கொண்டு, உள்ளிப்பூண்டு சாலட், உள்ளிப்பூண்டு சாறு, உள்ளிப்பூண்டு ஒயின், உள்ளிப்பூண்டு ஐஸ்க்ரீம், உள்ளிப்பூண்டு ஊறுகாய், பூண்டு - பாஸ்தா கலவை, உள்ளிப்பூண்டு பிரெட் போன்ற எத்தனையோ அயிட்டங்கள் இங்கே செய்கிறார்கள். கண்காட்சியில் இவை விற்பனை செய்யப்படுகின்றன. உணவுப் பிரியர்களுக்குக் கொண்டாட்டம்!

பூண்டு பற்றிய கவிதைகள், கதைகள், ஜோக்ஸ் இவற்றை எந்த மொழியில் எழுதப்பட்டிருந்தாலும் அவற்றை வரவேற்று பரிசுகள் அறிவிக்கிறார்கள். 'பூண்டு எக்ஸ்பிரஸ்' என்று ஒரு குதிரை வண்டி நிறைய மூட்டை மூட்டையாகப் பூண்டுகளைப் படமாக வரைந்து அதனை வண்ணத்தால் நிரப்ப குழந்தைகளுக்குப் பயிற்சி கொடுக்கிறார்கள்.

உள்ளிப்பூண்டு வாசகங்கள் எழுதப்பட்ட வாழ்த்து மடல்கள் பரபரப்பாக விற்பனையாகும். 'பூண்டு குரு' என்று ஒரு குரு (தலைவர்) நியமிக்கப்படுவார். பூண்டு பற்றிய எந்த விவரத்தைக் கேட்டாலும் இவர் பொறுமைபூண்டு பதில் சொல்வார்.

என்ன... போதுமா... பூண்டு புராணம்?

- புவனா நடராஜன்,
சென்னை - 28.

வாசகர் குமுறல்



# போட்டின்னாலே அலர்ஜி!

**ச**மீபத்தில் பிரபல ஆங்கில நாளிதழ் ஒன்றிலும், இரண்டு மிகப் பிரபல தமிழ் வார இதழ்களிலும் ஒரு 'மெகா சமையல்' போட்டிக்கான விளம்பரத்தைப் பார்த்தேன். முதல் பரிசு மாருதி கார், இரண்டாவது பரிசு ஸ்கூட்டி என்றும் அறிவித்திருந்தனர். ஆர்வமுடன் விண்ணப்பித்தேன். சில தினங்களுக்குப் பின் அந்தப் போட்டியை நடத்தும் ஒருவர் என்னைத் தொடர்பு கொண்டு, வந்திருந்த ஆயிரக்கணக்கான விண்ணப்பங்களில் பதினாறு பேர் மட்டும் தேர்வு செய்யப்பட்டிருப்பதாகவும், அதில் நானும் ஒருத்தி என்று சொன்னதும் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன்.

**ம**றுநாள் படப்பிடிப்பிற்கு வரச் சொன்னார்கள். அவர்கள் கேட்டுக் கொண்டபடி காலை 8.00 மணிக்கெல்லாம் அங்கே ஆஜராகிவிட்டேன். வெளியூர்களிலிருந்தும் போட்டியாளர்கள் வந்திருந்தனர்.

''நீங்கள் எதுவும் கொண்டு வர வேண்டாம். நாங்களே அனைத்தையும் தருவோம்'' என்று அமைப்பாளர்கள் கூறியிருந்தார்கள்.

காலை 10.00 மணிக்கு மேல் எங்கள் 16 பேருக்கும் காமிராவுக்குத் தகுந்தபடி மேக்கப் போட்டு விட்டார்கள். நாங்கள் அழகு ராணிகளாக ஜொலித்ததில் ஒரே மகிழ்ச்சி. பின்னர் ஒரு ஹாலுக்குள் போய் உட்காரச் சொன்னார்கள். அதன் உள்ளே நல்ல வெளிச்சம் இல்லை. ஏசியோ, மின்விசிறியோ, ஏன், உட்கார போதிய நாற்காலிகள் கூட இருக்கவில்லை. குழந்தைகள், உறவினருடன் வந்த சில போட்டியாளர்கள் அப்போதே சிணுங்க ஆரம்பித்தார்கள். போதா குறைக்கு

அப்போதுதான் 'செட்' போட ஆரம் பித்தார்கள்.

காஸ் அடுப்பு, டியூப் போக துவாரம் போடுதல், மிக்ஸி, குக்கர் போன்ற பொருட்களை ஏற்பாடு செய்தல் என ஆயத்த வேலைகளை ஆரம்பித்தனர். அப் போதே மதியம் 1.30 மணி ஆகிவிட்டது. அதுவரை அங்கே வேலை/ஏற்பாடு செய்து கொண்டிருந்தவர்கள் திடீரென்று மாய மானார்கள். அக்னிநட்சத்திரத்தின் உச்சத் தில் தவித்த நாங்கள், ''அழுக்கு' ராணி களாக மாறிக் கொண்டிருந்தோம். எல் லோரும் சாப்பிடப் போய் விட்டார்கள் என்று அறிந்து, யாரும் அழைக்காமல், நாங்களாகவே சாப்பாடு பரிமாறும் இடத்திற்குப் போய்ச் சாப்பிட்டோம்.

ஒருவழியாக மதியம் 2.30 மணிக்கு எல்லா ஏற்பாடுகளும் முடிந்து, போட்டி ஆரம்பமானது. ''நான்கு சுற்று இருக்கும். நாலு நாலு பேராக போட்டியிட வேண்டும்'' என்றார்கள். முதல் சுற்றில் வெற்றிப் பெற்ற பெண்ணிற்கு மட்டுமே பரிசு கொடுத்தார்கள். ஒரு போட்டியாளரின் சமையல் பிரமாதமாக இருந்தும், அவர்கள் கொடுத்த குக்கர் மக்கர் பண்ணவே சாதம் வேகாமல் போய்விட்டது. வெளியூரி லிருந்து வந்த போட்டியாளர்களுக்குப் பரிசு கிடைக்கவில்லையென்றாலும், போக்கு வரத்துச் செலவு தரப்பட்டது. பதினாறு பேர்களில் 5 பேருக்கு மட்டும் ஒரு பங்கேற்புச் சான்றிதழ் கூடத் தரவில்லை.

ஒருசில போட்டியாளர்கள் ''இந் நிகழ்ச்சி தொலைக்காட்சியில் வரப் போவ தால், எங்கள் உறவினர் பலர் பார்க்க நேரிடும். ஒன்றுமே வாங்காமல் போனால் கேலி செய்வார்கள். ஆகவே காலிப் பையா வது பரிசு கொடுப்பது போல் படமாக்குங் கள். நாங்கள் ஏதாவது வாங்கிப் போட்டுக் கொண்டு, பரிசு கொடுத்தார்கள் என்று சொல்லி விடுகிறோம்'' என்று கெஞ்சினர். போட்டி அமைப்பாளர்கள் காதிலேயே வாங்கிக் கொள்ளவேயில்லை.

''எத்தனையோ மசாலா பாக்கெட்டு களை வெளியே அள்ளிப் போட்டார்கள். அதில் சிலவற்றையாவது பங்கேற்றதற்காக நமக்குக் கொடுக்கலாமே'' என்று புலம்பல் கள். போதிய காற்று, வெளிச்சம் இல் லாமல், உடல்நலம் பாதித்து இரவு தாமதமாக வீடு திரும்பியதும் வீட்டில் இருப்போரின் முகத்தில் கடுகு வெடித்தது.

அதிலிருந்து ஏதாவது 'போட்டி' என்றாலே அலர்ஜியாக உள்ளது. இனியா வது தீர ஆராய்ந்து போட்டிகளில் பங்கேற்க வேண்டும்!

- எஸ். கலா, சென்னை - 10.



ஆஹா 50!

நினைத்த காரியம் நிறைவேற ஆஞ்சநேயருக்கு வெற்றிலை மாலை அணிவிப்பது வழக்கம். ஆனால் செவ்வாய் கிழமையன்று விநாயகருக்கு வெற்றிலை மாலை அணிவித்தால் நினைத்த காரியம் தாமதம் இல்லாமல் உடனே நிறைவேறும். இவ்வாறு ஏழு செவ்வாய்க்கிழமை செய்யவும். அருகிலுள்ள எந்த விநாயகராக இருந்தாலும் சரி. இது நான் அனுபவத்தில் கண்டது.

- ரம்யா சீனிவாசன், சிட்லபாக்கம்.

கவிதை

# இனிப்பு!



சிறப்பு தரிசனச் சீட்டு பெற்று
திருப்பதி ஏழுமலையான் சந்நிதியில்
அமர்ந்ததை விட
தாத்தா தோளின் மேலே அமர்ந்து
சூரன் தலைவெட்டைப் பார்த்த நினைப்பில்
இனிப்பு அதிகம் தெரிகிறது.

ஆனந்தபவன் ஓட்டலில் அமர்ந்து
நெய் சொட்டும் இனிப்பில்
மகிழ்ந்ததை விட
ஆயா கடையில் வாங்கிய
தேன் மிட்டாயின் சுவைதான்
தூக்கலாகத் தெரிகிறது.

மாந்தோப்பிற்கு அதிபதி
மல்கோவாவில் ஈர்ப்பு இல்லை
பள்ளிப் பிராயத்தில் கல் எறிந்து
தின்ற மாங்காய்தான் நினைப்பில்
இனிக்கிறது!

- கமலா ராஜசேகரன், பொள்ளாச்சி.

இதயத்தின் செயல்திறன் சிறிது சிறிதாக குறைந்துகொண்டே வரும் நிலையைத்தான் நாம் ஹார்ட் ஃபெயிலியர் என்று கூறுகிறோம். இந்த வார்த்தை சற்று பயமுறுத்துவதாகவும், சிலர் இதயத் துடிப்பே நின்றுவிட்டதாகவும் தவறாகக் கருதுவர். மிகச் சரியான அர்த்தம் என்னவென்றால், நம் உடலுக்குத் தேவையான ஆக்ஸிஜன் நிறைந்த இரத்தத்தை முழுவதுமாக நம் இதயத்தால் பம்ப் செய்ய இயலாத நிலையே ஆகும். சுமார் நான்கு லட்சம் அமெரிக்கர்கள் இந்நோயால் பாதிக்கப்பட்டு பின்வரும் பல்வேறான காரணங்களால் சில சமயம் 10 வருடங்களில் உயிரிழக்க நேரிடுகிறது.

அவையாவன :

1. பலவீனமான இதயச் சுருக்கம்

2. சிரமத்துடன் சுருங்கி விரிவடைவதால் பாதிக்கப்பட்டு விரிவடைந்த இதயம்

3. இரத்தத்தின் கன அளவு அதிகமாகி உடல் உறுப்புகளிலும் திசுக்களிலும் சிரைகளிலும் கெட்ட நீர் தங்குதல்.



பலவீனமான இதயச் சுருக்கம் :

இதயத்தின் சுருங்கும் செயல் திறன் பலவீனப்படுவதால், உடல் திசுக்களுக்குத் தேவையான ஆக்ஸிஜன் கலந்த இரத்தத்தின் அளவு குறைகிறது. மேலும் மையோகார்டியம் எனும் இதயச் சவ்வு பாதிக்கப்பட்டு இதயத்திலுள்ள வென்ட்ரிக்கிள் என்ற அறையில் அதன் சக்தியை விட அதிக கொள்ளளவு உள்ள இரத்தம் தேக்கி வைப்பதால் இதயத்தின் அளவு விரிவடைகிறது.

இதய வடிவ மாற்றம் :

இதயத்தின் செயல்திறன் எப்போதெல்லாம் பலவீனப்படுகிறதோ, அப்போதெல்லாம் இதயத் தசைகள் அந்த செயல்திறனை சமன்படுத்த சற்றுக் கூடுதலாகச் செயல்பட வேண்டியுள்ளது. இதனால் ஆரோக்கியமான இதயச் செல்கள் பலவீனப்பட்ட செல்களின் வேலையையும் சேர்த்துச் செய்வதால் உடலின் வளர்சிதை மாற்றம் பாதிக்கப்படும். மேலும் செல்கள் அளவில் பெரிதாகின்றன. இதனால் இதயத் தசைகள் கடினப்பட்டு விடுகின்றன. கடினப்பட்ட தசைச் செல்களுடன் போட்டியிட முடியாத மென்மையான இதயச் சவ்வு (சுவர்) பாதிக்கப்பட்டு இரத்தம் கசியத் தொடங்குகிறது. இதனால் இதயத்தின் வடிவத்தில் மாற்றம் ஏற்படுகிறது. மேலும் இதனால் அதன் செயல்திறனில் எந்த பலனுமில்

# பேசுகிறேன்...

லாமல் மேலும் சிறிது சிறிதாக இதயம் சேதப்பட்டுக்கொண்டே வருகிறது. ஆரோக்கியமான இதயம் வெளிர்சிவப்பாகவும், சிறிதாகவும் காணப்படும். பலவீனப்பட்ட இதயமோ சாம்பல் நிறத்தில் விரிவடைந்து, வடிவிழந்து இருமடங்கு எடையுடன் காணப்படும்.

ஹார்ட் ஃபெயிலியரின் அறிகுறிகள்:

ஆரம்ப காலத்தில் குறிப்பிடும்படியான அறிகுறிகள் இல்லாவிடினும், நாளடைவில் ஒன்றன்பின் ஒன்றாகப் பல அறிகுறிகள் காணப்படும். இதை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம்.

1. ஃபார்வர்டு ஃபெயிலியர்

2. பேக்வர்டு ஃபெயிலியர்

ஃபார்வர்டு ஃபெயிலியர் : இதயத்திலிருந்து குறைந்த அளவிலான இரத்த வெளியேற்றம், மற்ற திசுக்களுக்குத் தேவையான இரத்தத்தை முழு அளவில் பம்ப் செய்ய இதயத்தால் முடியாதது போல் உடல் பலமிழந்து மிகவும் சோர்ந்து காணப்படுவர். மேலும் பொதுவான உடல்நலக் குறைவை உணர முடியும்.



* டாக்டர் பி. அயாஸ் அக்பர்

பேக்வர்டு ஃபெயிலியரின் அறிகுறிகள் :

தசைகளுக்கிடையே நிணநீர் மற்றும் இரத்த ஓட்டத்தில் தடை ஏற்படுவதால் மூச்சுத் திணறல், இருமல், கை கால், வயிறு வீக்கம் காணப்படும். மேலும் பலவீனப்பட்ட இதயத்தால் சிரான நீரோட்டம் தடைபடுவதால் நுரையீரலைச் சுற்றி நீர்த்தேக்கம் ஏற்பட்டு சுவாசம் பாதிக்கப் படுகிறது. இதனால் உடல் எடையும் கூடுகிறது.

ஹார்ட் ஃபெயிலியரை நான்கு நிலைகளாகப் பிரிக்கலாம். முதல் நிலையில் அறிகுறிகள் சரியாகத் தெரிவதில்லை. நாளடைவில் தீவிரமான அறிகுறிகள் தென்படும். பாதிக்கப்பட்ட நோயாளி மூச்சுத்திணறல், பலமின்மை, படுத்தால் மூச்சு விட முடியாமல் தலையணை உதவியுடன் உயர்த்தி படுத்துத் தூங்குதல், மனதில் பயமும் கலவரமும் தோன்றி இயல்பு வாழ்க்கை வாழ முடியாமல் படுத்தபடுக்கையாக இருக்க ஆரம்பித்து விடுவர். உட்கார்ந்தால் மட்டுமே தூங்க முடியும். சில சமயம் சளியுடன் இரத்தமும் கலந்து வரும். இந்நிலையில் கண்டிப்பாக மருத்துவர் ஆலோசனைப்படி அவசர சிகிச்சை உடனடியாகப் பெற வேண்டும்.

ஹார்ட் ஃபெயிலியர் வருவதற்கான முக்கிய காரணங்கள் :

1. இதய ஆர்ட்டரி சுருங்குவதால் ஏற்படும் CAD

2. ஏற்கெனவே ஒருமுறை மாரடைப்பு நோயுற்றவர்கள்

3. இரத்தக் கொதிப்பு

4. இதய வால்வுகளில் ஏற்படும் நோய்

5. பிறப்பில் உள்ள இதயநோய் காரணமாக வருவது.

6. இதயத்தில் உள்ள மையோகார்டியம் என்ற சவ்வு பாதிக்கப்படுவதால் ஏற்படும் நோய்

7. இதய வால்வுகளில் ஏற்படும் கோளாறு

8. மையோகார்டியத்தில் ஏற்படும் நோய்

9. சர்க்கரை நோய்

இந்த நோய்களுக்கான அறுவை சிகிச்சை இல்லாமல் தீர்வு TS3 EECP, Sphygmocar போன்ற முறைகளில் சென்னையில் ஆக்ஸிமெட் மருத்துவமனை பிரைவேட் லிமிடெட், நந்தனம், சென்னையில் பெறப்படுகிறது. மேலும் விவரங்கள் அறிய தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

டாக்டர் பி. அயாஸ் அக்பர், நிர்வாகி,
ஆக்ஸிமெட் ஹாஸ்பிடல்ஸ்
பி லிமிடெட்,
ஆலோசகர்: பிரிவென்டிவ்
கார்டியாலஜிஸ்ட் செலேஷன் & பயோ
ஆக்ஸிடேடிவ் தெரபிஸ்ட்
ஃபோன் : 044-42131010/1014/1016
e-mail: oxymedhospitals@ yahoo.com
website : www.oxymedhospitals.in

# உன் இதயம் பேசுகிறேன் !

அண்மையில் சூப்பர் மால் உரிமையாளர் ஒருவர் புதுத் திட்டம் ஒன்றை பேப்பரில் விளம்பரம் செய்தார்.

''வீட்டிலிருக்கும் வேண்டாத பழைய, தட்டுமுட்டுச் சாமான்களை எல்லாம் சேகரித்துக் கொண்டு வாருங்கள். வெளியில் கிடைக்கும் விலையை விட ஐந்து மடங்கு விலைக்கு நாங்கள் வாங்கிக் கொள்கிறோம்'' என்று கொட்டை எழுத்தில் ஒரு பக்கம் விளம்பரம் கண்ணைப் பறித்தது. ஒரு கிலோ பழைய பேப்பர் ரூ 25 (வெளி விலை ரூ 5) பழைய துணி ஒரு கிலோ - ரூ. 200 (வெளி நிலை ரூ. 50) பழைய உடைந்த பிளாஸ்டிக் ரூ. 100 (வெளி விலை ரூ. 20 ஒரு கிலோ) அவ்வளவுதான். ஷாப்பிங் மேனியா பிடித்த வீட்டுத் தலைவர்கள், தலைவிகளைக் கேட்க வேண்டுமா! ஒவ்வொரு வீட்டிலும் 'குப்பை' வேட்டைதான்.

துருப்பிடித்த ஆணியிலிருந்து... உடம்பில் இருக்கும் பழைய புடைவை வரை, உருவி எல்லாவற்றையும் சேர்த்து டி.வி. விளம்பரத்தில் காட்டியது போல் உடைந்த கம்மோடை கூடச் சேர்த்து, டாக்ஸி சார்ஜ் கொடுத்து தூக்கிக் கொண்டு திரளாகச் சென்றது ஜனகும்பல். ஷாப்பிங் க்யூ அனுமார் வாலாக ரோடில் குப்பை மூட்டைகளோடு நிற்கவே அந்த சூப்பர் மாலிருக்கும் ரோடில் இரண்டு நாள் டிராஃபிக்ஜாம்!

ஹவுஸ்வைஃப் ஒருத்தி அப்படியே ஆனந்த சாகரத்தில் மூழ்கி இருந்தாள். ஏனென்றால் அவள் சேகரித்துக் கொண்டு வந்திருந்த குப்பையின் மதிப்பு அப்படி!

பழைய பேப்பர் 10 கிலோவிற்கு ரூ. 250/- இரண்டு கிலோ பழைய துணிக்கு



ரூ. 400, உடைந்து போன எவர் சில்வர் பாத்திரம் கிட்டத்தட்ட இரண்டு கிலோ ரூ. 400/- எல்லாம் சேர்ந்து கிட்டத்தட்ட வரவு ரூபாய் ஆயிரம் என்ற குருட்டுக் கணக்கு போட்டிருந்தாள். ஆனால் எல்லாக் குப்பைகளையும் எடை போட்டு, கணக்கு போட்ட பிறகு சேல்ஸ்மேன் நீட்டியது ரூபாய் ஆயிரம் இல்லை. ஆயிரம் ரூபாய்களுக்கான கூப்பன்கள். அதுவும் இரண்டு நிபந்தனைகளுடன்.

ஒன்று : பழைய சாமான்களுக்காகக் கிடைத்த பணத்தை போல் இரண்டு மடங்கு மதிப்புள்ள சாமான்களை அந்த சூப்பர் பஜாரில் வாங்க வேண்டும்.




இரண்டாவது : அந்தக் கூப்பன்களை கறிகாய், பழம், பலசரக்கு சாமான் களை வாங்க மாத்திரம் உபயோகிக்கலாம். துணிமணிகள், எலக்ட்ரானிக்ஸ் அயிட்டம் போன்றவற்றை வாங்க முடியாது.

அவ்வளவுதான். ஜனங்களினுடைய ஆர்வம் எல்லாம் காற்று போன பலூன் மாதிரி புஸ் என்று அடங்கிவிட்டது. ஆனாலும் ஷாப்பிங் ஆசை யாரை விட்டது? பலன்? சூப்பர்மாலின் உரிமையாளருக்கு அடித்தது சுக்ரதசை. அவருடைய செலவு? கூப்பன் புத்தகங்களை பிரிண்ட் செய்த செலவுதான். அவருக்கு பழைய சாமான்கள் ஃப்ரீயாக கிடைத்தது மாத்திரம் இல்லை (அதை வெளியே விற்றுப் பணம் சம்பாதிக்கலாமே!) ஒன் றுக்கு இரண்டாக கஸ்டமர்களைச் செலவழிக்க செய்ததில் அவருக்கு வந்த லாபம் 500% சதவிகிதம்.

**நா**ம் கொஞ்சம் முன்யோசனை செய்திருந்தால் விஷயம் புரிந்திருக்கும். வெளியில் பழைய பேப்பர்களை ரூ. 5 ஒரு கிலோ என்று வாங்கும் பொழுது இந்த சூப்பர் பஜாரில் அதையே ரூ. 25/- என்று வாங்கினால் அவர்களுக்கு நஷ்டம் ஆகுமே. எந்தக் கடைக்காரராவது நஷ்டத்திற்கு வேலை செய்வார்களா என்று யோசனை செய்திருந்தால், இந்த விளம்பரத்தில் ஏதோ 'பொடி' இருக்கிறது ஞானம் ஏற்பட்டிருக்கும்.

கொஞ்சம் கூட்டல், கழித்தல் செய்து பார்த்தீர்களானால் உங்களுக்கே தெரியும் மறைந்திருக்கும் விளம்பர சூட்சமம்!

உதாரணமாக : ''ஒரு பாக்கெட் சிப்ஸ் வாங்கினால் ஒன்று இலவசம்'' என்றால் இரண்டு பாக்கெட்டையும் எடுத்து எக்ஸ்பயரி தேதி பாருங்கள். அநேகமாக காலாவதி ஆகியிருக்கும். இல்லையென்றால் அட்லீஸ்ட் ஒரு வாரம்தான் பாக்கி இருக்கும்.

''மூன்று சோப்புகள் வெறும் நூறு ரூபாய்தான்'' என்று விளம்பரமா? ஒவ்வொரு சோப்பின் விலை பாருங்கள். ரூ. 35 இருக்கும். உங்களுக்கு லாபம்? வெறும் 5 ரூபாய்தான்.

''ஒரு பாக்கெட் சிப்ஸ், ஒரு பாக்கெட் மிக்ஸர், ஒரு பாக்கெட் பிஸ்கெட் எல்லாம் சேர்ந்து ரூ. 50 தான்'' என்று போர்டு போட்டிருக்கிறதா? சிப்ஸ், மிக்ஸர் எல்லாம் பழைய உருப்படிகளாக இருக்கும். பிஸ்கெட் உள்ளே எல்லாம் நொறுங்கிக் கிடக்கும்.



இரண்டு குலோப்ஜாமூன் பாக்கெட்டுடன் ஒரு டிமர்

உப்புமா பாக்கெட்டா! ஊர் பேர் தெரியாத ப்ராண்டாக இருக்கும். திடீர் உப்புமா வாயில் வைக்க வழங்காது.

''இரண்டு ஷர்ட் வாங்கினால், ஒரு ஷர்ட் ஃப்ரீ''. மூன்று ஷர்ட்டுகளும் ஆறே மாதத்தில் பல்லை இளிக்கும். கொஞ்சம் விலையுயர்ந்த ஷர்ட்டுகள் வாங்கினால் அட்லீஸ்ட் ஒன்றரை வருஷம் நன்றாக உழைக்கின்றன.

ஐந்து கிலோ பாஸ்மதி ரூ. 499/- தான். வாங்கினால் ஐந்து கிலோ பாஸ்மதி ஃப்ரீ. கொஞ்சம் கூட்டல், வகுத்தல் செய்தால் பத்து கிலோ பாஸ்மதி ரூ. 500/- அதாவது ஒரு கிலோ ரூ. 50/- வெளியே கடையில் நல்லரக பாஸ்மதி ரூ. 48/-க்குக் கிடைக்கிறது. இந்த விளம்பரத்தைப் பார்த்து மயங்கி, பத்து கிலோ பாஸ்மதியை (செலவாகுமோ, என்னமோ தெரியாது) தூக்க முடியாமல், கணவரை தூக்கச் செய்யும் மனைவியர்களே! இதில் ஏமாறுவது யார்? நிச்சயமாக சூப்பர் மார்க்கெட் முதலாளி இல்லை.

அதனால் அன்பு சகோதர, சகோதரிகளே, கிராண்ட் சேல், க்ளியரன்ஸ் சேல் போன்ற விளம்பரங்களைப் படித்து மயங்காமல், சில கொள்கைகளைக் கடைபிடியுங்கள்.

1. ஷாப்பிங்குக்குச் செல்லும் முன், ஒரு லிஸ்ட் எழுதிக் கொண்டு செல்லவும். அதில் எழுதியிருக்கும் சாமான்களை மட்டும் வாங்குவது என்று மன உறுதி செய்து கொள்ளுங்கள்.

2. உள்ளே நுழைந்தவுடன், பெரிய ட்ராலியை எடுத்துக் கொள்ள வேண்டாம். ஷாப்பிங் லிஸ்ட் சின்னது என்றால் சின்னக் கூடையை எடுத்துக் கொள்ளுங்கள்.

3. நாப்தலீன் பால்ஸ், ஸ்க்ரப்பர், பிளாஸ்டிக் உருப்படிகள், துணிகிளிப்புகள், பேப்பர் பிளேட்டுகள், கப்புகள் போன்றவை தெருவோரம் இருக்கும் சின்னப் பெட்டிக் கடைகளில் கிடைக்கின்றன. அங்கே வாங்கலாமே. அந்தக் கடைக்காரர்களும் பிழைக்கட்டுமே. சில சமயம் அவர்களிடம் வாங்கும் சாமான்கள் சூப்பர் மார்க்கெட்டை விட விலை குறைந்ததாகவே இருக்கும்.

4. அப்பளம், தேன், ஜூஸ், ஊறுகாய், ஜாம் போன்றவை சில சமூகநல குழுக்களால், அரசாங்க வாரியங்களால் விற்பனை செய்யப்படுகிறது. இவையெல்லாம் அனாதைகள், ஆதரவற்ற பெண்மணிகள் போன்றவர்களால் தயாரிக்கப்படுபவை. இந்த விற்பனைகள் மூலமாக சேகரிக்கும் பணம், அவர்களுக்காகப் பயன்படுத்தப்படுகிறது. இவர்களிடம் வாங்கினால் நல்ல காரியத்துக்கு உதவிய மனத்திருப்தியும் உண்டாகிறது. ஸோ! மங்கையர் மலர் வாசகப் பெருமக்களே! ஹேப்பி இன்டெலிஜென்ட் ஷாப்பிங்!

- இந்திரா சேஷாத்திரி,
மும்பை - 63.



ஆஹா 50!

வீட்டைப் பூட்டிவிட்டுச் சில தினங்கள் வெளியூர் செல்பவர்கள் மறவாமல் மெயின் ஸ்விட்சை அணைத்து விட்டுச் செல்ல வேண்டும். மின் அழுத்தம், மின்கசிவு காரணமாகப் பூட்டியுள்ள வீட்டில் தீ விபத்து ஏற்படுவதைத் தவிர்க்கலாம்.

- ஜெயஸ்ரீ மகேஷ், வடபழனி.

சென்ற இதழ் சுருக்கம்... பிரபல வங்கி ஒன்றில் வேலை செய்யும் மோகன், மீண்டும் மீண்டும் நகைக் கடன் வாங்க வரும் வாடிக்கையாளரிடம், "கடனை சீக்கிரம் செட்டில் பண்ணிடுங்க சார்.. கடன்னு இருந்தால் மனசை அறுத்துக்கிட்டேதான் இருக்கும்!" என்று அட்வைஸ் செய்கிறான். இருபது ஆண்டுகளாகப் பிரிந்து வாழும் மோகனின் அப்பா இறந்து விட்டதாகச் செய்தி வருகிறது. வயதான தாயாரை அழைத்துக் கொண்டு, இழவு வீட்டுக்குக் கிளம்புகிறான். தன்னை வளர்க்க அம்மாவும் தாத்தாவும் பட்ட கஷ்டமெல்லாம் மோகனின் நினைவுக்கு வருகிறது.

"எனது சிறு வயது நினைவுகள், கனவுகள் எல்லாமே காயப்பட்டு காய்ந்து போனவைதான். தாத்தாவின் ஆதரவு மட்டும் இல்லாது போயிருந்தால், நாங்கள் என்னவாகியிருப்போமோ?

ஆஸ்துமாவால் ராத்திரி முழுவதும் மூச்சிறைத்து அவஸ்தைப்பட்டபோது என்னை குதிரை வண்டியில் தூக்கி வச்சு நாகர்கோவில் ஆஸ்பத்திரிக்கு அம்மா கொண்டு போவாள். அங்கு டாக்டருக்குக் கொடுக்கக் கூட பணம் இல்லாமல் நாங்கள் அவமானப்பட்ட நாட்களும் உண்டு.

கல்லூரிப் படிப்புக்காக நான் நாகர் கோவில் சென்றபோது பலர் உங்க அப்பா என்ன செய்யறார் எனக் கேட்டிருக்கிறார்கள். அப்போதெல்லாம் 'அவர் செத்துப் போயிட்டாரு' எனத் தயக்கமோ கூச்சமோ இல்லாமல் பதில் சொல்லியிருக்கிறேன். அவர் அம்மாவுக்குக் கொடுத்த இம்சையை இப்படிதான் என்னால் பழிவாங்க முடிந்தது.

மகளுக்காக வாதாடி வாதாடி தோற்றுப் போன தாத்தாவும் தளர்ந்துபோய் நான் கல்லூரி முடிக்கும் தருவாயில் இறந்து

# பெத்த கடன்!

ஆர்.கீதாஞ்சலி எழுதிய 'பெத்த கடன்' மினிதொடர் ஏற்கெனவே வேறொரு பத்திரிகையில் சிறுகதையாக வெளிவந்ததாக அறிகிறோம். தவறுதலாக சென்ற இதழில் பிரசுரித்துவிட்டோம். இருப்பினும் கதையின் முடிவைத் தெரிந்து கொள்ள விரும்பும் வாசகர்களுக்காக இங்கே இறுதிப் பகுதியைத் தந்திருக்கிறோம். கவனக் குறைவுக்கு வருந்துகிறோம்!

(ஆ-ர்)



## மினி தொடர் 2

போனார். தாத்தாவின் நண்பரான கூட்டுறவு சங்கத் தலைவர் ராமசாமிதான் என்னைக் கூப்பிட்டு, ''டிகிரி முடிச்சிட்டேல்லே? பேங்கில வேலைக்குச் சேர்ந்திடு'' என்று சொல்லி வேலை போட்டுத் தந்தார். அதன் பிறகு குடும்பக் கஷ்டம் கொஞ்சம் கொஞ்சமாக விலகத் துவங்கியது. அம்மாவும் கொஞ்சம் கொஞ்சமாக இயல்பு நிலைக்குத் திரும்பத் துவங்கினாள்.

ஆனாலும் இன்றைக்கும் நான் சாப்பிடும்போது பக்கத்தில் அப்பாவுக்காக ஒரு தட்டு வைத்து அதில் பரிமாறி, நான் சாப்பிட்டு எழுந்தபிறகு அந்தப் பரிமாறிய தட்டிலுள்ளதைச் சாப்பிடும் அம்மாவை நினைக்கும்போது ஒருபுறம் கோபம் வந்தாலும் 'மறுபுறம்' அவள் மனதுக்கு ஏதோ ஒருவகையில் அது திருப்தி தருகிறது என்றால் அதை நாம் ஏன் சிதைக்க வேண்டும் என, ஒன்றும் பேசாமல் நான் அமைதியாகி விடுவதுண்டு. அம்மாவின் அந்த மானசிக கணவர்தான் இன்று இறந்துவிட்டார்.

'வீடு வந்திடுச்சு சார்'' ஆட்டோக்காரர் சொல்ல பழைய நினைவுகள் கலைந்தன. சங்கு ஊதும் சத்தம் சட்டெனக் காதை நிரப்பியது. வீடு கொள்ளாத கூட்டம்.

நான் முதலில் இறங்கி அம்மாவை கைத்தாங்கலாகக் கூட்டிக் கொண்டு வீட்டிற்குள் நுழைந்தேன்.

ஆர்.கீதாஞ்சலி

உட்கார்ந்திருந்தவர்கள் எல்லாம் இறுக்கமான முகத்துடன் எழுந்தார்கள். அம்மாவுக்கு உறவினர்கள் மத்தியில் நல்ல மரியாதை உண்டு. முற்றத்தில் வைத்திருந்தார்கள் அப்பாவை. கண் மூடி தூங்குவது போல இருந்தார். நெற்றியில் பட்டையாகத் திருநீறு. மூக்கில் பஞ்சு. காலின் பெருவிரல்கள் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன. அப்பாவின் முகத்தைப் பார்த்தேன். கால் பகுதியைத் தொட்டுக் கும்பிட்டேன். அப்பா என்கிற உணர்வு தொண்டைக்குழிக்குள் ஏறி இறங்கினாலும்கூட ''ஏம்பா, அம்மாவுக்கு துரோகம் செஞ்ச?'' கத்திக் கேட்க மனது துடித்தது. கனத்த குரலில் அம்மாவின் அழுகை வீட்டினுள் இருந்து வந்தது.

ஊர்ப் பெரியவர்கள் பக்கத்தில் உட்கார்ந்தேன். 'போகிற வயசா இது? நேற்றைக்குக் கூட நல்லாத்தான் இருந்திருக்காரு'' என நடந்த சம்பவங்களை என்னிடம் விவரித்துக் கொண்டிருந்தார்கள் ஊர்ப் பெரியவர்கள்.

ஆட்கள் வருவதும் அப்பாவின் இரண்டாவது மனைவி பையன்கள் இருவரிடமும் துக்கம் விசாரித்துச் செல்வதுமாக இருந்தார்கள். நான் பெஞ்சில் தலை குனிந்தே உட்கார்ந்தேன். எனக்கு வேண்டியவர்கள் என துக்கம் விசாரிக்க வந்தவர்கள் என் தாத்தாவின் கிராமத்து ஆட்கள்தான்.

நேரம் நகர்ந்துகொண்டே சென்றது. வீட்டுக்குள் ஒரே சலசலப்பு.

''அவன்தான் வயசில மூத்தவன். அவன் இருக்கிறப்ப அது எப்படி முடியும்?'' - ஊர்ப் பெரியவரின் குரல் உரக்கக் கேட்டது.

''அந்தக் குடும்பத்துக்கும் எங்க அப்பாவுக்கும்தான் இருபது வருஷமாக எந்த ஒட்டும் உறவும் கிடையாதே. அதனால் நாங்கதான் கொள்ளி போடுவோம். இரண்டாவது மனைவியின் மகன்களின் குரல் அதைவிட உச்சஸ்தாயியில் கேட்டது. என்னிடம் ஊர் பெரியவர்கள் வந்து விஷயத்தைச் சொன்னார்கள். அவர் பின்னாடியே அவர்கள் இருவரும்.

''நான்தான் கொள்ளி வைப்பேன். இதில் நான் உறுதியாக இருக்கேன்'' - என்னிடமிருந்து இந்தப் பதிலை ஊர் பெரியவர்கள் எதிர்பார்க்கவில்லை என்பதை அவர்கள் முகத்தில் தெரிந்த அதிர்ச்சி ரேகைகளே சொல்லின.

''இல்லப்பா மோகன். அவனுக பிடிவாதமா இருக்கானுக. நீ படிச்சவன். விஷயம் தெரியாதவனல்ல. விட்டுக் கொடுத்திரேன். இதுல என்ன இருக்கு?'' என்றார்கள் பெரியவர்கள். ''முடியாது'' என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினேன்.

''இன்னைக்கு இவன் கொள்ளி வைச்சிட்டுப் போயிடுவான். நாளைக்கு அப்பாவோட சொத்துக்கு பங்கு கேட்டு வந்து நிற்பான். அதையும் கொடுங்கன்னு நீங்களும் நியாயம் பேச வருவீங்க. கொள்ளி போடவிடல்லேன்னா, எந்தப்



ஆஹா 50!

கண்ணாடி வளையல்கள் அழகான மங்களகரமான பொருள். ஆந்திரா, கர்நாடகத்தில் சுமங்கலிகள் கட்டாயம் கண்ணாடி வளையல்கள் அணிய வேண்டும். தங்க வளையல்களுக்கு நடுவே அவர்கள் கையில் கண்ணாடி வளையல்கள் மின்னுவது பார்க்க அழகாக இருக்கும். நாம் சீமந்தத்திற்கு அணிவதோடு சரி. மற்ற நாட்களிலும் அணியலாமே. பார்க்க அழகாக இருப்பதோடு நலிந்த ஒரு தொழிலுக்கு உயிர் கொடுத்தாற்போலவும் இருக்கும்.

- பி. கவிதா, ஹைதராபாத் - 36.

பிரச்னையும் பண்ணமாட்டான் பாருங்க'' இரண்டு பேரும் எகிறினார்கள்.

இதுதான் பிரச்னையா? எனக்கு சுர்ரென்றது!

''எதற்கும் ஆசைப்படாத மனநிலையைத்தான் என் தாய் என் நெஞ்சில விதைத்திருக்கா. இளமையில் வறுமையால கஷ்டப்பட்டபோதுகூட நான் யாருகிட்டேயும் உதவிக் கேட்டுப் போய் நின்னதில்லை. இப்பவா அவர் சொத்தை எதிர்பார்க்கப் போறேன்?'' என்றேன் பளீரென.

''இப்படி வியாக்கியானம் பேசுறாரே... சொத்து வேண்டாம்னா எழுதிக் கொடுக்கட்டும். அதுக்குப் பிறகு கொள்ளி வைக்கட்டும்'' சொத்திலேயே குறியாக இருந்தார்கள் அவர்கள்.

பெரியவர்கள் என் முகத்தைப் பார்த்தார்கள். ''சரி'' என தலையசைத்தேன். பத்து ரூபாய் பத்திரத் தாளைக் கொண்டு வந்தார்கள். அதில், ''எனக்கும் அவரது சொத்துக்கும் எந்த சம்பந்தமுமில்லை. எதிர்காலத்தில் நான் இதில் உரிமை கொண்டாட மாட்டேன்'' என எழுதியிருந்ததில் கையெழுத்திட்டுக் கொடுத்தேன். அதை வாங்கி பத்திரப்படுத்திய பிறகு அவர்கள் முகத்தில் ஒருவித நிம்மதி.

**சு**டுகாடு. அப்பாவுக்குக் கொள்ளி வைத்துவிட்டு நிமிர்ந்தேன். தீ மெள்ள மெள்ளப் பற்றியது. மொட்டையடித்துவிட்டுப் பக்கத்திலுள்ள ஆற்றில் குளித்தேன். என்னுடன் சேர்ந்து அவர்களும் குளித்தார்கள். ஈரத் துண்டைப் போர்த்தியவாறு அப்பாவின் வீட்டுக்கு ஆட்டோவில் வந்தேன். மனமே தெளிவான மாதிரி இருந்தது.

அழுது கொண்டு இருந்த அம்மாவை, ''போகலாம்'' என கண்களால் கூப்பிட்டேன். உட்கார்ந்திருந்தவர்கள் என்னை வெறித்துப் பார்த்தார்கள். அம்மாவும் என் பேச்சுக்குக் கட்டுப்பட்டு கண்ணீரைத் துடைத்தவாறே எழுந்து வந்தாள்.

''ஏம்பா மோகன் இப்பவே கிளம்பறே? நாளைக்கு விசேஷமெல்லாம் இருக்குதல்ல'' ஊர்ப் பெரியவர்கள் அக்கறையோடு மறித்தார்கள்.





''அப்பா, இறந்ததை எனக்குத் தகவல் தெரிவிச்சீங்க. கொள்ளி வைக்கிற வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தீங்க. அதுக்கு உங்களுக்கெல்லாம் நன்றிங்க அய்யா! ஒரு பிள்ளைக்குச் செய்ய வேண்டிய கடமையை எங்க அப்பா எனக்குச் செய்யாமல் இருந்திருக்கலாம். ஆனால் நான் ஒரு தந்தைக்குச் செய்ய வேண்டிய கடைசி கடனை, அதாவது பெற்ற கடனை செய்துட்டேன். கடன் இருந்தாலே மனசை அறுத்துக்கிட்டு இருக்கும். இப்ப மனசு இலேசாயிடுச்சு. புறப்படறேன்'' சொல்லியவாறே அம்மாவை அணைத்தவாறு ஆட்டோவில் ஏறினேன். ஆட்டோ கிராமத்தை நோக்கிப் புறப்பட்டது.

நாளை நான் சாப்பிட உட்காரும்போது என் அருகில் அம்மா தட்டு வைப்பாளா... மாட்டாளா. இப்போதைய சூழ்நிலையில் இதற்கு மேல் பெரிதாக ஒன்றும் எனக்கு யோசிக்கத் தோன்றவில்லை!

(மற்றும்)

## நாணயக் குழப்பம் தீருமா?

## ஆஹா 50!



இப்பொழுது 2 ரூபாய், 1 ரூபாயும், 5 ரூபாய், 50 பைசாவும் ஒரே மாதிரி உள்ளன. இதனால் நிறையக் குழப்பங்கள் ஏற்படுகின்றன. வித்தியாசம் தெரியும்படி எடையிலோ, வடிவத்திலோ மாற்றி அமைத்தால் நல்லது. ரிசர்வ் வங்கி கவனிக்குமா?

- கீதா வெங்கடேஸ்வரன், சிட்லபாக்கம்.

## இவை எல்லாமே ஆஹா 50! தான்!

இரவு ரயில் பிரயாணத்தில் செல்போனை சைலன்ட் மோடில் வைத்தால், மற்ற பிரயாணிகளுக்கு, முக்கியமாக குழந்தைகள், வயதானவர்கள், தூக்கம் கெடாமலிருக்கும். அதே மாதிரி மென்குரலில் பேசினாலும் தொந்தரவு இல்லாமலிருக்கும்.

- வி. சகுந்தா, கோயமுத்தூர்.

பழைய அல்லது தீர்ந்து போன ஸ்டிக்கர் பொட்டு அட்டையை பாத்ரூம் கதவு மேல்புறமாக ஒட்டிவைத்தால் நாம் குளிக்கும் போது ஸ்டிக்கர் பொட்டை வேறு எங்கும் ஒட்டாமல் அந்த அட்டையிலேயே ஒட்டி வைத்து உபயோகிக்கலாம். சரும அலர்ஜி ஏற்படாது.

- ஜெ. லலிதா, காரைக்கால்.

விடுமுறை நாட்களில் குழந்தைகளை ஒன்றுகூடி விளையாட விட்டால், அவர்கள் கவனம் டி.வி பக்கம் திரும்பாமல் இருக்கும்.

- கே. விஜயா, திருச்சி.

ஹோட்டலில் சாப்பிடும் போது கையோடு இரண்டு இட்லியோ, பொங்கலோ பார்சல் வாங்கி வெளியே பசியால் வாடும் ஒரு மனிதனுக்குக் கொடுத்தால் அதில் உண்டாகும் திருப்தியே தனிதான்!

- காந்தி சுப்ரா, சென்னை - 90.

படிக்கும் குழந்தைகள் வீட்டில் இருந்தால், அவர்களது ஆசிரியர்களிடம் கரும்பலகையில் எழுதியிருப்பதை குழந்தைகள் சரியாகப் படிக்கிறார்களா எனக் கவனிக்கச் சொல்லவும். இதனால் குழந்தைகளுக்கு வரும் பார்வைக் குறைபாடுகளை முன்கூட்டியே அறிந்து கொள்ளலாம்.

- ஜி. லக்ஷ்மி வாசுதேவன், வேளச்சேரி.

முருங்கை இலையைக் கொத்தாக எண்ணெயில் பொரித்து அத்துடன் வறுத்த மிளகு, சீரகம், பெருங்காயம், உப்பு சேர்த்து மிக்ஸியில் பொடியாக்கி நெய் சாதத்தில் பிசைந்து சாப்பிட்டால் ருசியாகவும், மணமாகவும் இருக்கும். உடம்புக்கும் மிகவும் நல்லது. ரத்தக் கொதிப்பு குறையும்.

- சி. வசந்தகோகிலம், தில்லைகங்காநகர்.

பள்ளிப் புத்தகங்கள் வாங்கச் செல்லும்போது குழந்தைகளையும் உடன் அழைத்துச் சென்று அவற்றின் விலைகளைச் சொல்லுங்கள். அப்பொழுதுதான் பணத்தின் அருமையை உணர்ந்து புத்தகங்களைப் பாதுகாப்பாக உபயோகிப்பார்கள்.

பிரவீணா அருண், பென்னாகரம்.

# வேண்டிய எடை - வேண்டும் உடலமைப்பு

அந்த நகைக்கடையின் வாசலில் இருவரும் சந்தித்துக் கொண்டனர். "நீ ராகவி தானே?" என்று கேட்டாள் ப்ரியம்வதா. "ஆமாம் ப்ரியம்வதா" என்றாள் ராகவி புன்னகையுடன்.

ஒரே கல்லூரியில் படித்த தோழிகள் பத்து வருடங்களுக்குப் பிறகு சந்திக்கிறார்கள். அருகிலிருந்த ஹோட்டலுக்குச் சென்றார்கள். சிறிது நேரத்திற்குப் பிறகு ப்ரியம்வதா தன் மனதில் தோன்றியதை தயக்கத்துடன் வெளிப்படுத்தினாள். "ராகவி, சொல்றேன்னு தப்பா எடுத்துக்காதே. காலேஜிலே ஒல்லிக்குச்சியா இருந்த. இப்ப நீ சதை போட்டிருக்கே"

"என்ன செய்யறது ப்ரியா? சுந்தர் என்னை வேலைக்குப் போக வேணாம்னுட்டாரு. வீட்ல எல்லா வசதிகளும் உண்டு. அதனாலே எடை ரொம்ப ஏறிடுச்சு. சரி, என்னை விடு. நீ காலேஜிலே படிக்கும் போது மிஸ் ப்யூட்டியா தேர்வானவ. ஆனா இப்போ? முகமே மாறிப் போச்சே. கண்ணுக்குக் கீழே கருவளையம். முகத்திலே சுருக்கம். உனக்கு என்னாச்சு?"

"சாஃப்ட்வேர் கம்பெனியிலே எக்ஸிக்யூடிவா இருக்கேனே... நேரம் காலம் பார்க்காமல் உழைக்க வேண்டியிருக்கு. எப்போதும் கம்ப்யூட்டர் முன்னாலேயே வேலை. என்னை கவனிச்சுக்கவே நேரமில்லை. இருந்தாலும் அப்பப்போ சில க்ரீம்களை தடவிக்கிறேன். ஆனா பலன்தான் இல்லே. முகமாச்சே... அதிக ரிஸ்க் எடுத்துக்க முடியுமா?" என்று பெருமூச்சு விட்டாள் ப்ரியம்வதா.

அப்போது பின் மேஜையிலிருந்த ஒரு பெண்மணி அவர்களை நோக்கி வந்தாள். "என் பெயர் சாதனா. நீங்க பேசறது என் காதிலே விழுந்தது. நீங்க ரெண்டு பேருமே ஸ்லிம் அண்ட் கேர் வகுப்புகளிலே சேரலாமே. நல்ல பலனிருக்கும். நான் கூட அங்கே சேர்ந்த பிறகுதான் இந்தப் பொலிவு வந்தது"

இருவரும் சாதனாவை உற்றுப் பார்த்தனர். கச்சிதமான உடலுடன் அழகான தோற்றம். பேச்சிலும் ஒரு நம்பகத் தன்மை இருந்தது.

சாதனா மேலும் தொடர்ந்தாள். "ஸ்லிம் அண்ட் கேர் நிறுவனத்திலே கடுமையான டயட்டில் இருக்கச் சொல்வதில்லே. உணவுப் பழக்கத்திலே சின்ன மாறுதல்கள் போதும். ஜாகிங், வாக்கிங் அவசியமில்லே. இருந்தாலும் உடல் எடையைக் குறைச்சிடறாங்க. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட உயர்தரக் கருவிகள் இந்த மாற்றத்தை செஞ்சிடுது. பக்க விளைவுகள் எதுவும் கிடையாது. பதினாலு வகுப்பு கொண்ட ஒரே கோர்ஸிலேயே சுமார் 20 கிலோ எடை குறைவதுண்டு. தொடர்ந்து 28 செஷன்களிலே நாற்பது கிலோ எடையைக் குறைச்சுக்கிட்டவங்களும் உண்டு. தவிர இந்தக் கருவிகள் உடலில் அதிகப்படி சதை போட்டிருக்கும் பகுதிகளாகப் பார்த்து எடையைக் குறைப்பதால் உடல் அழகும் அதிகமாகுது.

பயிற்சிகளை நிறுத்தின அடுத்த மாசமே போன எடை மறுபடியும் வந்து சேராமலிருக்க ஸ்லிம் அண்ட் கேர் அமைப்பை நடத்தும் ரிஷிதா சின்னச் சின்ன ஆலோசனைகளைத் தர்றாங்க. எல்லாமே ஈஸியான வழிகள்தான்" என்ற சாதனா இப்போது ப்ரியம்வதாவைப் பார்த்தாள். "இந்த நிறுவனத்தின் ஃபேஸ்லிப்டிங் வகுப்புகளில் சேர்ந்தால் கருவளையங்கள் காணாமப் போகுது. டபுள்சின்னும் சுருக்கங்களும் மறைஞ்சிடுது.

அங்கே பெண்களுக்கு மட்டும்தான் அனுமதி. ஆலோசனை தருகிற டாக்டர், டயட்டீஷியன், பிசியோதெரபிஸ்ட் எல்லோருமே பெண்கள்தான். நமக்கு வசதியான நேரத்தை தேர்ந்தெடுக்கலாம். ஞாயிற்றுக் கிழமைகளிலும் திறந்திருக்கிறது. உடல் பருமனாக இருக்கும் சில பேருக்கு குடும்பப் பிரச்னைகளால் டென்ஷன் அதிகமாகி டிப்ரஷன் ஆயிடும். முதல்லே அவங்க மனசை இயல்பு நிலைக்குக் கொண்டு வந்த பிறகுதான் எடையைக் குறைப்பாங்க. இவங்களுடைய மனநலத்துக்கு ஆலோசனை தருவதற்காகவே, வெளிநாடுகளுக்கெல்லாம் போய் பயிற்சி தரும் ஒரு பெண் சைகாலஜிஸ்ட் அங்கே இருக்காங்க."



சில மாதங்கள் கழித்து ப்ரியம்வதாவையும், ராகவியையும் பார்த்த அவர்களின் மற்றொரு கல்லூரித் தோழி லலிதா, "ஹேய், எப்படி நீங்க ரெண்டு பேரும் காலேஜிலே இருந்ததைப் போலவே பளிச்சுனு இருக்கீங்க?" என்று வியக்க, இருவரும் ஒருவரையொருவர் பார்த்து புன்னகைத்துக் கொண்டனர்.

தொடர்பு கொள்ள :

**ரிஷிதா, Slim and Caare,**
**12ஏ, எலிகன்ட் அபார்ட்மென்ட், இந்தி பிரச்சார் தெரு,**
**தி.நகர், சென்னை-17.**
**தொலைபேசி : (044) 24332838 / 9444413224**

ஆடி மாதம் வந்தாலே, ஊரெங்கும் ஷாப்பிங் களை கட்டிவிடுகிறது! ஆடிக் கழிவு, ஸ்பெஷல் தள்ளுபடி... எக்ஸ்சேஞ்ச் சலுகை, டிஸ்கவுண்ட் மேளா... என்று ஏதேதோ சொல்லி, பெண்களை பையும் கையுமாக, கடைத் தெருவுக்கு வரவழைத்து விடுகிறார்கள். இதெல்லாம் உண்மையிலேயே பயனுள்ளவைதானா? ஆடி எக்ஸ்சேஞ்ச் மேளா, ஆடித் தள்ளுபடி, சிறப்புச் சலுகை, 0% வட்டி என கடைக்காரர்கள் வசீகரமாக விளம்பரம் செய்கிறார்களே! இதையெல்லாம் நம்பலாமா? இல்லை வெறும் வியாபாரத் தூண்டிலா? 'ஈகிள் எண்டர்பிரைசஸ்' உரிமையாளர் என். தங்கவேலுவிடம் பேசினோம்...



# ஆடித் தள்ளுபடி

தந்திரமும் இல்லை... தூண்டிலும் இல்லை! பிஸினெஸ் ப்ரமோஷன்தான்! 0% வட்டி என்பது நிச்சயம் வாடிக்கையாளர்களுக்கு லாபமான விஷயம்தான்! ஃபிரிட்ஜ், டி.வி. போன்றவற்றின் விலைகளை, நிறுவனங் களே தத்தம் விளம்பரங்களில் தெளிவாக அறிவித்து விடுகிறார்கள். அதனால் எங்கள் இஷ்டத்துக்கு எல்லாம் கூட்டி, பின்பு 'தள்ளுபடி' என்று தந்திரமாகக் கழித்து விட முடியாது.

ஆடி எக்ஸ்சேஞ்ச் மேளா, விழாக்கால தள்ளுபடி போன்றவையும் புதிய வாடிக்கையாளர்களைக் கவர செய்யப் படும் வியாபார யுக்திதான்!

உதாரணத்துக்கு, ஏ.ஸி.யில் 'ஓஸோன் ஸ்ப்ரே' என்றொரு புதியமாடல் வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அதற்கு முந்தைய வருடம் வந்து புழக்கத்திலிருக்கும் 'பயோ-ஸ்மார்ட்' மாடலை வேகமாக விற்றுத் தீர்த்தால்தானே புதுசுக்கு மவுசு கிடைக்கும்? இரண்டாயிரம் ரூபாய் தள்ளுபடி என்று அறிவித்தால், வெகுவாக விற்றுத் தீர்ந்துவிடும். இதில் கஸ்டமர், டீலர், தயாரிப்பாளர் மூன்று பேருக்குமே லாபம் தான்!

டி.வி என்று எடுத்துக் கொண்டால், அதில் இருபதுக்கும் மேற்பட்ட நிறுவனங் கள் இருக்கின்றன. ஏகப்பட்ட போட்டா போட்டி! அவற்றுக்கிடையே, தரத்திலும், தொழில்நுட்பத்திலும் அப்படியொன்றும் பெரிய வித்தியாசமிருக்காது என்பதால், 'இலவசங்கள்' தந்தால், அது, கூடுதல் சிறப்பம்சமாகத் தோன்றிவிடும்!

இதுவும் கஸ்டமர் சைக்காலஜி தான்!''



* என். தங்கவேல்

''ஷாப்பிங்குக்கு, ஆண்

களை அழைத்து வருவதே பெண்கள்தான் என்பதால், மிகுந்த கண்ணியம் காட்டி வரவேற்க வேண்டும். ''வாங்கம்மா... வீட்டுல எல்லோரும் சௌக்யமா? நல்லா இருக்கீங்களா?'' போன்ற நட்பான வார்த்தைகளுக்கு இருக்கும் மதிப்பே தனி தான். ''சேர் போடுப்பா... ஏய்.. தம்பி... அம்மாவைக் கவனி! ஃபேனைப் போடு!'' போன்ற உபசரிப்பை, உரிமையாளரே செய்யும் போது, வாடிக்கை



# லாபமா?

யாளர்கள் குளிர்ந்து போவார்கள். அப்புறம் சலிப்பே இல்லாமல் பொருள்களை எடுத்துக்காட்டி, அவற்றின் நிறைகளை வெளிச்சம் போட்டு எடுத்துச் சொல்ல வேண் டும்.

''கலர் பிடிக்கலை; மாடல் பிடிக்கலை'' என்று மறுநாளே அவர்கள் வந்து நின்றாலும், முகம் சுளிக்காமல், இயன்றதைச் செய்து தரணும்.

தமக்குத் தெரிந்த பெண்களிடம் வாய் வழியாக விளம்பரப் பிரசாரம் செய்வதில் பெண்கள் சமத்தர்கள் என்பதால், மகளிர் மனம் கோணாமல் நடக்க வேண்டும்.

இதையெல்லாம், நாடகமாகச் செய்யாமல், உளமாரச் செய்யும்போது, நன்மை பல மடங்கு பெருகும்.




**ஷாப்பிங் செய்யும் போது கவனிக்கப்பட வேண்டியவை என்ன?**

★ 'ஹை-டெக்' ஆன பொருள் ஒன்றை, முதன் முதலாக வாங்கும் போது, இலவச டெமோவுக்கு ஆளை அனுப்பச் சொல்லி, முழுமையாக இயக்கக் கற்றுக் கொள் ளுங்கள்.

★ ஃப்ரீ டெலிவரி கேளுங்கள். பொருளுடன் தரப்படும், இலவசக் குறிப்புப் புத்தகத்தை, வீட்டிலிருக்கும் அனைவரும் முழுமையாகப் படித்துப் புரிந்துகொண்ட பின்னரே, இயக்க வேண்டும்.

★ சர்வீஸ் புத்தகம், விற்பனை பில், வாரண்டி கார்டு போன்றவற்றை பத்திரப் படுத்துங்கள்.

★ உங்கள் வாழ்க்கை முறைக்கு ஏற்ற எலக்ட்ரானிக்ஸ் பொருள்களை முறையாகத் தேர்வு செய்யுங்க. ''என் வீட்டிலும் மைக்ரோ ஓவன் இருக்கு; வேக்யூம் க்ளீனர் இருக்கு'' என்று பெருமைக்காக எந்தப் பொருளையும் வாங்காதீர்கள். எந்தப் பொருளை வாங்கினாலும், அது நமக்கு 100% பயனுள்ளதாகவும், பட்ஜெட்டுக்கு தக்கபடியும் இருக்கணும்.

உதாரணத்துக்கு... ஒரு மைக்ரோ ஓவன் வாங்குவதாக இருந்தால், அதன் சூட்சமத்தையும், தொழில்நுட்ப அதிசயத்தையும் தெரிந்து கொண்டு, அதில் சமைக்கும் ஆர்வம் இருந்தால் மட்டும் வாங்குங்க.

★ ஏகப்பட்ட காசைக் கொட்டி, ஒரு பொருளை வாங்குவது பெரிசில்லை; அதை முறைப்படி பராமரிப்பதில்தான், ஷாப்பிங்கின் சாமர்த்தியமே அடங்கியுள்ளது. 'ஏதாவது பழுதாகட்டும்' என்று காத்திராமல், வருடந்தோறும் சர்வீஸ் பார்ப்பது நல்லது.

★ ஷாப்பிங் என்பது ஒரு கலை! அதில் பெரும்பான்மையான பெண்கள் டாக்டரேட் டிகிரியே வாங்கியவர்கள்தான். இருந்தாலும், சில விஷயங்களில் தெளிவாக இருந்தால், ஆடி ஷாப்பிங், அமர்க்களமான ஷாப்பிங்தான்!

– அம்மு

## நகை, பத்திரம்!



ஆஹா 50!

எப்போதும் வீட்டை விட்டு வெளியில் கிளம்புவதற்கு முன் கழுத்தில் உள்ள நகைகளை இடப்பக்க ரவிக்கையின் மேல் உள்ளே விட்டு கொக்கியைப் போட்டுக் கொண்டால் திருடர்களிடம் நகைகளைப் பறிகொடுக்காமல் இருக்கலாம்.

- மாயா சேகர், மும்பை.

## இவை எல்லாமே ஆஹா 50! தான்!

பாட்டில் தண்ணீர் வாங்கி உபயோகிக்கும் சிலர், அந்த பாட்டில்களில் தண்ணீரை நிரப்பி ப்ரிஜ்ஜில் வைத்து உபயோகப்படுத்துகிறார்கள். இது மிகவும் தவறானது. உடல்நலத்திற்கு கேடு விளைவிக்கும் என்பதால், இந்த பாட்டில்களை உபயோகம் முடிந்தவுடன் தூக்கி எறிந்துவிடவும்.

- ச. வசுமதி, சென்னை.

இளநீரைக் கண் மட்டும் திறந்து, அரை ஸ்பூன் சர்க்கரை போட்டு மூடி வைத்து விடுங்கள். மறுநாள் ஆப்பம் செய்யும்போது கலந்து செய்து பாருங்கள். சூப்பர் டேஸ்ட். இந்த இளநீர், குழியாப்பம் செய்யவும் ஏற்றது.

- லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன், ஜம்மு.

அனைத்துப் பள்ளிப் பேருந்துகளுக்கும் ஒரே நிறத்தில் வர்ணம் அடித்தால், குழந்தைகள் பயணிக்கிறார்கள் என்ற ஜாக்கிரதை உணர்வு மற்ற ஓட்டுநர்களுக்கு ஏற்படும். விபத்துகளும் தவிர்க்கப்படும்.

- உஷா சம்பத், சென்னை - 10.

பள்ளி திறக்கும் நாளன்றே இலவச பஸ் பாஸ் கிடைத்தால் மாணவர்களின் பயண டென்ஷன் குறையும்.

- ஆர். ஜானகி, திருநின்றவூர்.

சாதம் கொதிக்கும் போது, கஞ்சியை ஒரு கப் எடுத்து, அதில் கொட்டைப் பாக்கு அளவு வெண்ணெயைப் போட்டு கர்ப்பிணி பெண்ணுக்குக் கொடுத்து வந்தால், சுகப்பிரசவம் ஆகும்.

- கீதா கிருஷ்ணமூர்த்தி, மைலாப்பூர்.

கைக்குழந்தை வைத்திருக்கும் இளம்தாய்மார்கள் ஸ்டிக்கர் பொட்டு, மோதிரம், ஒட்டு மூக்குத்தி, கம்மல்களைத் தவிர்க்கவும். குழந்தை சட்டென்று எதையும் வாயில் போட்டுக் கொண்டுவிடுவதால் வரும் ஆபத்தைத் தவிர்க்கலாமே!

- பி. மீனாக்ஷி, கல்லிடைக்குறிச்சி.

தொண்டை கட்டிக் கொண்டால் வெந்நீரில் உப்புடன் கொஞ்சம் ஏலக்காய்த் தூள் போட்டு இரண்டு மூன்று தடவை வாயைக் கொப்பளித்தால் சீக்கிரம் குணமடையும்.

- ராதா விஸ்வநாதன், ஜாம்ஷெட்பூர்.




தெய்வங்கள், மணமக்கள், குழந்தைகள் இவர்களின் முன் நின்று பெண்கள் ஆரத்தி எடுப்பர்.

இதன் தாத்பர்யம் : மஞ்சள் - வியாழன் தேவகுரு.

சுண்ணாம்பு - சுக்கிரன் - அசுரகுரு.

இந்த இருவரும் மோதிக் கொள்ளும் போது ஏற்படுவது போராட்டம். இதுவே செந்நிறம்.

வெற்றிலை - புதன் - விஷ்ணு சமாதான புருஷன்!

வாழ்க்கையில் போராட்டம் நிகழும் போது போராட்டத்தை எதிர்த்து சமாதானமாக வெற்றி பெற வேண்டும். இந்த வெற்றி, தீயோர் கண் பார்வையில் பட்டு, தீமை வரக்கூடாது என்பதற்காகவே திருஷ்டிப் பரிகாரமாக ஆரத்தி எடுக்கப்படுகிறது.

- ஜே. வனிதா ஜெயராம்,
சென்னை - 01.

# சபாஷ் சரியான ஜோடி!



மிளகு சீரக ரசம் + பருப்புத் துவையல்
மோர்க்குழம்பு + பருப்பு உசிலி
வற்றல் குழம்பு + சுட்ட அப்பளம்
அடை + அவியல்
வெண் பொங்கல் + சின்ன வெங்காயம் கொத்சு
கீரை மிளகூட்டல் + மாங்காய்ப் பச்சடி
சாம்பார் + வடை
ஆப்பம் + தேங்காய்ப் பால்
பலாச்சுளை + தேன், நெய்
தயிர் + சர்க்கரை
லெமன் ஜூஸ் + சர்க்கரை + உப்பு
புளியோதரை சாதம் + பொரித்த வடகம்
முருங்கைக்காய் சாம்பார் + உருளைக்கிழங்கு மசால் பொறியல்
வெள்ளரிப்பழம் + வெல்லச் சர்க்கரை
பனை நுங்குடன் + இளநீர்
தேங்காய்த் துவையல் + தயிர்ப்பச்சடி
தயிர்சாதம் + வடுமாங்காய்

- எஸ். பத்மா, நங்கநல்லூர்

---

# ரூ. 5,000 பரிசு அறிவுப் போட்டி - 5 முடிவு
## பரிசு பெறும் அதிர்ஷ்டசாலிகள்!

குலுக்கல் முறையில் ரூ 250/- பரிசு பெறும் இருபது அதிர்ஷ்ட சாலிகளின் பட்டியல் இதோ!

1. ஆர். ஜெபசித்ரா, வாலாஜா பேட்டை, 2. கலைச்செல்வி, ஜெயங் கொண்டம், 3. சி. கவிதா சந்திர சேகர், உறையூர், 4. ரம்யா ராகவன், கோரமங்கலா, 5. எஸ். என். கனி மொழி, மேற்கு மாம் பலம், 6. லக்ஷ்மி கோபாலன், திருவண்ணாமலை, 7. ராதா ஸ்ரீநிவாஸன், ராணிப்பேட்டை, 8. டி.ராஜேஸ்வரி, சிங்காநல்லூர், 9. ஜெயாராஜாமணி, நரிமேடு, 10. எம். சாந்தி, திருவண்ணாமலை, 11. ஆர். லக்ஷ்மி, கோயமுத்தூர், 12. ஜி. நிர்மலா, பெங்களூர், 13. பி. ஜோதிமணி, வத்தலக்குண்டு, 14. பி. காந்திமதி, மயிலாடுதுறை, 15. எஸ். ஜெயலட்சுமி, நாகப்பட் டினம், 16. ஜெ. மீராபாய், கிழக்கு தாம்பரம், 17. வி. சித்ரா, சிதம்பரம், 18. கோமகள் சூர்யா, சேலம், 19. கே. வைத்திய லிங்கம், மதுரை, 20. ஆர். லக்ஷ்மி, கொல் கத்தா.



### ஜூன் 2008ல் வெளியான அறிவுப் போட்டி -5 விடைகள்



விடைகள் : 1. ஜாக்கிசான், 2. சரப்ஜித் சிங், 3. ப்ரியங்கா, 4. தியோரா, 5. பத்து, 6. கோயில்கள், 7. ஹர்பஜன்சிங், 8. சீனா, 9. தங்க நாணய மோசடி, 10. அமிதாப்பச்சன்

# கானல் கனவு

கே.நிருபமா

அந்த ஐ.டி. கம்பெனியில் வேலைக்கான நேர்முகத் தேர்வு நடந்து கொண்டிருந்தது. கம்பெனியின் சி.இ.ஓ. ப்ரதீப் பரபரப்பாக இருந்தான். "அடுத்த காண்டிடேட் - காஞ்சனா" என்றபடி சி.வி.யை மேஜை மேல் வைத்துவிட்டுப் போனான் ப்யூன் சரவணன்.

"மே ஐ கம் இன்?" உள்ளே நுழைந்தவளைப் பார்த்து ஒரு கணம் அதிர்ந்து போனான் ப்ரதீப். காஞ்சனா அவனை எதிர்பாராமல் சந்தித்ததில் , தடுமாறித்தான் போனாள். ஒரு கணம் 'இந்த வேலை கிடைத்தாற்போலத்தான்' என எண்ணியது அவள் மனம். உடனே சமாளித்துக் கொண்டு அனைவருக்கும் வணக்கம் சொன்னாள். "ப்ளீஸ் டேக் யுவர் சீட்" அனுமதியுடன் உட்கார்ந்தாள். ப்ரதீப்பின் சிந்தனை ஐந்தாண்டுகள் பின்னோக்கி ஓடியது.

சிறுகதை

இந்தக் காஞ்சனாவை ஜாதகப் பொருத்தம் பார்த்துப் பெற்றோருடன் போய்ச் சம்பிரதாயமாகப் பெண் பார்த்தான். காஃபிடே, ஃபோரம் என்று இரண்டு மூன்று முறை சந்தித்துப் பேசி, நிச்சயதார்த்தத்திற்கு நாள் கூடக் குறித்தாகியிருந்தது.

திடீரென ஒருநாள் காலை காஞ்சனாவின் தந்தையிடமிருந்து ஃபோன்கால்.

''காஞ்சனாவிற்கு நேற்று எங்கேஜ்மெண்ட் ஆயிற்று. தெரிந்த இடம்தான். பிள்ளைக்கு ஸ்டேட்ஸில் வேலை'' என்று பாடம் ஒப்புவிப்பது போல் சொன்னார்.

ஃபோனை எடுத்த ப்ரதீப்பின் தாய், ''வெரிகுட். ஆல் தி பெஸ்ட்'' என்று சுருக்கமாக வாழ்த்திவிட்டு போனை வைத்தாள்.

ப்ரதீப் வீட்டார் ஏமாற்றமடையவில்லை என்றால் அது பொய்யாகும். முக்கியமாக மறுபடியும் பெண் தேடும் படலத்தை முதலிலிருந்து ஆரம்பிக்க வேண்டும் என்று கவலை. ஸ்டார்ட் அப் கம்பெனி எனப் பயந்தவர்கள் சிலர். பெண்கள் ஊரை விட்டு வெளியூருக்கு வர மறுப்பது இன்னொரு பிரச்னை. ப்ரதீப் வீட்டுக்கு ஒரே பிள்ளை என்பதால் மாமனார் மாமியார் கூடவே இருப்பார்கள் என்பதையும் சில பெண்கள் விரும்புவதில்லை. ''சரி... நம்ம கையில என்ன இருக்கு?'' என மனத்தைத் தேற்றிக் கொண்டு காரியத்தில் இறங்கினர்.

ஐ.ஐ.டி., ஐ.ஐ.எம். எனப் புகழ்வாய்ந்த இன்ஸ்டிடியூட்களில் படித்த அழகன் தான் ப்ரதீப். எனினும் ஓரளவு சிரமப்பட்ட பிறகுதான் அழகும், அறிவும், குணமும் உள்ள கீர்த்தனா அவன் வாழ்க்கைத் துணையானாள். இல்வாழ்க்கை இனிதே நடந்து இன்று ஒரு பெண் குழந்தையின் தந்தையாகி இருக்கிறான். கீர்த்தனாவின் அதிர்ஷ்டமும், ப்ரதீப்பின் அபாரத் திறமையும் சேர்ந்து கம்பெனியும் நல்ல வளர்ச்சி அடைந்திருக்கிறது.

இதனிடையில் அமெரிக்காவில் வட்டச் சுழற்சியாக ஏற்படும் மந்த நிலை காரணமாக பல சாஃப்ட்வேர் கம்பெனிகளில் பயங்கர ஆட்குறைப்பு. அதில் பாதிக்கப்பட்டவர்களில் காஞ்சனாவும் ஒருத்தி. இதோ, வேலை தேடி இந்தியா வந்திருக்கிறாள்.

கனவிலிருந்து விழித்தவன் போல் ப்ரதீப், உடனே நிகழ்காலத்திற்கு வந்து, மற்ற குழு உறுப்பினர்களுடன் சேர்ந்து இன்டர்வ்யூவை முடித்தான். காஞ்சனா கேள்விகளுக்குப் பொருத்தமாக, நன்றாகவே பதிலளித்தாள்.

''தாங்க்யூ'' என்று சொல்லிவிட்டு எழுந்திருக்க முயன்ற காஞ்சனாவை எச்.ஆர். மேனேஜர் சுந்தர்ராம், ''நீங்கள் கல்யாணமானவர் என விண்ணப்பத்தில் குறிப்பிட்டுள்ளீர்கள். உங்கள் கணவர் என்ன செய்கிறார், எங்கிருக்கிறார் என்று தெரிந்து கொள்ளலாமா?'' என்று கேட்டான்.

கண்களில் ததும்பப் பார்த்த கண்ணீரை சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, ''அவர் அமெரிக்காவிலேயே வேறு வேலை தேடிக் கொண்டிருக்கிறார்'' என்று மட்டும் சொன்னாள். இவளை விவாகரத்து செய்து குழந்தையுடன் தாய்நாட்டிற்கு அனுப்பி விட்டு, அங்கே குடியுரிமை பெற்ற பெண்ணை மணந்து கொண்டு 'செட்டில்' ஆனதைச் சொல்லவில்லை.

ப்ரதீப்பை நிராகரித்துவிட்டு அமெரிக்கக் கனவெனும் கானல் நீரைத் துரத்தியது எத்தனை பெரிய முட்டாள்தனம் என்பது இப்போது உறைத்து என்ன பயன்?

இவளைப் பழிவாங்க ப்ரதீப்புக்கு நல்லதொரு வாய்ப்பு. விட்டு விடுவானா என்ன? காஞ்சனா கவலையில் தோய்ந்து இருந்தபோது, ப்ரதீப்பின் குரல் கேட்டது.

''மிஸஸ். காஞ்சனா, உங்களுடைய வேலைக்கான ஆர்டர் இன்னும் இரண்டு நாட்களில் கிடைக்கும்!'' என்றான் கம்பீரமாக!

''மிக்க நன்றி'' என்று சுருக்கமாகப் பதிலளித்த காஞ்சனா ப்ரதீப்பின் பெருந்தன்மைக்கு முன்னால் தான் ரொம்பச் சின்னதாகி விட்டதாக உணர்ந்தாள்.

# “இங்கிலாந்து மலர் மருந்துகள்”



(கண்டு பிடித்தவர்: எட்வர்டு பாட்ச் என்ற M.B.B.S., M.R.C.S., படித்த இலண்டன் மாநகர அல்லோபதி டாக்டர்.)

மொத்தம் 38 மருந்துகள். ஒவ்வொன்றும் இங்கிலாந்து காடுகளில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டுமே காணப்படக்கூடிய மலர்களிலிருந்து தயாரிக்கப்படுகிறது. இப்பூக்களில் பல இந்தியாவில் காணப்படவில்லை. இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்டு மாத்திரை வடிவில் விற்பனை செய்கிறோ எவ்வயதினராயினும் வேளைக்கு ஒரு மாத்திரை சுவைத்து எப்போது வேண்டுமானாலும் சாப்பிடலா மேற்சொன்ன 38 மலர் மருந்துகளில் செஸ்ட்நட்பட், கார்ஸ், ரெட் செஸ்ட்நட், ஸ்வீட் செஸ்ட்நட் வாட்டர் வயலட் என்ற மருந்துகள் பற்றி கீழே பார்ப்போம்.

நீச்சல் கற்க தண்ணீரில் முதலில் இறங்க வேண்டும். வீட்டில் உட்கார்ந்து கேள்வி கேட்டு நீச்ச கற்க முடியாது. இதேபோல் மலர் மருந்துகள் பற்றி தெரிந்து கொள்ள அவற்றை சாப்பிட்டுப் பார்த்தா மட்டுமே தெரிந்து கொள்ள முடியும். வேறு வழியில்லை.

மலர் மருந்துகளை மற்றவர்கள் எப்படி உபயோகிக்கிறார்கள் என கீழே பார்ப்போம்.

**வாட்டர் வயலட்:** பண்டிகைகள் கடவுளால் உண்டாக்கப்பட்டவை. பணம் இல்லாவிட்டாலு கடன் வாங்கியாவது தீபாவளி கொண்டாட வேண்டும் என்பது நியதி. கடவுள் நமக்கு நிறை கொடுக்கத்தானே வேண்டும்? பண்டிகைக்கு செலவு செய்யும்படி வைத்தால் அந்த பணம் திரும் கிடைக்கும்படி செய்ய வேண்டுமல்லவா? ஆனால் நடைமுறையில் அவ்வாறு நடப்பதில்லை. இஃது ஏனெனில் பண்டிகையை கொண்டாடுவது எப்படி என நமக்கு தெரியாமல் போய்விட்டது தாள் 'வாட்டர் வயலட்' என்ற மலர் மருந்து தீபாவளிக்கு ஒரு வாரம் முன்பும் பின்பும் தினம் ஒரு மாத்திை சாப்பிட்டு வர, தீபாவளிக்கு செலவழித்த பணம் ஏதோ ஒருவிதத்தில் 1-3 மடங்காக திரும் வருவது பலரது அனுபவம்.

உன் உடல் நிலை சரியில்லாதபோது டக்டரிடம் செல்வதற்கு முன்பு ஒரு டோஸ் வாட்டர் வயலட் சாப்பிட்டு செல்ல அவர் அனாவசிய டெஸ்ட், ஸ்கேன் எழுதி தர மாட்டார். ஒழுங்காக கவனித்து குறைந்த அளவு மருந்தில் விரைவாக உன்னை குணப்படுத்தி விடுவார். எல்லா நோயாளிகளிடமும் இருநூற்றி ஐம்பது ஃபீஸ் வாங்குபவர் கூட, உன்னிடம் (வாட்டர் வயலட் சாப்பிட்டு செல்வதால்) 'நீ கொடுப்பதை கொடு' என்று சொல்வார்.

எலும்பு முறிவு அல்லது வேறு நோய்க்கு ஆசுபத்திரியில் அட்மிட் ஆகியிருக்கும் நாட்களில், நோயாளி தினம் ஒரு டோஸ் மேற்சொன்ன வாட்டர் வயலட் சாப்பிட்டு வர, ஆசுபத்திரிக்கு செலவழித்த பணம் பூராவும் திரும்ப கிடைக்கும். ஓய்வு பெற்ற அரசு ஊழியர் (திரு ராகவன், 10, பூரம்பிரகாஷ் ராவ் ரோடு, ராயப்பேட்டை) முப்பதாயிரம் செலவழித்து கண் ஆபரேஷன் செய்து கொண்டார். இவருக்கு தினம் ஒரு வேளை வாட்டர் வயலட் கொடுக்க, அடுத்த வாரம் (இவருக்கு வரவேண்டிய ஊதிய உயர்வு பாக்கி) 30,000 வந்து சேர்ந்தது. மற்றும் பல வருடம் முன்பு தன் மூழ்கிய கடன் முப்பதாயிரமும் வந்து சேர்ந்தது.

வயது வந்த பெண்ணிற்கு திருமணம் செய்ய நினைக்கும் பெற்றோர்கள் ஸ்வீட் செஸ்ட்நட் என் மலர் மருந்து சாப்பிட்டு வர 1-2 மாதங்களில் ''வரதட்சணை வேண்டாம், உங்கள் பெண்தா வேண்டும்,'' என நல்ல குணம் அமைந்த, நிறைய சம்பாதிக்கும் பையனின் பெற்றோர்கள் வலிய வந் பெண் கேட்பார்கள். திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன. பெண்ணிற்கு வரன் தே வீடு வீடாக ஏறிச் சென்று 'என் பெண்ணை பார்க்க வாருங்கள்' என நமது மூளையை உபயோகித் செயல்படுவதால், சொர்க்கம் செய்யும் வேலைக்கு தடங்கல் செய்கிறோம். அதனால் சரியில்லா பையனுக்கு திருமணம் செய்து கொடுத்து, பெற்றோரும் அப்பெண்ணும் காலம் பூராவும் கஷ்டத்தி நொந்து போகின்றனர்.

ஒரு பஸ்ஸை ஒரே நேரத்தில் இரண்டு டிரைவர்கள் (ஸ்டீரிங்கை பிடித்து) ஓட்டினால் விபரீதுதா நிகழும். பெற்றோர்கள், ஸ்வீட் செஸ்ட்நட் சாப்பிட்டு வர, மாப்பிள்ளை தேடும் விஷயத்தில் மட்டு அம்மருந்து நமது மூளையை நிறுத்தி வைத்து விடுவதால் சொர்க்கம் தன் வேலையை சுலபமாக செய் விடுகிறது. (The Bach remedy *Sweet Chestnut* switches off our mind so that heaven ca have a free play in selecting the right boy and sending him to the girl's house).

திருமணம் நிச்சயமானவுடன் இம்மருந்தை பெண்ணின் பெற்றோர்கள் தொடர்ந்து சாப்பிட்டு வர, ருமண செலவுக்கான பணம் நிறைய வந்து கொண்டே இருக்கும் (ஆனால் நீங்கள் நினைக்கும் ]தத்தில் அல்ல). இது எப்படி?

சொர்க்கத்தில் உள்ள கடவுள் திருமணங்களை நிச்சயிக்கின்றான் எனில், அந்த கடவுள் திருமண சலவுக்கு நிறைய பணம் அனுப்பித்தானே ஆக வேண்டும்?

ஆனால் நிஜ வாழ்க்கையில் அவ்வாறு எவருக்கும் நடைபெறவில்லையே என அங்கலாய்க்கும் ர்களைப் பார்த்து 'ஸ்வீட் செஸ்ட்நட் என்ற மலர் மருந்து சாப்பிட்டு பாருங்கள்' என இயற்கை ]றைகூவல் விடுக்கிறது.

ஸ்வீட் செஸ்ட்நட் சாப்பிடுவதால் என்ன நடக்கிறது? திருமண வைபவத்திற்கு நாம் ட்டமிடும்' மனதின் செயலை மாத்திரம் இம்மருந்து நிறுத்தி வைத்து விடுவதால் (switch off) டவுள் நம் மூலமாக வேலை செய்வது தங்கு தடங்கலின்றி நடைபெற்று விடுகிறது.

கடவுள் நிறைய கொடுத்துக் கொண்டிருக்கிறான். அவனைப் பார்க்காமல் நாம் சித்திரகுப்தன் வலையை (கணக்கு எழுதி பார்த்து) செய்து கொண்டிருக்கிறோம்.

எமது 3-நாள் நேர்முக பாட்ச் மலர் மருத்துவம் வகுப்பில் (கட்டணம் ரூ.6500) பயின்ற டாக்டர் மலா முகுந்தன் (இராமசந்திரா ரோடு, குரோம்பேட்டை) சொல்கிறார்: "30-8-2001 அன்று எனது ரே பெண்ணிற்கு திருமணம் நிச்சயிக்கப் பட்டிருந்தது. இதற்கு ஆறு வாரம் முன்பிருந்தே தினம் ரு வேளை நான் ஸ்வீட் செஸ்ட்நட் சாப்பிட்டு வந்தேன். இரண்டு வாரம் கழித்து எனது நெருங்கிய றவினர் இரண்டு இலட்சம் ரூபாய் கல்யாண செலவிற்கு கொடுத்தார். இதேபோல் அடுத்த வாரம் வறு ஒருவரிடமிருந்து இரண்டு இலட்சம் வந்தது. இதை நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

**ஸ்வீட் செஸ்ட்நட் அதியற்புதங்களை நிகழ்த்தக் கூடியது.**

1. உயிருக்கு ஆபத்தான நிலையில் தீவிர சிகிச்சை பிரிவில் (I.C. unit) 'இப்போது ஏதும் சொல்ல டியாது' என்று டாக்டர்கள் கைவிட்ட கேசுகளில் (மூளையில் இரத்தப்பெருக்கு, மூன்றாவது ஹார்ட் ட்டாக் போன்றவை) நோயாளியின் நெருங்கிய உறவினர்கள் ரெட் செஸ்ட்நட், ராக் ரோஸ், ஸ்வீட் சஸ்ட்நட், கார்ஸ் ஆகிய நான்கு மருந்துகளையும் சேர்த்து (2 - 4 மணிக்கோர் தடவை) சாப்பிட்டு ர, நோயாளி விரைவில் குணமாகி விடுவார்:

எமது 3 - நாள் நேர்முக வகுப்பில் பாட்ச் மலர் மருத்துவம் கற்ற பலரது அனுபவம் இது. டாக்டர் ]ரபா ராமதுரை, (போன்: 24338505) சொல்கிறார்: என்னிடம் வந்த ஒரு முஸ்லிம் பெண்மணி, வரது கணவனுக்கு மூன்றாவது ஹார்ட் அட்டாக் வந்து தீவிர சிகிச்சை பிரிவில் இருப்பதாகவும், வரைக் காப்பாற்ற நான் ஏதாவது செய்ய முடியுமா என கேட்டாள். அவருக்கு மருந்து தர இயலாது னவும் ஆனால் (தன் கணவனைப் பற்றி அக்கரைப்படும்) அவளுக்கு ஸ்வீட்செஸ்ட்நட், ]ரட்செஸ்ட்நட், ராக் ரோஸ், கார்ஸ் கொடுத்து, இவற்றை அவள் தினம் 3 வேளை சாப்பிடுவதால் வள் கணவன் பிழைத்து விடுவான் என சொல்லி அனுப்பினேன். இவள் இவ்வாறு சாப்பிட, மறு ]னமே, டாக்டர்களே ஆச்சர்யப்படும் விதத்தில் அவள் கணவன் உடல் தேறி வார்டுக்கு ாற்றப்பட்டு அதற்கு மறு தினம் வீட்டிற்கே வந்து விட்டார்.

2. உங்கள் உறவினர் பயணம் செய்து கொண்டிருக்கும் விமானம் கடத்தப்பட்டு விட்டதா? வர்கள் சீக்கிரம் விடுதலையாகி பத்திரமாக வீடு திரும்ப நீங்கள் சாப்பிடவேண்டிய மலர் மருந்துகள் ]ரட் செஸ்ட்நட், ராக் ரோஸ், ராக் வாட்டர், ஸ்வீட் செஸ்ட்நட், கார்ஸ்.

இம் முறையில் மொத்தம் 38 மருந்துகள் உள்ளன. எல்லாம் ஒரே விலை தான். ஒவ்வொன்றும் 150 ாத்திரைகளடங்கிய 5ml புட்டி விலை ரூ.75=00 மட்டுமே. எவ்வயதினராயினும் ஒரு மாத்திரை வைத்து சாப்பிடவும். பத்தியம், பக்க விளைவு இல்லை. மருந்து சாப்பிட மறுக்கும் நபர்களுக்கு ாத்திரைகளை தண்ணீர், காபி, டீயில் கலந்து கொடுக்கலாம்.




# "கப்பலண்டி வாங்கலாமா?"

**நா**ன் பம்பாயிலேயே பிறந்து வளர்ந்தவள். என் கணவர் திருவனந்தபுரத்தில் பிறந்து வளர்ந்தவர். பாதி வார்த்தைகள் மலையாளம் கலந்தவையாகத்தான் இருக்கும். எப்படியோ சமாளித்து வந்தேன். கல்யாணம் ஆனவுடன் முதல் தடவையாக என் கணவர் வேலை பார்த்த சென்னை சென்றோம். எனக்கு சென்னை புதிது என்பதால் முதல் ஞாயிறன்று மெரீனா பீச் போய்விட்டு ஷாப்பிங் போகலாம் என்று ப்ளான் பண்ணி இருந்தோம்.

'மெரீனா பீச்' என் மனதைக் கொள்ளை கொண்டு விட்டது. கிட்டத்தில் மணல், தூரத்தில் கப்பல் என்று அழகு விரிந்தது. என் கணவர் திடுமென்று, ''கப்பலண்டி வாங்கலாமா?'' என்றார். கப்பலண்டி என்றால் நான் கப்பலுக்கே சென்று வாங்க வேண்டிய பொருள் என்று நினைத்து விட்டேன். ஆச்சரியம் ஒரு பக்கம் என்றாலும் இந்த இரவு நேரத்தில் கப்பலில் போய் எப்படி கப்பலண்டி வாங்கப் போகிறோம் என்ற கவலை ஒரு பக்கம். ஆனாலும் புது திருமண மயக்கத்தில் இருந்ததால் நமக்காக கணவர் என்னவெல்லாம் பண்ணுகிறார் என்ற பெருமை வேறு. அதனால் குந்தவை ராணி (பொன்னியின் செல்வனின் பாதிப்பு, மாதிரி கம்பீரமாக முகத்தை வைத்துக் கொண்டு, ''ஓ.. வாங்கலாமே' என்று கூறிவிட்டு, ''ஆனால் இப்பொழுதே இவ்வளவு நேரமாகி விட்டது. இன்னும் நேரமானால் வேறெதுவும் வாங்க முடியாதே' என்று பிகு செய்து கொண்டேன்.



அதற்கு என் கணவர், ''ஹேய்! கப்பலண்டிக்கு எவ்வளவு நேரமாகப் போறது?'' என்று கூறிவிட்டு பக்கத்தில் கடலை விற்றுக்கொண்டிருந்த பையனிடம் ''ரெண்டு பாக்கெட் கொடுப்பா' என்றாரே பார்க்கலாம்... என் கப்பல் கனவெல்லாம் இடிந்து விழுந்தது. இது எதுவும் அறியாத என் கணவர் கடலை பொட்டலத்தைக் கையில் வைத்துக்கொண்டு நான் ஏன் இந்த முழி முழிக்கிறேன் என்று தெரியாமல் குழம்பிப் போனார். அவருக்கு என்ன தெரியும்? அந்த நிமிடம் நான், 'வேர்க்கடலை'க்கு 'கப்பலண்டி' என்று பெயர் வைத்தவனை சபித்துக் கொண்டிருக்கிறேன் என்று!

- கவி கிருஷ்ணமூர்த்தி, சிண்டி




நாங்கள் பள்ளி ஆசிரியர்கள் பதின்மூன்று பேர் சேர்ந்து கொல்கத்தா டூர் சென்றோம். அங்கு மார்க்கெட்டில் ஐந்நூறு ரூபாய் சுடிதார் ஐம்பது ரூபாய்க்கு என்று பிளாஸ்டிக் 'ஸீ-த்ரு' கவரில் போட்டு கூவிக் கூவி விற்றார்கள். இராத்திரி நேரத்தில் மின்விளக்கு வெளிச்சத்தில் சுடிதார்கள் பார்ப்பதற்கு பளபளப்பாய், பிரமாதமாய் இருந்தன. அதை வாங்குவதற்கு ''நீ முந்தி, நான் முந்தி'' என ஒரே தள்ளுமுள்ளுதான். ஒவ்வொருவரும் எட்டு பாக்கெட், பத்து பாக்கெட் என அள்ளிக் கொண்டோம். நாங்கள் தங்கியிருந்த ஹோட்டல் ரூமுக்குக் கொண்டுவர போக்குவரத்துச் செலவு 200 ரூ ஆனது பெரிய விஷயமாகப்படவில்லை.

அறைக்கு வந்து துணிகளைப் பிரித்துப் பார்த்தால் செம ஷாக். கண்ணாடிக் கவரில் வெளியில் தெரியும் பகுதி மட்டுமே உருப்படியாயிருந்தது. மற்ற பகுதிகள் எல்லாம் வெளுத்தும், சாயம் போயும், கிழிந்தும் போட்டுக் கொள்ளவே முடியாதபடியும் இருந்தன. நொந்து போய் அத்தனை துணிகளையும் திரும்பவும் கவரில் போட்டு மூட்டைக் கட்டி ஹோட்டல் ரூமிலேயே ஒரு பக்கமாக வைத்துவிட்டு ஊருக்குத் திரும்ப இரயில்வே ஸ்டேஷன் வந்து சேர்ந்தோம்.

அப்பொழுது வேகவேகமாக ஹோட்டல் சிப்பந்தி ஒருவர் எங்களைத் தேடிக் கொண்டு வந்து, ''என்ன மேடம்! நீங்கள்

# பாதிவிலையா?

ஓடு.. ஓடு...!



# தாத்தா-பாட்டி!

காவி படிந்த பற்களோ
சுருங்கித் தொங்கும்
முகத் தசைகளோ
பல்லெல்லாம் விழுந்து
உள்வாங்கிய
கன்னங்களோ
அருவருப்பாய்த்
தோன்றவில்லை
அவர்கள்
மார்பிலும் முதுகிலும்
விழுந்து புரளும்
பேரன் பேத்திகளுக்கு!

## அனார்கலி

ஷாப்பிங் செய்த பார்சலை ரூமிலேயே விட்டுட்டீங்களே!'' என்று கூறியபடியே ''போக்குவரத்துக்கும், கூலிக்கும் சேர்த்து அறுநூறு ரூபாய் ஆகிவிட்டது. அதை மட்டும் கொடுங்க'' என்றாரே பார்க்கலாம். எங்கள் முகத்தில் ஈயாட வில்லை.

அசடுவழிந்தவாறே அவர் கேட்ட தொகையை கொடுத்தனுப்பினோம்.

இரயிலில் இவ்வளவு பெரிய பார்சலை எடுத்துச் செல்ல லக்கேஜ் சார்ஜ் வேறு கேட்பார்களே. அதையாவது மிச்சப்படுத்த லாமே என எண்ணி நாங்கள் 6, 7 பேர் சேர்ந்து துணி மூட்டையைத் தூக்க மாட்டாமல் தூக்கிக் கொண்டு போய் நடை மேடையில் குவிந்திருந்த பார்சலோடு பார்சலாய் எங்களுடையதை வைத்து விட்டுத் திரும்பினால் இரயில்வே போலீஸ் நின்றார் சந்தேகக் கண்ணோடு!

''என்ன மேடம் பார்த்தா படிச்சவங்க மாதிரி இருக்கீங்க. நடைமுறை தெரியாதா? பார்சலை வெயிட் போடாமல், சீல் போடாமல் இங்கே கொண்டு வந்து வச்சா என்ன அர்த்தம்?'' பெங்காலியில் கோபப்பட்டார்.

நாங்கள் அழாத குறையாக நடந்ததைச் சொல்லி, பார்சலைப் பிரித்துக் காண்பித்தோம். இதற்கு நடுவில் எங்களைச் சுற்றி கூட்டம் வேறு. பலவிதமான விமர்சனங்கள். ''ஸாரி மேடம். வேறு வழியில்லை, இந்த பார்சலை உங்கள் ஊருக்கு எடுத்துச் செல்லத்தான் வேண்டும். இங்கு விட்டுப் போக முடியாது'' என்றார்.

வேறுவழியின்றி பார்சலை எடை போட்டு, லக்கேஜ் சார்ஜ் கொடுத்து கொல்கத்தாவிலிருந்து சென்னைக்குக் கொண்டு வந்தோம்.

இந்த அனுபவத்திலிருந்து தன்னுபடி, பாதி விலை என்றாலே தலைதெறிக்க ஓடுகிறோம்!

- இரா. உஷா, வேளச்சேரி.

☎ 'இன்கான்டினன்ஸ்' என்றால் என்னவென்று தெரியாத இன்னொசன்ட் ஆக இருந்த எங்களை, அதைப் பற்றிய இன்டெலிஜன்ஸை வளர்த்துக் கொள்ளுமாறு வந்த 'மருத்துவம்' பகுதி சூப்பர். அமெரிக்கப் பெண்களே அவஸ்தையாக இருக்கும்போது, நம் தமிழ்ப் பெண்களுக்கு தக்க நேரத்தில் விழிப்புணர்வு ஊட்டிய மங்கையர் மலருக்கு மனமார்ந்த நன்றி.
**திண்டுக்கல், எம்.ஜி. பரத்.**

☎ ஜூன் மாதம் வெளிவந்த 'தாங்க்யூ ஃப்ரிட்ஜ்' கட்டுரையில் பிரிட்ஜுக்குள் வாழைப்பழம், உருளைக்கிழங்கு போன்றவற்றை வைக்கக்கூடாது என்று கூறிவிட்டு, ஃப்ரிட்ஜுக்குள் வாழைப்பழம், உருளைக்கிழங்கு இருக்கும் படத்தைப் போட்டுள்ளீர்களே?
**திருக்கோவிலூர், என். கல்பனா ராமன்.**

☎ 'ஆவி' பற்றிய கேள்விக்கு அனுஷா அளித்த பதிலில் அவரது நகைச்சுவை உணர்வு இயல்பாக வெளிப்பட்டிருந்தது. சிரித்து மகிழ்ந்தோம்.
**கிருஷ்ணகிரி,**
**சி. விஜயாம்பாள் பச்சமுத்து.**

☎ பட்டுக்கோட்டை பிரபாகரின் 'பூ பூக்கும் ஓசை' ஆரம்பமே களைகட்டி விட்டது. சரளமான எழுத்தும், நடுத்தரக் குடும்பப் பின்னணியும் எதிர்பார்ப்பை ஏற்படுத்தி விட்டது.
**ராசிபுரம், நாகை சந்திரா.**

☎ அனுஷா எழுதிய 'பிளவுஸ் பிட்டின் பயணம்' அழகாக வர்ணிக்கப்பட்டு, அது மங்கையர் மலரில் பிரசுரிக்கப்பட்டு அதை வாசகியாகிய நான் பார்த்துவிட்டு, பதிலுக்கு ஒரு புன்னகை உதிர்த்துவிட்டு, மனம் சந்தோஷப்பட்டு, வெளிப்பட்டது என்னுடைய பாராட்டு!
**அரும்பாக்கம், எஸ். சரஸ்வதி.**

☎ திருப்பூர் கிருஷ்ணன் எழுதிய 'ஸ்ரீ அன்னை' பக்திக்கடலில் மூழ்கச் செய்தது. ஒவ்வொரு மாதமும் அன்னையின் அமைதியான முகத்தை பார்த்துக் கொண்டே இருக்கலாம் போல இருந்தது. கூடவே மலர் வழிபாட்டு செய்தியும் பெட்டிச் செய்தியும் போட்டு அசத்தி விட்டீர்கள்.
**அரும்பாக்கம்,**
**ஜி.ஆர். லலிதா.**

• திருப்பூர் கிருஷ்ணன்

☎ ஸ்ரீ அன்னை நெஞ்சில் நிறைந்த தொடர். அன்னையைப் பற்றி மங்கையர் மலர் மூலம்தான் முழுமையாக அறிந்து கொண்டோம்.
**செகந்திராபாத் - 9,**
**வெ. சியாமளா ரமணி.**

☎ ஒரு வருடமாக அருள்மழை பொழிந்த 'ஸ்ரீ அன்னை' தொடர் முடிந்துவிட்டதே என மிகவும் வருத்தமேற்பட்டது. ஆனால்

☎ 'பூகம்பம் ஏன்?' என்ற விழிப்புணர்வுக் கட்டுரை அருமை. இதுபோன்ற அறிவியல்




# கண்ணுக்குப் மனசுக்கும்

## சொல்ல விரும்புகிறோம்

கட்டுரைகளை மேலும் ஒரு பக்கத்திற்கு நீட்டித்தால் விரிவாக இருப்பதோடு, விளக்கமாக அமையுமே! செய்வீர்களா?
**சோமரசம்பேட்டை,**
**பறம்பை எஸ். கமலாவதி பிரகாஷ்.**

☎ மகளிர் சாதனையில் 'லிங்கம்மா சபதம்' நிஜமாகவே மங்கம்மா சபதம்தான். நிறைய லிங்கம்மாக்கள் இருந்தால் பல கிராமங்கள் நகரங்களை மிஞ்சும்!
**சென்னை - 17, ஆர். லாவண்யா.**

☎ ஜூன் 2008 இதழுடன் தரப்பட்ட இணைப்பு 'ஸ்கூல் 64!'சுவாரசியமான டைம்லி அட்டைவலாக இருந்தது.
**சிட்லபாக்கம், விஎல்என். ராமமூர்த்தி.**

☎ இப்பொழுதெல்லாம் தினசரிகளை ஒரு வரி கூட விடாமல் படிக்கிறேன். பொது அறிவை வளர்த்துக் கொள்ள பெருதவியாய் இருக்கிறது 'அறிவுப் போட்டி!'
**அவிநாசி, துரை. சுப்பிரமணியன்.**

☎ கண்ணுக்கும், மனதிற்கும் நிறைவைத் தருகிறது 'பஞ்சாமிர்தம்', காணக் கிடைக்காத படக்காட்சி.
**கோவை - 38, சுந்தரி சுப்பிரமணியன்.**

☎ 'ஒல்ட் இஸ் கோல்ட்' என்பதற்கு உதாரணமாக விளங்கிய கறுப்புத் தவலையும் அதன் மீது அசைக்க முடியாத பாசப் பிணைப்பு வைத்திருந்த பாட்டியும் 'கறுப்புத் தவலை' கதையின் கதாநாயகன், கதாநாயகி போல் விளங்கி நம் மனத்தில் நீங்கா இடம்பிடித்து விட்டனர்.
**அண்ணாநகர் கிழக்கு,**
**கிரிஜா நரசிம்மன்.**



## மணம் பரப்பிய மலர்கள்!

அதனை ஈடுசெய்ய ஸ்ரீபுட்டபர்த்தி சாயி வருகிறார் என்று தெரிந்ததும், மகிழ்ச்சி ஏற்பட்டது.
**மைலாப்பூர், சந்திரா ஜானகிராமன்.**

☎ பல வண்ணப் பூக்களை பன்னிரண்டு இதழ்களிலும் தூவி, மணம் பரப்பச் செய்து ஸ்ரீ அன்னையின் பக்தர்களைப் பரவசப்படுத்தி விட்டார் திருப்பூர் கிருஷ்ணன்.
**வியாசர் நகர்,**
**கு. சுகந்தி நாராயண்.**

☎ சர்வஜித் சாதனைப் பெண்ணுக்கு நான் எழுதிய கட்டுரை வெளிவராவிட்டாலும், சாதனைப் பெண்களைத் தேர்ந்தெடுத்ததற்கு குலுக்கலில் பரிசு விழாவிட்டாலும், நான் தேர்ந்தெடுத்த திருமதி சூடாமணி பரமேஸ்வரனையே நீங்களும் தேர்ந்தெடுத்துப் பரிசு கொடுத்ததற்கு மிகவும் மகிழ்கிறேன். 'அன்பே தெய்வம்' என்று வாழும் அவர்களுக்கு என் இதயபூர்வ வாழ்த்துக்கள்.
**சிவகங்கை, பார்வதி கல்யாணராமன்.**

☎ தலையங்கம் மிக மிக அருமை. 'தூண்டில் - வலை - கொக்கி - இரை' என்ற வார்த்தைகளை பயன்படுத்தியுள்ளது நன்றாக இருந்தது.
**ஆதம்பாக்கம், நிஷாஜி.**

# 'அடியிறக்கம்' என்ற



அடியிறக்கம் என்பதை ஆங்கிலத்தில் 'ப்ரோலாப்ஸ்' என்பார்கள். பெண்களில் பலருக்கு இது ஒரு பிரச்னையாக இருந்து வருகிறது. அமெரிக்காவில் ஓர் ஆய்வுப்படி, மகளிரில் 11 சதவிகிதம் பேர் இதனால் பாதிக்கப்படுகிறார்கள் என்று தெரியவந்திருக்கிறது. அறுவைச் சிகிச்சை செய்து கொண்டாலும் 30 சதவிகிதம் பேருக்கு மறுபடி அந்தப் பிரச்னை வந்து விடுகிறதாம். 50 வயதுக்கு மேலும் வாழ்கிறபோது இம்மாதிரி பிரச்னை வரும் சாத்தியக்கூறு இருக்கிறதாகச் சொல்லுகிறார்கள். ஏனென்றால் 90 வயது வரை வாழ்வது என்பது பல நாடுகளில் சாதாரணமாகி விட்டது.

அடியிறக்கத்தின்போது, கருப்பை (யூட்ரஸ்) கீழே வந்து விடுகிறது. ஹிஸ்டரக்டமி காரணமாக பிறப்புறுப்பு கீழே ,வரலாம். சிறுநீர்ப்பை எனப்படும் பிளாடர் கீழே இறங்கலாம். மலக்குடல் கீழே இறங்கிவிடலாம்.

இவை காரணமாக, சிறுநீர்க்கசிவு போன்ற உயிருக்கு ஆபத்தில்லாத நிலைமை உருவானாலும், பிரச்னையோடு வாழ்ந்தாக வேண்டியிருக்கிறதல்லவா?

இதற்கும் பெல்விக் ஃப்ளோர் பாதிக்கப்படுவதுதான் காரணமாக இருக்கிறது.

பெரிய அளவில் பாதிக்கப்படுவது அடியிறக்கம்தான்.

இதை Ship In dock என்பார்கள். துறைமுகத் தளத்தில், கப்பல் நிற்பதை இதற்கு ஒப்பிடுவார்கள். கீழே ஓரளவு தண்ணீர் ஆதரவு. மேலே anchor ஆதரவு. அதாவது, கீழே பெல்விக் ஃப்ளோர் ஆதரவுடன், மேலே லிகமெண்ட் ஆதரவு இருந்தால் எந்தப் பிரச்னையும் இல்லை.

அடியிறக்கம் என்றால் என்ன அறிகுறிகள் தெரியும் என்பது அடுத்ததாக எழும் கேள்வி.

1. எப்போதும் ஓர் அசௌகரியமான நிலை.

2. கால்களுக்கு இடையே ஏதோ துருத்திக் கொண்டு வருவது.

3. அப்படி வெளியே வந்தால், வீங்க ஆரம்பித்து, துர்நாற்றம் பரப்பும். அத்தோடு புண் ஆகி (அல்சர்) தொல்லை தரும் அபாயம். இன்ஃபெக்ஷன் பிரச்னை!

4. குறிப்பாக, தொடைகளில் நோய்த் தொற்று. அதுதான் இன்ஃபெக்ஷன் வர அதிக வாய்ப்பு.

# பிரச்னை!

மருத்துவம்

5. எல்லோரையும் போல் கீழே அமர்ந்து சிறுநீர் கழிக்க முடியாத நிலை; காரணம் சிறுநீர்ப்பை கீழே இறங்கி விடுகிறது. எழுந்து நின்று, அடியிறக்கம் அளவு குறைகிறபோது மட்டுமே சிறுநீர் கழிக்க முடியும் என்ற நிலைமை.

6. சிறுநீர்ப்பை முழுதும் காலி ஆகாமல், அடிக்கடி சிறுநீர் போக வேண்டியிருக்கும்.

7. அதிலும் மலக்குடல் இறங்கி விடும் போது, மலங்கழிப்பது நம் கட்டுப்பாட்டில் இல்லாது போய்விடும்!

8. ரெக்டோ-ஸீல் நிலைமை உண்டாகி, பிறப்புறுப்புக்கும் மலப்பாதைக்கும் இடையே உள்ள திசு வலுவிழந்து போகும்.

9. தாம்பத்திய உறவு கொள்வதில் சிரமம்.

## டாக்டர் கார்த்திக் குணசேகரன் பதில்கள்

10. தசை வலுவிழந்து, அடியிறக்கம் காரணமாக பிறப்புறுப்பு விரிவடைந்து பெரிதாகி விடுகிறது. இது மறுபடி தாம்பத்திய உறவில் பிரச்னை எழக் காரணமாகிறது.

அடியிறக்கம் அதிகச் சுமை தூக்கும் பெண் தொழிலாளர்கள், கட்டட வேலையில் இருக்கும் பெண்மணிகள் போன்ற சமுதாயத்தில் கீழ்மட்டத்தில் இருக்கும் மகளிரை அதிகமாகப் பாதிக்கிறது.

ப்ரொலாப்ஸ் எனப்படும் அடியிறக்கம், ஆண்களுக்கு ஹெர்னியா வருவது போன்றது. அதிக பாரம் சுமக்கிறபோது இந்தப் பிரச்னை எழுகிறது.

**காரணங்களையும் அறிகுறிகளையும் அறிந்து கொண்டோம். இனி சிகிச்சை என்ன என்பதைப் பார்ப்போம் :**

அ. ஆரம்ப நிலை அடிஇறக்கம் என்றால், உடற்பயிற்சி மூலமே குணப்படுத்தலாம்.

ஆ. வயது மிகுந்த பெண்மணிகள் (மயக்க மருந்து கொடுக்க இயலாத காரணத்தால்) அறுவைச் சிகிச்சை மேற்கொள்ள முடியாது. அவர்களுக்கு சிலிகான் வளையம் பொருத்தலாம்.

இ. நிரந்தர நிவாரணம் அறுவைச் சிகிச்சைதான்.

அறுவைச் சிகிச்சை என்றாலும், அன்றே சிகிச்சை முடிந்து வீடு திரும்பி விடலாம். வலை (மெஷ்) வைப்பது, பழைய சிகிச்சை முறைகளைவிட, மிக நவீனமானது. பாதுகாப்பானது. இதுபற்றி மேற்கொள்ளப் பட்ட ஆய்வுகள் நிறைய. அவை மகளிருக்குச் சாதகமாகவே இருக்கின்றன.



இனி, ஒரே ஒரு கேள்விக்கு பதில் :

**கே. லட்சுமி, விருகம்பாக்கம், சென்னை.**

***'ஸ்லிங்' சர்ஜரிக்கு ரூ. 25000 ஆகிறது என்பதால், பலரால் அதைச் செய்து கொள்ள முடிவதில்லை. இதற்கு மாற்று ஏதாவது இருக்கிறதா, டாக்டர்?***

அறுவைச் சிகிச்சை முறை அல்லது 'ஸ்லிங்' போட்டு விடுவது இந்த இரண்டு வழிமுறைகளே சிறுநீர்க் கசிவு (இன்கான்டினன்ஸ்)க்கு நிவாரணங்கள்.

அறுவைச் சிகிச்சை என்றால் கிட்டத்தட்ட ஒரு வாரம் மருத்துவமனையில் இருக்க வேண்டும். வலியைத் தாங்கிக் கொள்ள வேண்டும். வேலையிலிருந்து ஒரு வாரம் ஓய்வில் இருக்க வேண்டும் -

(டாக்டர் கார்த்திக் குணசேகரனைத் தொடர்பு கொள்ள விரும்புபவர்கள், (044) 3290 4166 என்ற எண்ணில் 'கெளரி' ஹெல்ப்லைனுடன் தொடர்பு கொண்டு இலவச ஆலோசனை பெறலாம். அல்லது தி.நகர் எண் (044) 2434 1055 என்ற தொலைபேசியில் தொடர்பு கொள்ளலாம். வெப்ஸைட் : www.urogynecology.in)

ஆபரேஷன் சமயத்தில். அதற்குப் பிறகு எழும் பிரச்னைகளைச் சந்தித்தாக வேண்டும்!

ஆனால் 'ஸ்லிங்' சர்ஜரியில் சில அனுகூலங்கள் இருக்கின்றன. 1. ஒரே ஒரு நாள் போதும் மருத்துவமனையில். 2. வலி இல்லை, இரத்த சேதமும் இல்லை. 3. அறுவை வடுக்கள் ஏதும் கிடையாது. 4. வெற்றி வாய்ப்பு எண்ணிக்கை மிக அதிகம்.

'ஸ்லிங்' நீண்ட ஆராய்ச்சியின் பயனாக, கிடைத்திருக்கிறது. இறக்குமதி செய்யப் பட்டது என்பதால்தான் அதிக விலை. பன்னிரண்டு வருடங்களாக, வெற்றிகர மாகப் பயன்படுத்தப்பட்டு வருவதால், நம்பகமானது. 98% வெற்றிகரமாக இருந் திருக்கிறது. 500 மில்லியன் பேருக்கு மேல் பயன்படுத்தி வந்திருக்கிறார்கள், உலக முழுதும். எந்தப் பக்கவிளைவுகளும் எழுந்ததில்லை. ஏதாவது பிரச்னை தோன்றி னாலும் எளிதாகக் கையாள முடியும்.

செலவு குறைய வேண்டுமென்றால், உள்ளூர் தயாரிப்புகளான 'ஸ்லிங்'குகளும் பாதிக்கும் குறைவான விலையில் (அதா வது 25000த்தில்) கிடைக்கின்றன. ஆனால் சமீபத்தில் அறிமுகமானவை. இதன் செயல்திறன் பற்றி எந்த ஆய்வு அறிக்கை களும் இதுவரை நம் கைக்குக் கிடைக்க வில்லை. எந்தக் குறிப்புகளோ, கட்டுரை களோ இதுகுறித்து வெளியிடப்பட வில்லை. வெற்றி சதவிகிதம் என்ன? பிரச்னைகள் ஏதும் எழுந்துள்ளதா? என்னவித பிரச்னை? அப்படி பிரச்னை எழுந்தால் எப்படி சமாளிக்க வேண்டும்? - இவை போன்ற விவரங்கள் ஏதும் இல்லாத நிலையில் இந்தத் தயாரிப்பு களைப் பயன்படுத்த மருத்துவர்களும் சரி, நோயாளிகளும் சரி, முன்வருவதில்லை.

இதய வால்வுகள், முழங்கால் மூட்டு இவை அயல்நாட்டுத் தயாரிப்பு போல உள்நாட்டுத் தயாரிப்புகளும் இருக்கின்றன. இவை மாற்றும்போது, நோயாளியின் விருப்பத்துக்கு விட்டுவிடுவது போல், 'ஸ்லிங்' விஷயத்திலும் நோயாளிகளின் விருப்பத்துக்கு விட்டு விடலாம். என்றா லும் எல்லோரும் இறக்குமதி செய்யப் பட்ட, பலரும் பல வருடங்களாகப் பயன் படுத்தி வரும் 'ஸ்லிங்'கையே பொருத்திக் கொள்ள விரும்புவதால்தான், அதன் விலை அதிகமாக இருந்தாலும், பிரச்னை பின்னால் ஏதும் எழாது என்ற நம்பிக்கை யோடு பெண்கள் இதைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கிறது.

சந்திப்பு : சாருகேசி



**ஆஹா 50!**

சர்க்கரை நோயாளிகள் வெளியே செல்லும் போது சாதா செருப்புகள் அணி வதைத் தவிர்த்து, கட் ஷூ போன்ற காலணிகளை அணிவது நல்லது. விரல்களில் ஏற்படும் காயங்களிலிருந்து தப்பிக்கலாம்.

*- தஸ்மிலா அஸ்கர், கீழக்கரை.*



உ

சிவமயம்

திருவாரூர் மாவட்டம் குடவாசல் வட்டம்

ஸற்குணேஸ்வரபுரம் என்கிற

# கருவேலி

## ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரி ஸமேத

# ஸ்ரீ ஸற்குணேஸ்வர ஸ்வாமி திருக்கோயில்

# ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்

தஞ்சைத் தரணியின் குடவாசல் வட்டத்தில், காவிரியின் தென்கரையில் உள்ளதுதான் அப்பர் ஸ்வாமிகளால் பாடப் பெற்ற, கருவேலி என்னும் கருவிலி திருத்தலம். சற்குண ராஜனால் திருப்பணி செய்யப் பெற்றதால், சற்குணேஸ்வரபுரம் என்றும் பெயர் பெற்ற கோயிலில், அருள்மிகு ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமி, ஸ்ரீ ஸர்வாங்க சுந்தரி அம்பாளுடன் சேர்ந்து அருள்பாலிக்கிறார். சிதிலமுற்றிருந்த இவ்வாலயத்தில்,1997ம் ஆண்டு கருவேலி குழந்தை ஐயர் சந்ததியினரால், கிராமவாசிகள், மற்றும் நண்பர்களின் ஒத்துழைப்புடன் திருப்பணிகள் செய்யப் பெற்று, 27.3.1997ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இப்பொழுது ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி சன்னிதிகள், ஸ்வாமி, அம்பாளுக்கு ராஜகோபுரங்கள் புதிதாகக் கட்டப்பட்டும், பிராகாரம், நந்தவனம், திருக்குளம் ஆகியவை புதுப்பிக்கப் பட்டும், ***நிகழும் ஸர்வதாரி வருஷம் ஆனி மாதம் 30ந் தேதி (14.7.2008) மகா கும்பாபிஷேகம் நடைபெறுகிறது.*** 9.7.08 புதன் காலை 9 மணி அளவில் விக்னேஸ்வர பூஜையுடன் தொடங்கி, வியாழன் வாஸ்து சாந்தி. 11.7.08 வெள்ளிக்கிழமை முதல் யாகசாலை பூஜைகள் 6 காலம் தொடர்ந்து நடக்கின்றன. நிகழ்ச்சிக்கு முத்தாய்ப்பாக **14.7.2008 திங்கட்கிழமை காலை 9.30 மணி அளவில் மகா கும்பாபிஷேகம் நடைபெறுகிறது.** அன்று மாலை, திருக்கல்யாணமும், ஸ்வாமி வீதி உலாவும் நடைபெறும்.

15.7.08 செவ்வாய் அன்று மண்டலாபிஷேகம் தொடங்குகிறது. *

அன்பர்கள் அனைவரும் மகா கும்பாபிஷேகத்தில் கலந்து கொண்டு இறைவனை தரிசித்து, இகபர பேறு அடைய பிரார்த்திக்கிறோம்.

இங்ஙனம்

அவ்வண்ணமே கோரும்

Dr.V. கிருஷ்ணமூர்த்தி,
பரம்பரை தர்மகர்த்தா

திரு.பொன் சிவசங்கரன், M.A
நிர்வாக அதிகாரி, கூடுதல் பொறுப்பு

தெய்வத் திருப்பணியில்,
கிராமவாசிகள் மற்றும்
ஸ்ரீ ஸற்குணேஸ்வரர்
கைங்கர்ய சபா (Regd)

* மண்டலாபிஷேகம் செய்ய விரும்புபவர்கள் ஆலய அலுவலகத்தைத் தொடர்பு கொண்டு முன் பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம்.

ஸ்ரீ ஸற்குணேஸ்வரர் திருக்கோயில், கருவேலி - 609 501. போன் : 04366 273900.

*சென்னை அலுவலகம் :*

**Sri Sarguneswara Swami Temple Management Committee,**
3A, Warren Road, Mylapore, Chennai - 600 004. Phone : 044-2499 4535

**கருவேலி:** கும்பகோணம் - பூந்தோட்டம் சாலையில் கூந்தலூருக்கு வடக்கே ஒரு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. கருவேலிக்குப் பேருந்து வசதி உண்டு.

இன்னும் சில தினங்களில்...




செய்து மகிழ...

# சூப்பர் சவால்... சுறுசுறு விளையாட்டு...



கவர் ஸ்டோரி

# எங்கள் செல்ல டோரா!

# கோகுலம்

ஜூலை 2008 விலை ரூ.8/- குழந்தைகளின் குதூகல

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

வழங்கும்

## அறிவுப் போட்டி-6

# ரூ. 5,000 பரிசு

சமீபத்தில் நடைபெற்ற செய்திகளை எந்த அளவுக்கு அறிந்து வைத்திருக் நீர்கள்? ஒவ்வொரு கேள்விக்கும் கீழே மூன்று பதில்கள் அளிக்கப்பட்டுள்ளன. யான விடையைத் தேர்ந்தெடுத்து '✔' பண்ணி அனுப்புங்கள். குலுக்கல் றையில் 20 பேருக்கு தலா ரூ. 250/- பரிசளிக்கப்படும். எங்கே.. உங்க பொது றிவை சோதிச்சுப் பாருங்க!

1. 20-20 கிரிக்கெட் போட்டியில் இறுதிச் சுற்றில் வற்றி பெற்ற அணியின் தலைவர் யார்?

அ. டோனி ☐ ஆ.ஷேன் வார்ன் ☐
இ. டிராவிட் ☐

2. நீண்ட கால மன்னராட்சிக்குப் பிறகு டியரசு நாடாக மலர்ந்திருப்பது எது?

அ. சிங்கப்பூர் ☐ ஆ. தாய்லாந்து ☐
இ. நேபாளம் ☐

3. சென்னையின் புதிய போலீஸ் கமிஷனர் ர்?

அ. நாஞ்சில் குமரன் ☐ ஆ. விஜயகுமார் ☐
இ. சேகர் ☐

4. முதல்வர் மாயாவதி தன் சிலையை அகற்றச் ய்தது எதற்காக?

அ. அதைவிட அதிக உயரத்தில் தனது சிலை டிவமைக்கப்பட வேண்டுமென்பதற்காக ☐
ஆ. தன் ஆயுள் குறைந்து டுமே என்ற அச்சத் ம் ☐



இ. அது தன்னைப் போல இல்லை என்பதற்காக ☐

5. தேசிய விருது பெற்றுள்ள நடிகை ப்ரியாமணியை முதலில் கதாநாயகியாக இயக்கியவர் யார்?

அ. பாலுமகேந்திரா ☐ ஆ. பாரதிராஜா ☐ இ. அமீர் ☐

6. கீழ்க்கண்டவற்றில் அதிக விலை ஏற்றத்தை சமீபத்தில் சந்தித்தது எது?

அ. 1 லிட்டர் பெட்ரோல் ☐ ஆ. 5 லிட்டர் டீசல் ☐

இ. 1 கேஸ் சிலிண்டர் ☐

7. சமீபத்தில் நாசா விஞ்ஞானிகளால் செவ்வாய்கிரகத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பாறை எது?

அ. உப்புப் பாறை ☐ ஆ. ஐஸ் பாறை ☐ இ. தங்கப் பாறை ☐



8. லஞ்ச ஊழலுக்காக கைது செய்யப்பட்டவர் எந்த மாநிலக் கல்வியமைச்சர்?

அ. அஸாம் ☐ ஆ. பீஹார் ☐ இ. ஒரிசா ☐

9. பெட்ரோல் விலை உயர்வை எதிர்த்து ஜூலை 7 அன்று தமிழகத்தில் பந்த் அறிவித்தது யார்?

அ. ம.தி.மு.க. ☐ ஆ. பா.ம.க. ☐

இ. இடதுசாரி கம்யூனிஸ்டுகள் ☐

10. ஹாவர்டு பல்கலைக்கழகம் எந்த எழுத்தாளருக்கு கௌரவ டாக்டர் பட்டம் வழங்கியது

அ. ரௌலிங் ☐ ஆ. தஸ்லிமா நஸ்ரின் ☐

இ. சல்மான் ருஷ்டி ☐

தொகுப்பு : ஜி.எஸ்.எஸ்

போட்டி விதிகள் :

அறிவு விடைகளை நிரப்பி இந்தப் பக்கத்தைக் கிழித்து அனுப்புங்க. ஒருவரே எத்தனை கூப்பன்களை வேண்டுமானாலும் அனுப்பலாம். ஜெராக்ஸ் கூடாது.

அனுப்ப வேண்டிய முகவரி : அறிவுப் போட்டி - 6 மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.

கடைசித் தேதி : 15.7.2008

பெயர் : .................................... விலாசம் : ....................................

..........................................................................................

..........................................................................................

தொலைபேசி எண் : .................................... ஈ-மெயில் : ....................................



## கோவை கோனியம்மன்

கோவன் என்ற இருளர் தலைவன் தன் கிராமத்தில் சிறு கோயிலைக் கட்டி ஒரு கல்லை நட்டு அதை 'கோனியம்மன்' என்று வழிபட்டு வந்தான். கோவன் பெயராலேயே அந்தக் கிராமம் கோவன்புதூர் என்று அழைக்கப்பட்டு இன்று கோயம்புத்தூர் என்று வழங்கி வருகிறது.



24 Supplement to Mangayar Malar July 2008



கோவை கோனியம்மன்

கோவன் என்ற இருளர் தலைவன் தன் கிராமத்தில் சிறு கோயிலைக் கட்டி ஒரு கல்லை நட்டு அதை 'கோனியம்மன்' என்று வழிபட்டு வந்தான். கோவன் பெயராலேயே அந்தக் கிராமம் கோவன்புதூர் என்று அழைக்கப்பட்டு இன்று கோயம்புத்தூர் என்று வழங்கி வருகிறது.

## *திருப்புகலூர் கருந்தார்குழலி*

திருவாரூருக்கு மிக அருகில் உள்ள தலம். அப்பர் முக்தி அடைந்த தலம். சுந்தரருக்கு செங்கற்களை பொன் செங்கலாக மாற்றிய தலம். அம்பாள் கருந்தூர்குழலி. மழை கொட்டிய ஓர் இரவில், பிரசவ வலி எடுத்த பெண்ணுக்கு பிரசவம் பார்க்க அம்பாளே பிரசவச்சியாக வந்தாள். மறுநாள் அதே புடவை அம்மன் சன்னதியில் இருந்தது அம்மனின் திருவிளையாடல். மாலை வேளைகளில் இன்றும் அம்மன் அலங்காரம் நீங்கி வெள்ளை உடையில் காட்சி தருகிறாள். கர்ப்ப சம்பந்த நோய்கள் நீங்க, சுகப்பிரசவம் ஆக அம்பாளுக்கு வெள்ளைப் புடவை (நீலம், பச்சை கரையிட்ட) சாத்துவதாக வேண்டிக் கொள்ளலாம்.



# அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 25

திருப்புகலூர் கருந்தார்குழலி

திருவாரூருக்கு மிக அருகில் உள்ள தலம். அப்பர் முக்தி அடைந்த தலம். சுந்தரருக்கு செங்கற்களை பொன் செங்கலாக மாற்றிய தலம். அம்பாள் கருந்தூர்குழலி. மழை கொட்டிய ஓர் இரவில், பிரசவ வலி எடுத்த பெண்ணுக்கு பிரசவம் பார்க்க அம்பாளே பிரசவச்சியாக வந்தாள். மறுநாள் அதே புடவை அம்மன் சன்னதியில் இருந்தது அம்மனின் திருவிளையாடல். மாலை வேளைகளில் இன்றும் அம்மன் அலங்காரம் நீங்கி வெள்ளை உடையில் காட்சி தருகிறாள். கர்ப்ப சம்பந்த நோய்கள் நீங்க, சுகப்பிரசவம் ஆக அம்பாளுக்கு வெள்ளைப் புடவை (நீலம், பச்சை கரையிட்ட) சாத்துவதாக வேண்டிக் கொள்ளலாம்.



அம்மன் 64!



## திரு ஆனைக்கா - அகிலாண்டேஸ்வரி

சிலந்தியும் - யானையும் பூஜித்த தலம். அதனால் திருவானைக்கா என்று பெயர். இறைவன் ஜம்புகேஸ்வரர். நாவல் மரத்தடியில் கோயில் கொண்டுள்ள இவரைச் சுற்றி தண்ணீர் இருக்கிறது. எங்கிருந்து வருகிறது என்பது தெய்வ அற்புதம். இறைவி அகிலாண்டேஸ்வரிக்கு இறைவன் ஞான உபதேசம் செய்த தவம். அம்மனின் உக்கிரத்தைத் தணிக்க ஆதிசங்கரர் இவள் சன்னதிக்கு எதிரே விநாயகரை பிரதிஷ்டை செய்து, காதுக்குத் தாடங்கத்தை அணிவித்தார்.



26 Supplement to Mangayar Malar July 2008



திரு ஆனைக்கா - அகிலாண்டேஸ்வரி

சிலந்தியும் - யானையும் பூஜித்த தலம். அதனால் திருவானைக்கா என்று பெயர். இறைவன் ஜம்புகேஸ்வரர். நாவல் மரத்தடியில் கோயில் கொண்டுள்ள இவரைச் சுற்றி தண்ணீர் இருக்கிறது. எங்கிருந்து வருகிறது என்பது தெய்வ அற்புதம். இறைவி அகிலாண்டேஸ்வரிக்கு இறைவன் ஞான உபதேசம் செய்த தவம். அம்மனின் உக்கிரத்தைத் தணிக்க ஆதிசங்கரர் இவள் சன்னதிக்கு எதிரே விநாயகரை பிரதிஷ்டை செய்து, காதுக்குத் தாடங்கத்தை அணிவித்தார்.

என்றும் உங்களுடன்

## பொள்ளாச்சி மாசாணியம்மன்

கோவை மாவட்டத்தில் பொள்ளாச்சிக்கு அருகில் ஆனைமலை செல்லும் வழியில் உள்ளது. மலைப்பாங்கான பிரதேசத்தில் நதிக்கரையோரம், 17 அடி நீளத்தில் பிரம்மாண்டமான சயனக்கோலத்தில் நான்கு திருக்கரங்களுடன் மாசாணி அம்மன் காட்சி தருகிறாள். கதவுகள் இல்லை. தலையைச் சுற்றி தழலுடன் சிவப்பு ஆடையுடன் காணப்படுகிறாள். இவள் நீதி வழங்குவதில் வல்லவள். மிளகாய் அரைத்து வழிபாடு செய்வது என்பது இங்கு ஒரு வழக்கம். எதிலாவது ஏமாற்றப்பட்டவர்கள் வயிற்றெரிச்சலுடன் அம்மனிடம் முறையிட்டு விட்டு, மிளகாய் அரைத்தால் அம்மன் ஏமாற்றியவர்களைத் தண்டிப்பாள் என்பது நம்பிக்கை!



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 27

பொள்ளாச்சி மாசாணியம்மன்

கோவை மாவட்டத்தில் பொள்ளாச்சிக்கு அருகில் ஆனைமலை செல்லும் வழியில் உள்ளது. மலைப்பாங்கான பிரதேசத்தில் நதிக்கரையோரம், 17 அடி நீளத்தில் பிரம்மாண்டமான சயனக்கோலத்தில் நான்கு திருக்கரங்களுடன் மாசாணி அம்மன் காட்சி தருகிறாள். கதவுகள் இல்லை. தலையைச் சுற்றி தழலுடன் சிவப்பு ஆடையுடன் காணப்படுகிறாள். இவள் நீதி வழங்குவதில் வல்லவள். மிளகாய் அரைத்து வழிபாடு செய்வது என்பது இங்கு ஒரு வழக்கம். எதிலாவது ஏமாற்றப்பட்டவர்கள் வயிற்றெரிச்சலுடன் அம்மனிடம் முறையிட்டு விட்டு, மிளகாய் அரைத்தால் அம்மன் ஏமாற்றியவர்களைத் தண்டிப்பாள் என்பது நம்பிக்கை!



அம்மன் 64!



### காசி விசாலாக்ஷி

அகன்ற கண்களால் உயிர்களுக்கு அருள்பாலிப்பதால் விசாலாக்ஷி என்று பெயர். கையில் கமண்டலமும், அக்ஷமாலையும் வைத்திருக்கிறாள். அம்மனுக்குத் தங்க விக்கிரமும், வெள்ளித் திருவாசியும் செய்து வைக்கப்பட்டிருக்கிறது. விஜயதசமியன்று ரத்தினவேலைக் கையில் தாங்கி உற்சவ விசாலாக்ஷி அம்பு போடுவது இனிய காட்சி. விசாலாக்ஷி முக்கியமானவள் என்றாலும் சகல உயிர்களுக்கும் உணவளிக்கும் அன்னபூரணிக்குத்தான் முக்கியத்துவம் அதிகம். தீபாவளியன்று அன்னபூரணியை தங்கமயமாக அலங்காரம் செய்து லட்டுத் தேர் இழுப்பார்கள்.



28 Supplement to Mangayar Malar July 2008



காசி விசாலாக்ஷி

அகன்ற கண்களால் உயிர்களுக்கு அருள்பாலிப்பதால் விசாலாக்ஷி என்று பெயர். கையில் கமண்டலமும், அக்ஷமாலையும் வைத்திருக்கிறாள். அம்மனுக்குத் தங்க விக்கிரமும், வெள்ளித் திருவாசியும் செய்து வைக்கப்பட்டிருக்கிறது. விஜயதசமியன்று ரத்தினவேலைக் கையில் தாங்கி உற்சவ விசாலாக்ஷி அம்பு போடுவது இனிய காட்சி. விசாலாக்ஷி முக்கியமானவள் என்றாலும் சகல உயிர்களுக்கும் உணவளிக்கும் அன்னபூரணிக்குத்தான் முக்கியத்துவம் அதிகம். தீபாவளியன்று அன்னபூரணியை தங்கமயமாக அலங்காரம் செய்து லட்டுத் தேர் இழுப்பார்கள்.

என்றும் உங்களுடன்

## *திருமீயச்சூர் லலிதாம்பிகை*

திருவாரூர் மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் உள்ள கிராமம். பேரளத்திலிருந்து 1 கி.மீட்டர். தன் ஒளியை இழந்த சூரியதேவன் தவம் செய்து மீண்டும் ஒளிபெற்றான். சூரியன் அம்மனின் அருளைப் பெறும் சமயம் வசினி என்ற வாக்தேவதை லலிதாம்பிகேயின் வாயிலிருந்து தோன்றி லலிதா சஹஸ்ரநாமத்தைச் சொல்லி மகிழ்விக்கிறாள். இதுதான் லலிதா ஸஹஸ்ரநாமம் உருவான வரலாறு. சூரியனுக்கு யமதர்மராஜனும் சனிபகவானும் இத்தலத்தில்தான் பிறந்தார்கள் என்று கூறுவார்கள்.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 29

*திருமீயச்சூர் லலிதாம்பிகை*

திருவாரூர் மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் உள்ள கிராமம். பேரளத்திலிருந்து 1 கி.மீட்டர். தன் ஒளியை இழந்த சூரியதேவன் தவம் செய்து மீண்டும் ஒளிபெற்றான். சூரியன் அம்மனின் அருளைப் பெறும் சமயம் வசினி என்ற வாக்தேவதை லலிதாம்பிகேயின் வாயிலிருந்து தோன்றி லலிதா சஹஸ்ரநாமத்தைச் சொல்லி மகிழ்விக்கிறாள். இதுதான் லலிதா ஸஹஸ்ரநாமம் உருவான வரலாறு. சூரியனுக்கு யமதர்மராஜனும் சனிபகவானும் இத்தலத்தில்தான் பிறந்தார்கள் என்று கூறுவார்கள்.





## நாகை நெல்லுக்கடை மாரியம்மன்

கோயில் வாசலில் பெரியகம்பம் நடப்பட்டு தொட்டில் ஒன்று அமைக்கப்பட்டிருக்கும். காத்தவராயன் வேடத்தில் அந்தத் தொட்டிலின் மேலே பூசாரி நின்று கொண்டிருப்பார். பிரார்த்தனை செலுத்தப் போகும் குழந்தைகளைத் தாழ வரும் ராட்டினத்தில் கொடுப்பார்கள். ராட்டினம் குழந்தையுடன் வானுயரத்தில் எழும்பி கழுமரத்தை ஒரு சுற்றுச் சுற்றி விட்டுக் கீழே இறங்கும். பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட குழந்தைகள் இந்தப் பிரார்த்தனையைச் செலுத்துவது இந்த அம்மன் மகிமை. இதற்கு 'செடிப் பிரார்த்தனை' என்று பெயர்.





30 Supplement to Mangayar Malar July 2008



நாகை நெல்லுக்கடை மாரியம்மன்

கோயில் வாசலில் பெரியகம்பம் நடப்பட்டு தொட்டில் ஒன்று அமைக்கப்பட்டிருக்கும். காத்தவராயன் வேடத்தில் அந்தத் தொட்டிலின் மேலே பூசாரி நின்று கொண்டிருப்பார். பிரார்த்தனை செலுத்தப் போகும் குழந்தைகளைத் தாழ வரும் ராட்டினத்தில் கொடுப்பார்கள். ராட்டினம் குழந்தையுடன் வானுயரத்தில் எழும்பி கழுமரத்தை ஒரு சுற்றுச் சுற்றி விட்டுக் கீழே இறங்கும். பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட குழந்தைகள் இந்தப் பிரார்த்தனையைச் செலுத்துவது இந்த அம்மன் மகிமை. இதற்கு 'செடிப் பிரார்த்தனை' என்று பெயர்.



என்றும் உங்களுடன்

## மதுராந்தகம் ஜனகவல்லித் தாயார்

"இதோ இந்த ராமர், அந்த ஏரியை உடைபடாமல் காத்து விட்டால் நான் தாயார் சன்னதியைச் செப்பனிட்டுத் தருகிறேன். இது சத்தியம்!" என்று சொன்னவர் கலெக்டர் ப்ளேஸ். ஆண்டு 1795. ஊர் மதுராந்தகம். சொல்லிவிட்டு பங்களா திரும்பிய கலெக்டருக்குத் தூக்கமும் வரவில்லை. தவிக்கும் உள்ளத்துடன் இருட்டில் ஏரியை நோக்கி நடந்தார். அங்கே மின்னல் பறிக்கும் ஒளியில் ஒரு காட்சியைக் கண்டார். திவ்யஒளியுடன் கையில் வில்லேந்தி கம்பீரமாக ராம-லட்சுமணர் ஏரியைச் சுற்றி மின்னல் போல் வருவதும் தெரிகிறது. அந்த ஏரி அன்றும் - இன்றும் உடையவில்லை. கலெக்டர் சொன்னது போல் ஜனகவல்லித் தாயார் சன்னதியைக் கட்டிக் கொடுத்தார். தாயார் சன்னதியில் கல்வெட்டும் உள்ளது.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 31

மதுராந்தகம் ஜனகவல்லித் தாயார்

"இதோ இந்த ராமர், அந்த ஏரியை உடைபடாமல் காத்து விட்டால் நான் தாயார் சன்னதியைச் செப்பனிட்டுத் தருகிறேன். இது சத்தியம்!" என்று சொன்னவர் கலெக்டர் ப்ளேஸ். ஆண்டு 1795. ஊர் மதுராந்தகம். சொல்லிவிட்டு பங்களா திரும்பிய கலெக்டருக்குத் தூக்கமும் வரவில்லை. தவிக்கும் உள்ளத்துடன் இருட்டில் ஏரியை நோக்கி நடந்தார். அங்கே மின்னல் பறிக்கும் ஒளியில் ஒரு காட்சியைக் கண்டார். திவ்யஒளியுடன் கையில் வில்லேந்தி கம்பீரமாக ராம-லட்சுமணர் ஏரியைச் சுற்றி மின்னல் போல் வருவதும் தெரிகிறது. அந்த ஏரி அன்றும் - இன்றும் உடையவில்லை. கலெக்டர் சொன்னது போல் ஜனகவல்லித் தாயார் சன்னதியைக் கட்டிக் கொடுத்தார். தாயார் சன்னதியில் கல்வெட்டும் உள்ளது.



அம்மன் 64!



## மைசூர் சாமுண்டி

காளி உக்கிரமானவள். அந்த அதி உக்கிரத்திலும் ஓர் அற்புத அழகை இங்கு காணலாம். மைசூர் அருகே சிறிய குன்று இவளது இருப்பிடம். அது மனத்தைக் கவரும் பூங்காவாக அமைந்திருக்கிறது. மகிஷனை சம்ஹாரம் செய்தபின் மகிஷாசுரமர்த்தினி இளைப்பாற சாமுண்டி மலையிலேயே தங்கி விட்டாளாம். வீர சொரூபிணி. ஆஷாடகிருஷ்ண சஷ்டியை அன்னை சாமுண்டியின் பிறந்த நாளாக விமரிசையாகக் கொண்டாடுகிறார்கள்.



32 Supplement to Mangayar Malar July 2008



மைசூர் சாமுண்டி

காளி உக்கிரமானவள். அந்த அதி உக்கிரத்திலும் ஓர் அற்புத அழகை இங்கு காணலாம். மைசூர் அருகே சிறிய குன்று இவளது இருப்பிடம். அது மனத்தைக் கவரும் பூங்காவாக அமைந்திருக்கிறது. மகிஷனை சம்ஹாரம் செய்தபின் மகிஷாசுரமர்த்தினி இளைப்பாற சாமுண்டி மலையிலேயே தங்கி விட்டாளாம். வீர சொரூபிணி. ஆஷாடகிருஷ்ண சஷ்டியை அன்னை சாமுண்டியின் பிறந்த நாளாக விமரிசையாகக் கொண்டாடுகிறார்கள்.

என்றும் உங்களுடன்

ஹரித்வார் - மாயாபுரி

சக்திபீடங்களில் ஒன்று. அம்பாளின் விலா எலும்பு விழுந்த இடம். இங்கு கங்கையே அம்பாளாக வணங்கப்படுகிறாள். இங்கு தட்சனுக்கும் கோயில் உண்டு. சதிதேவி தன் உடலைத் தியாகம் செய்த இடம் சதிகுண்டம். ஹிமாலயத்தில் 200 மைல்கள் கடந்து கங்கை சமவெளியில் பாயும் இடம். விளக்கை ஏற்றி மாலை நேரங்களில் கங்கை நதியில் மிதக்க விடுவது விசேஷம்.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 33

ஹரித்வார் - மாயாபுரி

சக்திபீடங்களில் ஒன்று. அம்பாளின் விலா எலும்பு விழுந்த இடம். இங்கு கங்கையே அம்பாளாக வணங்கப்படுகிறாள். இங்கு தட்சனுக்கும் கோயில் உண்டு. சதிதேவி தன் உடலைத் தியாகம் செய்த இடம் சதிகுண்டம். ஹிமாலயத்தில் 200 மைல்கள் கடந்து கங்கை சமவெளியில் பாயும் இடம். விளக்கை ஏற்றி மாலை நேரங்களில் கங்கை நதியில் மிதக்க விடுவது விசேஷம்.





## சிருங்கேரி சாரதா பீடம்

மைசூர் சிக்மகளூர் மாவட்டத்தில் துங்கபத்ரா நதிக்கரையில் அமைந்துள்ள பீடம். ரிஷ்யசிருங்கர் பிறந்த இடம். ஆதிசங்கரர் மண்டனமிச்ரரை பெற்றபின் சரஸ்வதியை காஷ்மீரத்திலிருந்து தென்திசைக்கு அழைத்து வருகிறார். சங்கரர் தன்னை திரும்பிப் பார்க்கக் கூடாது. திரும்பிப் பார்த்தால் அங்கேயே நின்று விடுவதாக நிபந்தனை போடுகிறாள் சரஸ்வதி. துங்கா தீரத்தில் தவளையின் பேறுகாலத்திற்கு பாம்பு குடை பிடிக்கும் அதிசய நிகழ்ச்சியைப் பார்க்க சங்கரர் திரும்பிப் பார்க்க சரஸ்வதி அங்கேயே நின்று விடுகிறாள். அதுவே சாரதா பீடமாக நிலைத்து விடுகிறது.



34 Supplement to Mangayar Malar July 2008



சிருங்கேரி சாரதா பீடம்

மைசூர் சிக்மகளூர் மாவட்டத்தில் துங்கபத்ரா நதிக்கரையில் அமைந்துள்ள பீடம். ரிஷ்யசிருங்கர் பிறந்த இடம். ஆதிசங்கரர் மண்டனமிச்ரரை பெற்றபின் சரஸ்வதியை காஷ்மீரத்திலிருந்து தென்திசைக்கு அழைத்து வருகிறார். சங்கரர் தன்னை திரும்பிப் பார்க்கக் கூடாது. திரும்பிப் பார்த்தால் அங்கேயே நின்று விடுவதாக நிபந்தனை போடுகிறாள் சரஸ்வதி. துங்கா தீரத்தில் தவளையின் பேறுகாலத்திற்கு பாம்பு குடை பிடிக்கும் அதிசய நிகழ்ச்சியைப் பார்க்க சங்கரர் திரும்பிப் பார்க்க சரஸ்வதி அங்கேயே நின்று விடுகிறாள். அதுவே சாரதா பீடமாக நிலைத்து விடுகிறது.

என்றும் உங்களுடன்

## செங்கண்ணூர் பகவதி

தட்ச யக்ஞத்தின் பொழுது தேவியின் உடலின் மத்யகண்டம் செங்குன்று என்ற இடத்தில் விழுந்ததால் அதுவே செங்கண்ணூர் என்று பெயர் பெற்றது. மதுரையை எரித்த கண்ணகி இங்கு வந்து தவம்புரிந்திருக்கிறாள். அங்கு வந்த சேரன் - செங்குட்டுவன் கண்ணகி வானுலகம் சென்ற அதிசயத்தைக் கண்டு அவளுக்கு ஆலயம் அமைத்தார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

அஸ்ஸாம் காமாக்யா தேவியைப் போலவே இந்த அன்னையும் மாதவிலக்காவதாகச் சொல்லப்படுகிறது. அச் சமயம் அம்மனுக்கு அணிவிக்கும் பாவாடையை வீட்டில் வைத்துக் கொண்டால் ஐஸ்வர்யம் கொட்டும் என்று நம்பப்படுகிறது.





Supplement to Mangayar Malar July 2008 35

செங்கண்ணூர் பகவதி

தட்ச யக்ஞத்தின் பொழுது தேவியின் உடலின் மத்யகண்டம் செங்குன்று என்ற இடத்தில் விழுந்ததால் அதுவே செங்கண்ணூர் என்று பெயர் பெற்றது. மதுரையை எரித்த கண்ணகி இங்கு வந்து தவம்புரிந்திருக்கிறாள். அங்கு வந்த சேரன் - செங்குட்டுவன் கண்ணகி வானுலகம் சென்ற அதிசயத்தைக் கண்டு அவளுக்கு ஆலயம் அமைத்தார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

அஸ்ஸாம் காமாக்யா தேவியைப் போலவே இந்த அன்னையும் மாதவிலக்காவதாகச் சொல்லப்படுகிறது. அச் சமயம் அம்மனுக்கு அணிவிக்கும் பாவாடையை வீட்டில் வைத்துக் கொண்டால் ஐஸ்வர்யம் கொட்டும் என்று நம்பப்படுகிறது.





## கோலாப்பூர் - லக்ஷ்மி

மகார்ராஷ்டிராவில் பஞ்சகங்கா நதியின் தென்கரையில் அமைந்துள்ளது. காசியை விட ஒரு அட்சதை அளவு அதிக மஹிமை உடையது. ஒருமுறை சிவனுக்கும் பார்வதிக்கும் தங்கள் வாசஸ்தலங்களில் எதற்கு மகத்துவம் அதிகம் என்று விவாதம் ஏற்பட்டது. சிவனின் காசியை சூலத்திலும், கோலாப்பூரை 'கதை'யிலும் செலுத்தி தராசின் தட்டுகளில் வைத்தார் நடுவர் மகாவிஷ்ணு. சக்தியின் தட்டு கனத்தோடு கீழே இறங்கியது. சிவனின் தட்டைச் சரியாக்க ஒரே ஒரு அட்சதையை வைக்க தட்டு சரிசமமானது. மகாவிஷ்ணு செய்த உதவிக்காக சக்தி இங்கே மகாலட்சுமி யாக இருந்து அருள்பாலிக்கிறாள்.



36 Supplement to Mangayar Malar July 2008



கோலாப்பூர் - லக்ஷ்மி

மகாராஷ்டிராவில் பஞ்சகங்கா நதியின் தென்கரையில் அமைந்துள்ளது. காசியை விட ஒரு அட்சதை அளவு அதிக மஹிமை உடையது. ஒருமுறை சிவனுக்கும் பார்வதிக்கும் தங்கள் வாசஸ்தலங்களில் எதற்கு மகத்துவம் அதிகம் என்று விவாதம் ஏற்பட்டது. சிவனின் காசியை சூலத்திலும், கோலாப்பூரை 'கதை'யிலும் செலுத்தி தராசின் தட்டுகளில் வைத்தார் நடுவர் மகாவிஷ்ணு. சக்தியின் தட்டு கனத்தோடு கீழே இறங்கியது. சிவனின் தட்டைச் சரியாக்க ஒரே ஒரு அட்சதையை வைக்க தட்டு சரிசமமானது. மகாவிஷ்ணு செய்த உதவிக்காக சக்தி இங்கே மகாலட்சுமி யாக இருந்து அருள்பாலிக்கிறாள்.

என்றும் உங்களுடன்

### நாகை நீலாயதாக்ஷி

நாகப்பட்டணம் ரயில் நிலையத்திலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. புண்டரீக மகரிஷியின் கோரிக்கைக்கு இணங்க, காயத்தோடு ஸ்வாமி எழுந்தருளியதால் இறைவனின் பெயர் காயாரோகணப் பெருமாள். அம்பாளின் பெயர் நீலாயதாக்ஷி. கருந்தடங்கண்ணி, நீலமலர் போன்ற கண்ணழகு. நான்கு கரங்களுடன் நின்ற திருக்கோலம். 'நாகையம்மபதி நீலிக்குப் பாதி' என்பார்கள். அதாவது நாகையின் பாதி சொத்து, நீலாயதாக்ஷியினுடையது.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 37

நாகை நீலாயதாக்ஷி

நாகப்பட்டணம் ரயில் நிலையத்திலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. புண்டரீக மகரிஷியின் கோரிக்கைக்கு இணங்க, காயத்தோடு ஸ்வாமி எழுந்தருளியதால் இறைவனின் பெயர் காயாரோகணப் பெருமாள். அம்பாளின் பெயர் நீலாயதாக்ஷி. கருந்தடங்கண்ணி, நீலமலர் போன்ற கண்ணழகு. நான்கு கரங்களுடன் நின்ற திருக்கோலம். 'நாகையம்மபதி நீலிக்குப் பாதி' என்பார்கள். அதாவது நாகையின் பாதி சொத்து, நீலாயதாக்ஷியினுடையது.



அம்மன் 64!



## வேதாரண்யத்து அழகி

திருவாரூர் பூங்கோயிலைப் போல அமைந்துள்ள வேதாரண்யம் சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று. இறைவனுக்கு வடபக்கத்தில் யாழைப் பழித்த மொழியுமையாளின் திருக்கோயில் அமைந்துள்ளது. அம்மை சுந்தரபீடநாயகியாக காட்சி தருகிறாள். முதல் பிராகாரத்தில் துர்க்கை வரப்பிரசாதகியாகத் திகழ்கிறாள். இவளுக்கு அபிஷேக ஆராதனைகள் செய்தால் பில்லி, சூனியம், கிரகக் கோளாறுகள் விலகுகின்றன. சன்னதியில் மஞ்சள், குங்குமம், நூல் கயிறு வைத்து மந்தரித்துப் பயன்படுத்தினால் சகல நன்மைகளும் கிடைக்கும்.





38 Supplement to Mangayar Malar July 2008

வேதாரண்யத்து அழகி

திருவாரூர் பூங்கோயிலைப் போல அமைந்துள்ள வேதாரண்யம் சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று. இறைவனுக்கு வடபக்கத்தில் யாழைப் பழித்த மொழியுமையாளின் திருக்கோயில் அமைந்துள்ளது. அம்மை சுந்தரபீடநாயகியாக காட்சி தருகிறாள். முதல் பிராகாரத்தில் துர்க்கை வரப்பிரசாதகியாகத் திகழ்கிறாள். இவளுக்கு அபிஷேக ஆராதனைகள் செய்தால் பில்லி, சூனியம், கிரகக் கோளாறுகள் விலகுகின்றன. சன்னதியில் மஞ்சள், குங்குமம், நூல் கயிறு வைத்து மந்தரித்துப் பயன்படுத்தினால் சகல நன்மைகளும் கிடைக்கும்.

## கருகாவூர் கர்ப்பரட்சாம்பிகை

நைத்துருவர் என்பவரின் மனைவி வேதிகை, கருவுற்றிருந்தாள். உத்பாத முனிவர் வந்து பிகுக்ஷை கேட்க, மசக்கையால் மயக்கமுற்ற வேதிகையால் உபசரிக்க முடியவில்லை. இதனை அறியாத முனிவர் வேதிகைக்கு வலிப்பு நோய் வரும்படி சாபம் கொடுத்து விடுகிறார். அன்னை கர்ப்பரட்சகி அக்கருவை குடத்தில் வைத்து வளர்த்துக் குழந்தையாக்கி வேதிகையிடம் தருகிறாள். இறைவன் காமதேனுவின் பாலை குழந்தைக்குத் தந்து அருள்பாலிக்கிறாள். வருணலோகத்திலிருந்து திரும்பி வந்த நைத்துருவர் நடந்ததை அறிந்து "பெண்கள் கர்ப்பரட்சகியை வேண்டினால் சுகப்பிரசவம் ஏற்பட வேண்டும்" என்று அன்னையை வேண்ட, கர்ப்பரட்சகி சம்மதித்தாள். இங்கே மந்தரித்துத் தரும் ஆமணக்கு எண்ணெயை கருவுற்ற மகளிர் வயிற்றில் தடவினால் சுகப்பிரசவம் ஆகும் என்பது அனுபவ உண்மை.



# அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 39

கருகாவூர் கர்ப்பரட்சாம்பிகை

நைத்துருவர் என்பவரின் மனைவி வேதிகை, கருவுற்றிருந்தாள். உத்பாத முனிவர் வந்து பிகுக்ஷை கேட்க, மசக்கையால் மயக்கமுற்ற வேதிகையால் உபசரிக்க முடியவில்லை. இதனை அறியாத முனிவர் வேதிகைக்கு வலிப்பு நோய் வரும்படி சாபம் கொடுத்து விடுகிறார். அன்னை கர்ப்பரட்சகி அக்கருவை குடத்தில் வைத்து வளர்த்துக் குழந்தையாக்கி வேதிகையிடம் தருகிறாள். இறைவன் காமதேனுவின் பாலை குழந்தைக்குத் தந்து அருள்பாலிக்கிறாள். வருணலோகத்திலிருந்து திரும்பி வந்த நைத்துருவர் நடந்ததை அறிந்து "பெண்கள் கர்ப்பரட்சகியை வேண்டினால் சுகப்பிரசவம் ஏற்பட வேண்டும்" என்று அன்னையை வேண்ட, கர்ப்பரட்சகி சம்மதித்தாள். இங்கே மந்தரித்துத் தரும் ஆமணக்கு எண்ணெயை கருவுற்ற மகளிர் வயிற்றில் தடவினால் சுகப்பிரசவம் ஆகும் என்பது அனுபவ உண்மை.



அம்மன் 64!



## திருக்கடவூர் அபிராமி

தை அமாவாசையன்று தஞ்சை மன்னன் கடலில் நீராடிவிட்டு ஆலயத்திற்கு வந்தான். மோனத் தவத்தில் ஆழ்ந்திருந்த அபிராமி பட்டரிடம் இன்று என்ன திதி என்று கேட்க, பட்டரோ, ''பௌர்ணமி'' என்று கூறினார். அன்றிரவு நிலவைக் காட்ட வேண்டும் என்று மன்னன் கூறிவிட்டான். உரி கட்டி உயரத்தில் பட்டரை நிற்க வைத்த மன்னனுக்கு அபிராமி அந்தாதியைப் பாடி, அமாவாசை இரவில் பௌர்ணமி நிலவைக் காட்டி அற்புதம் நிகழ்த்தினார். மாயவரத்திற்குப் பக்கத்தில் உள்ளது திருக்கடையூர்தலம். மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறு வரத்தைக் கொடுத்த அற்புதத்தலம். அறுபதாம் கல்யாணத்தை இங்கு வந்து கொண்டாடுவது விசேஷம்.



40 Supplement to Mangayar Malar July 2008



திருக்கடவூர் அபிராமி

தை அமாவாசையன்று தஞ்சை மன்னன் கடலில் நீராடிவிட்டு ஆலயத்திற்கு வந்தான். மோனத் தவத்தில் ஆழ்ந்திருந்த அபிராமி பட்டரிடம் இன்று என்ன திதி என்று கேட்க, பட்டரோ, ''பௌர்ணமி'' என்று கூறினார். அன்றிரவு நிலவைக் காட்ட வேண்டும் என்று மன்னன் கூறிவிட்டான். உரி கட்டி உயரத்தில் பட்டரை நிற்க வைத்த மன்னனுக்கு அபிராமி அந்தாதியைப் பாடி, அமாவாசை இரவில் பௌர்ணமி நிலவைக் காட்டி அற்புதம் நிகழ்த்தினார். மாயவரத்திற்குப் பக்கத்தில் உள்ளது திருக்கடையூர்தலம். மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறு வரத்தைக் கொடுத்த அற்புதத்தலம். அறுபதாம் கல்யாணத்தை இங்கு வந்து கொண்டாடுவது விசேஷம்.

என்றும் உங்களுடன்

## அண்ணாமலை அபீத குசாம்பிகை

கயிலையில் விளையாட்டாக இறைவனின் கண்களை உமையவள் பொத்த உலகம் இருண்டது. அன்னையை ''மணலால் இலிங்கம் அமைத்து காஞ்சியில் வழிபாடு நடத்தி, அண்ணாமலைக்கு வந்து இடபாகம் பெறுக'' என்று இறைவன் கூறினார். ஞானப் பரம்பொருளான இறைவனின் திருமேனியில் அன்னை இடப்பாகம் பெற்று அர்த்தநாரீஸ்வரர் என்ற திருப்பெயரை இறைவனுக்கு அளித்தாள். திருக்கோயிலிலும் அண்ணாமலையாருக்கு இடப்பாகத்திலேயே கோயில் கொண்டுள்ளாள். நினைத்தாலே முக்தி தரக்கூடிய இங்கேதான் அருணகிரிநாதர் திருப்புகழைப் பாடத் தொடங்கினார். பௌர்ணமி கிரிவலம் மிகவும் விசேஷம்.



# அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 41

அண்ணாமலை அபீத குசாம்பிகை

கயிலையில் விளையாட்டாக இறைவனின் கண்களை உமையவள் பொத்த உலகம் இருண்டது. அன்னையை ''மணலால் இலிங்கம் அமைத்து காஞ்சியில் வழிபாடு நடத்தி, அண்ணாமலைக்கு வந்து இடபாகம் பெறுக'' என்று இறைவன் கூறினார். ஞானப் பரம்பொருளான இறைவனின் திருமேனியில் அன்னை இடப்பாகம் பெற்று அர்த்தநாரீஸ்வரர் என்ற திருப்பெயரை இறைவனுக்கு அளித்தாள். திருக்கோயிலிலும் அண்ணாமலையாருக்கு இடப்பாகத்திலேயே கோயில் கொண்டுள்ளாள். நினைத்தாலே முக்தி தரக்கூடிய இங்கேதான் அருணகிரிநாதர் திருப்புகழைப் பாடத் தொடங்கினார். பௌர்ணமி கிரிவலம் மிகவும் விசேஷம்.



அம்மன் 64!



## சோற்றாணிக்கரை பகவதி

அன்னை பராசக்தி லட்சுமி நாராயணத் தத்துவமாக எழுந்தருளியிருக்கிறாள். மூலஸ்தான சிலாவடிவம் உருவ அமைப்புடன் கூடியதன்று. சிவப்பு வெட்டுக்கல் பகவதியாகவும், வலப்புறம் உள்ள சிறிய கருங்கல் மகாவிஷ்ணுவாகவும் ஆராதிக்கப்படுகின்றன. காலையில் வெள்ளாடை சரஸ்வதியாகவும், மதியம் சிவப்பாடை இலட்சுமி யாகவும், மாலை நீலவண்ண ஆடை துர்க்கையாகவும் காட்சி தருகிறாள். பேய், பிசாசுகளின் சேஷ்டைகளை இவர் அடக்குவதாக பக்தர்கள் நம்புகிறார்கள்.



42 Supplement to Mangayar Malar July 2008



சோற்றாணிக்கரை பகவதி

அன்னை பராசக்தி லட்சுமி நாராயணத் தத்துவமாக எழுந்தருளியிருக்கிறாள். மூலஸ்தான சிலாவடிவம் உருவ அமைப்புடன் கூடியதன்று. சிவப்பு வெட்டுக்கல் பகவதியாகவும், வலப்புறம் உள்ள சிறிய கருங்கல் மகாவிஷ்ணுவாகவும் ஆராதிக்கப்படுகின்றன. காலையில் வெள்ளாடை சரஸ்வதியாகவும், மதியம் சிவப்பாடை இலட்சுமி யாகவும், மாலை நீலவண்ண ஆடை துர்க்கையாகவும் காட்சி தருகிறாள். பேய், பிசாசுகளின் சேஷ்டைகளை இவர் அடக்குவதாக பக்தர்கள் நம்புகிறார்கள்.

என்றும் உங்களுடன்

*திரிகூடமலை பராசக்தி*

பச்சை மாமலையார் நிற்கும் அற்புதத் திரிகூட மலை. நெல்லை மாவட்டம் தென்காசிக்கு அருகில் உள்ளது. திருக்குற்றாலநாதரின் திருக்கோயிலுள் வடபாகத்தில், அன்னை பராசக்தி யோகபீட நாயகியாய் அமர்ந்திருக்கிறாள். இவளே உலகம் யாவும் தோன்றுவதற்குக் காரணமாய் இருப்பதால் தரணி பீடம் என்றும் வழங்குகின்றனர். வேதநாயகனான குற்றாலநாதரின் வலப்புறத்தில் குழல்வாய் மொழியம்மையும், இடப்புறத்தில் பராசக்தியும் கோயில் கொண்டு விளங்குகின்றனர்.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 43

*திரிகூடமலை பராசக்தி*

பச்சை மாமலையார் நிற்கும் அற்புதத் திரிகூட மலை. நெல்லை மாவட்டம் தென்காசிக்கு அருகில் உள்ளது. திருக்குற்றாலநாதரின் திருக்கோயிலுள் வடபாகத்தில், அன்னை பராசக்தி யோகபீட நாயகியாய் அமர்ந்திருக்கிறாள். இவளே உலகம் யாவும் தோன்றுவதற்குக் காரணமாய் இருப்பதால் தரணி பீடம் என்றும் வழங்குகின்றனர். வேதநாயகனான குற்றாலநாதரின் வலப்புறத்தில் குழல்வாய் மொழியம்மையும், இடப்புறத்தில் பராசக்தியும் கோயில் கொண்டு விளங்குகின்றனர்.



அம்மன் 64!



## பாபநாசம் உலகநாயகி

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள தலம் பாபநாசம். அகஸ்திய மகரிஷிக்குத் திருமணக் கோலம் காட்டிய தலம். அம்பிகையின் பெயர் விமலை. இப்பொழுது இவளை உலக நாயகி என்றால்தான் தெரியும். தவள வெண்ணகை என்று அழகு தமிழில் அழைக்கும் இவளுக்கும் இரட்டை பைரவருக்கும் தேய்பிறை அஷ்டமியில் சிறப்புப் பூஜை நடைபெறுகிறது.



44 Supplement to Mangayar Malar July 2008



பாபநாசம் உலகநாயகி

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள தலம் பாபநாசம். அகஸ்திய மகரிஷிக்குத் திருமணக் கோலம் காட்டிய தலம். அம்பிகையின் பெயர் விமலை. இப்பொழுது இவளை உலக நாயகி என்றால்தான் தெரியும். தவள வெண்ணகை என்று அழகு தமிழில் அழைக்கும் இவளுக்கும் இரட்டை பைரவருக்கும் தேய்பிறை அஷ்டமியில் சிறப்புப் பூஜை நடைபெறுகிறது.

என்றும் உங்களுடன்

### *தில்லை சிவகாமசுந்தரி - தில்லைக்காளி*

இங்கு தனிக்கோயில் கொண்டு அன்னை சிவகாம சுந்தரி எழுந்தருளி இருக்கிறாள். சுந்தரம் - அழகு. சுந்தரி- அழகை உடையவள். தில்லைக்கோயிலின் அருகே தில்லைக்காளி கோயில் கொண்டுள்ளாள். பதஞ்சலி முனிவர் நடராஜரின் ஆட்டத்தைக் காண ஆசை கொண்டார். அந்த நடனத்தைப் பழித்துப் பேசிய காளியுடன் இறைவன் நடனமாட பூலோகம் வந்தார். இறைவனுடன் ஆட முடியாமல் தோல்வியுற்ற காளி, காக்கும் தெய்வமாகத் தில்லைக்காளி ஆனதாக வரலாறு.



**அம்மன் 64!**

Supplement to Mangayar Malar July 2008 45

*தில்லை சிவகாமசுந்தரி - தில்லைக்காளி*

இங்கு தனிக்கோயில் கொண்டு அன்னை சிவகாம சுந்தரி எழுந்தருளி இருக்கிறாள். சுந்தரம் - அழகு. சுந்தரி- அழகை உடையவள். தில்லைக்கோயிலின் அருகே தில்லைக்காளி கோயில் கொண்டுள்ளாள். பதஞ்சலி முனிவர் நடராஜரின் ஆட்டத்தைக் காண ஆசை கொண்டார். அந்த நடனத்தைப் பழித்துப் பேசிய காளியுடன் இறைவன் நடனமாட பூலோகம் வந்தார். இறைவனுடன் ஆட முடியாமல் தோல்வியுற்ற காளி, காக்கும் தெய்வமாகத் தில்லைக்காளி ஆனதாக வரலாறு.



அம்மன் 64!



## மண்டைக்காடு பகவதி

கேரள குளக்கலிலிருந்து கிழக்கே சுமார் இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. சித்தர் ஒருவர் அங்கு ஸ்ரீசக்ரத்தை வைத்து பூஜை செய்வதுடன் மாடு மேய்க்கும் சிறுவர்களுடன் விளையாடுவார். ஒருநாள் குழி ஒன்றைத் தோண்டி அதனுள் அமர்ந்து குழந்தைகளை மூடச் சொல்ல, அவர்களும் மூடினார்கள். பிறகு சித்தரைக் காணவில்லை. சித்தரைத் தேடிய குழந்தைகள் சித்தர் பூஜை செய்த ஸ்ரீசக்ரத்தின் இடத்தில் புற்று வளர்ந்திருப்பதைக் கண்டார்கள். கொன்னக்கோடு நாயர் குடும்பத் தலைவன் அந்த இடத்தில் கோயில் எழுப்பினான். கோயிலினுள் அன்னை பகவதி புற்று வடிவில் காட்சி தருகிறாள். இவளை 41 நாட்கள் பூஜித்தால் பித்து, சித்து, தீராப் பிணிகள் எல்லாம் தீருகின்றன.



46 Supplement to Mangayar Malar July 2008



மண்டைக்காடு பகவதி

கேரள குளக்கலிலிருந்து கிழக்கே சுமார் இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. சித்தர் ஒருவர் அங்கு ஸ்ரீசக்ரத்தை வைத்து பூஜை செய்வதுடன் மாடு மேய்க்கும் சிறுவர்களுடன் விளையாடுவார். ஒருநாள் குழி ஒன்றைத் தோண்டி அதனுள் அமர்ந்து குழந்தைகளை மூடச் சொல்ல, அவர்களும் மூடினார்கள். பிறகு சித்தரைக் காணவில்லை. சித்தரைத் தேடிய குழந்தைகள் சித்தர் பூஜை செய்த ஸ்ரீசக்ரத்தின் இடத்தில் புற்று வளர்ந்திருப்பதைக் கண்டார்கள். கொன்னக்கோடு நாயர் குடும்பத் தலைவன் அந்த இடத்தில் கோயில் எழுப்பினான். கோயிலினுள் அன்னை பகவதி புற்று வடிவில் காட்சி தருகிறாள். இவளை 41 நாட்கள் பூஜித்தால் பித்து, சித்து, தீராப் பிணிகள் எல்லாம் தீருகின்றன.

என்றும் உங்களுடன்

## ஸ்ரீசைலம் பிரமராம்பிகை

ஸ்ரீசைலத்தில் பிரமராம்பிகை சக்தி பீடாதிபதியாகி விளங்குகிறாள். அர்ஜுனனுடன் வேட வடிவம் கொண்டு சிவன் போரிட்டு அவனுக்கு அருள் செய்த தலம். சந்திராவதி என்ற அரசகுமாரி இங்கு தவம் செய்ய, ஓர் இடையனும், அவன் பசுக்களும் அவளுக்குத் துணையாக இருந்தார்கள். அதில் ஒரு கரும்பசு மட்டும் இரகசியமாக ஓரிடத்தில் பாலைச் சொரிந்தது. இடையனின் கனவில் வந்த சிவபெருமான் அங்கே கோயில் கட்டச் சொன்னார். அந்த ஆலயமே மல்லிகார்ஜுன க்ஷேத்திரம். இங்கு பிரமரம் (வண்டு) ஒன்று, அன்னையைப் பூஜித்ததால் அன்னை பிரமராம்பிகை என்று அழைக்கப்படுகிறாள்.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 47

ஸ்ரீசைலம் பிரமராம்பிகை

ஸ்ரீசைலத்தில் பிரமராம்பிகை சக்தி பீடாதிபதியாகி விளங்குகிறாள். அர்ஜுனனுடன் வேட வடிவம் கொண்டு சிவன் போரிட்டு அவனுக்கு அருள் செய்த தலம். சந்திராவதி என்ற அரசகுமாரி இங்கு தவம் செய்ய, ஓர் இடையனும், அவன் பசுக்களும் அவளுக்குத் துணையாக இருந்தார்கள். அதில் ஒரு கரும்பசு மட்டும் இரகசியமாக ஓரிடத்தில் பாலைச் சொரிந்தது. இடையனின் கனவில் வந்த சிவபெருமான் அங்கே கோயில் கட்டச் சொன்னார். அந்த ஆலயமே மல்லிகார்ஜுன க்ஷேத்திரம். இங்கு பிரமரம் (வண்டு) ஒன்று, அன்னையைப் பூஜித்ததால் அன்னை பிரமராம்பிகை என்று அழைக்கப்படுகிறாள்.



## வாராஹி பள்ளூர்



காஞ்சிபுரம் - அரக்கோணம் சாலையில் உள்ள பள்ளூரில் கோயில் கொண்டவள் இந்த வாராஹி. சப்தமாதர்களில் ஒருத்தி. இராஜராஜேஸ்வரியின் படைத்தலைவி. தஞ்சை பெரிய கோயிலிலும் வாராஹி கோயில் கொண்டுள்ளாள். பள்ளூரில் இவள் மஹிஷாசுர வடிவில் இருக்கிறாள். திருமணத்தடை நீங்க, செவ்வாய்க் கிழமைகளில் செம்மாதுள முத்துக்களால் அர்ச்சித்தல் வேண்டும். காரியத்தடை நீங்க, சர்க்கரைப் பொங்கல் நைவேத்யம் வைத்து சிவப்பு வஸ்திரம் சாத்தி, செவ்வரளியால் அர்ச்சிக்க வேண்டும். வேலைவாய்ப்பு பெற தேங்காயின் இரு மூடிகளிலும் நெய் விளக்கு ஏற்றி வழிபட வேண்டும். வாராஹி வரப்பிரசாதி.



48 Supplement to Mangayar Malar July 2008

வாராஹி பள்ளூர்



காஞ்சிபுரம் - அரக்கோணம் சாலையில் உள்ள பள்ளூரில் கோயில் கொண்டவள் இந்த வாராஹி. சப்தமாதர்களில் ஒருத்தி. இராஜராஜேஸ்வரியின் படைத்தலைவி. தஞ்சை பெரிய கோயிலிலும் வாராஹி கோயில் கொண்டுள்ளாள். பள்ளூரில் இவள் மஹிஷாசுர வடிவில் இருக்கிறாள். திருமணத்தடை நீங்க, செவ்வாய்க் கிழமைகளில் செம்மாதுள முத்துக்களால் அர்ச்சித்தல் வேண்டும். காரியத்தடை நீங்க, சர்க்கரைப் பொங்கல் நைவேத்யம் வைத்து சிவப்பு வஸ்திரம் சாத்தி, செவ்வரளியால் அர்ச்சிக்க வேண்டும். வேலைவாய்ப்பு பெற தேங்காயின் இரு மூடிகளிலும் நெய் விளக்கு ஏற்றி வழிபட வேண்டும். வாராஹி வரப்பிரசாதி.

என்றும் உங்களுடன்

### *திருவாரூர் ரௌத்ரி துர்க்கை*

திருவாரூர் தியாகராஜர் ஆலயத்தில் உள்ள ரௌத்ரி துர்க்கை மிகவும் வரப்பிரசாதி. எல்லா மதத்தினரும் இந்த துர்க்கையை வழிபடுகிறார்கள். இவள் தடைகளை நீக்குவதுடன் பில்லி, சூனியம் போன்ற கெட்ட சக்திகளையும் நீக்குகிறாள்.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 49

*திருவாரூர் ரௌத்ரி துர்க்கை*

திருவாரூர் தியாகராஜர் ஆலயத்தில் உள்ள ரௌத்ரி துர்க்கை மிகவும் வரப்பிரசாதி. எல்லா மதத்தினரும் இந்த துர்க்கையை வழிபடுகிறார்கள். இவள் தடைகளை நீக்குவதுடன் பில்லி, சூனியம் போன்ற கெட்ட சக்திகளையும் நீக்குகிறாள்.



அம்மன் 64!



### திருவொற்றியூர் வடிவுடையம்மன்

திருவொற்றியூர் கோயிலின் வடகிழக்கு மூலையில் ஆதிபுரீஸ்வரரின் அருமை நாயகியான வடிவுடையம்மன் திருக்கோயில் உள்ளது. பிரம்மாவும், விஷ்ணுவும் சிவனிடம் அடக்கம் என்று சிவபர தத்துவத்தை விளக்கும் திரிபாதமூர்த்தியாக ஆதிபுரீஸ்வரர் இருக்கிறார். உட்பிராகாரத்தில் அன்னை காளிதேவி கோயில் கொண்டுள்ளாள். இக் கோயில் குங்குமப் பிரசாதம் விசேஷமானது. அன்னை பெயருக்கேற்ற அழகானவள்.



50 Supplement to Mangayar Malar July 2008



திருவொற்றியூர் வடிவுடையம்மன்

திருவொற்றியூர் கோயிலின் வடகிழக்கு மூலையில் ஆதிபுரீஸ்வரரின் அருமை நாயகியான வடிவுடையம்மன் திருக்கோயில் உள்ளது. பிரம்மாவும், விஷ்ணுவும் சிவனிடம் அடக்கம் என்று சிவபர தத்துவத்தை விளக்கும் திரிபாதமூர்த்தியாக ஆதிபுரீஸ்வரர் இருக்கிறார். உட்பிராகாரத்தில் அன்னை காளிதேவி கோயில் கொண்டுள்ளாள். இக் கோயில் குங்குமப் பிரசாதம் விசேஷமானது. அன்னை பெயருக்கேற்ற அழகானவள்.

என்றும் உங்களுடன்

## படவெட்டம்மன் - போளூர்

திருவண்ணாமலை மாவட்டத்தில் அமைந்துள்ளது இத்தலம். இந்தப் படவெட்டம்மனையே ரேணுகாதேவி என்றும் சொல்கிறார்கள். இத் தலத்தின் அருகில் உள்ள கமண்டல நதியில் நீராடி, வேப்பிலைகளால் கட்டப்பட்ட கலசத்தில் மஞ்சள் நீரும், வாழை இலையில் பச்சரிசியும் பூஜைக்குரிய மலர், பழங்களும் வைத்து வழிபடுகிறார்கள். கண் உபாதைகள், தீராத நோய்கள் எல்லாம் இந்த வழிபாட்டில் தீருகின்றன.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 51

படவெட்டம்மன் - போளூர்

திருவண்ணாமலை மாவட்டத்தில் அமைந்துள்ளது இத்தலம். இந்தப் படவெட்டம்மனையே ரேணுகாதேவி என்றும் சொல்கிறார்கள். இத் தலத்தின் அருகில் உள்ள கமண்டல நதியில் நீராடி, வேப்பிலைகளால் கட்டப்பட்ட கலசத்தில் மஞ்சள் நீரும், வாழை இலையில் பச்சரிசியும் பூஜைக்குரிய மலர், பழங்களும் வைத்து வழிபடுகிறார்கள். கண் உபாதைகள், தீராத நோய்கள் எல்லாம் இந்த வழிபாட்டில் தீருகின்றன.



அம்மன் 64!



### பண்ணாரி மாரியம்மன்

ஈரோடு மாவட்டம் சத்தியமங்கலம் காட்டுக்கே இவள் காவல் தெய்வம். இக் கோயிலின் சிறப்பான அம்சம் தீ மிதித்தல். வெகு காலத்திற்கு முன்பு கறவைப் பசு ஒன்று வேங்கை மரத்தின் அடியில் நின்று பாலைச் சொரிய - என்னவென்று பார்த்தால் சுயம்புவாக அம்மன் சிலை இருந்ததாம். தினமும் காலை ஒரு பசுவை அம்மன் சன்னதி முன்பு நிறுத்தி 'கோபூஜை' செய்த பின்னரே அம்மனுக்குப் பூஜை செய்வது இங்கு வழக்கம்.



52 Supplement to Mangayar Malar July 2008



பண்ணாரி மாரியம்மன்

ஈரோடு மாவட்டம் சத்தியமங்கலம் காட்டுக்கே இவள் காவல் தெய்வம். இக் கோயிலின் சிறப்பான அம்சம் தீ மிதித்தல். வெகு காலத்திற்கு முன்பு கறவைப் பசு ஒன்று வேங்கை மரத்தின் அடியில் நின்று பாலைச் சொரிய - என்னவென்று பார்த்தால் சுயம்புவாக அம்மன் சிலை இருந்ததாம். தினமும் காலை ஒரு பசுவை அம்மன் சன்னதி முன்பு நிறுத்தி 'கோபூஜை' செய்த பின்னரே அம்மனுக்குப் பூஜை செய்வது இங்கு வழக்கம்.

என்றும் உங்களுடன்

## திருமணஞ்சேரி - கோகிலாம்பாள்

மயிலாடுதுறைக்கு அருகில் உள்ளது திருமணஞ்சேரி. கயிலைமலையில் உமையம்மை இறைவனிடம் மீண்டும் ஒருமுறை தங்களை மணம்புரிந்து இன்புற வேண்டும் என்று கேட்டாள். வரும் பிரம்மகல்பத்தில் மணந்து கொள்வேன் என்றார். அம்பாள் நீண்ட காலம் காத்திருக்க வேண்டும் என்று வருந்தி, இறைவனை அலட்சியப்படுத்த, இறைவன் அவளை பசுவாகும்படி சாபம் கொடுத்தார். பசுவாக மாறிய அம்பிகை, பொழிந்த பாலால் தன் மேனி குளிரப் பெற்றதும், உமையை மணந்து கொண்டார். புகழ்பெற்ற திருமணப் பரிகார ஸ்தலம்!



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 53

## திருமணஞ்சேரி - கோகிலாம்பாள்

மயிலாடுதுறைக்கு அருகில் உள்ளது திருமணஞ்சேரி. கயிலைமலையில் உமையம்மை இறைவனிடம் மீண்டும் ஒருமுறை தங்களை மணம்புரிந்து இன்புற வேண்டும் என்று கேட்டாள். வரும் பிரம்மகல்பத்தில் மணந்து கொள்வேன் என்றார். அம்பாள் நீண்ட காலம் காத்திருக்க வேண்டும் என்று வருந்தி, இறைவனை அலட்சியப்படுத்த, இறைவன் அவளை பசுவாகும்படி சாபம் கொடுத்தார். பசுவாக மாறிய அம்பிகை, பொழிந்த பாலால் தன் மேனி குளிரப் பெற்றதும், உமையை மணந்து கொண்டார். புகழ்பெற்ற திருமணப் பரிகார ஸ்தலம்!





## பாரியூர் குண்டத்துக்காளி

ஈரோடு மாவட்டம் பாரியூர் காளிக்கோயில் ஆயிரம் ஆண்டுகள் பழமையானது. 'தீமிதி' இங்கு பிரசித்தம். அதனால்தான் இவளை 'குண்டத்துக்காளி' என்று அழைக்கிறார்கள். இந்த குண்டம் 50 அடி நீளம், 5 அடி அகலம். தீமிதிப்பதை பூ மிதித்தல் என்பார்கள். அடுத்த தினம் தேர்த் திருவிழா, புஷ்பப் பல்லக்கு என்று அமர்க்களமாக இருக்கும்.



54 Supplement to Mangayar Malar July 2008



பாரியூர் குண்டத்துக்காளி

ஈரோடு மாவட்டம் பாரியூர் காளிக்கோயில் ஆயிரம் ஆண்டுகள் பழமையானது. 'தீமிதி' இங்கு பிரசித்தம். அதனால்தான் இவளை 'குண்டத்துக்காளி' என்று அழைக்கிறார்கள். இந்த குண்டம் 50 அடி நீளம், 5 அடி அகலம். தீமிதிப்பதை பூ மிதித்தல் என்பார்கள். அடுத்த தினம் தேர்த் திருவிழா, புஷ்பப் பல்லக்கு என்று அமர்க்களமாக இருக்கும்.

என்றும் உங்களுடன்

## அஞ்சுவட்டத்தம்மன்

சூரனை சம்ஹாரம் செய்ததினால் முருகப்பெருமானுக்கு வீரஹத்தி தோஷம் ஏற்பட்டது. அதைப் போக்க, முருகன் கீழவேளூர் வந்து இறைவனைக் குறித்து தவம் செய்தார். தவத்தைக் கெடுக்க சில அசுர சக்திகள் போரிட்டன. முருகனைக் காப்பாற்றி அவரது தவம் நிலைக்க, நான்கு திசைகளிலும், ஆகாயத்திலும் விரவி நின்றாள். அவளே இந்தப் பேரழகியான அஞ்சுவட்டத்தம்மன்.



# அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 55

அஞ்சுவட்டத்தம்மன்

சூரனை சம்ஹாரம் செய்ததினால் முருகப்பெருமானுக்கு வீரஹத்தி தோஷம் ஏற்பட்டது. அதைப் போக்க, முருகன் கீழவேளூர் வந்து இறைவனைக் குறித்து தவம் செய்தார். தவத்தைக் கெடுக்க சில அசுர சக்திகள் போரிட்டன. முருகனைக் காப்பாற்றி அவரது தவம் நிலைக்க, நான்கு திசைகளிலும், ஆகாயத்திலும் விரவி நின்றாள். அவளே இந்தப் பேரழகியான அஞ்சுவட்டத்தம்மன்.



அம்மன் 64!



## ஈரோடு - பெரிய மாரியம்மன்

ஈரோடு நகராட்சிக்கு எதிரே வடக்கு நோக்கி இத்திருக்கோயில் அமைந்துள்ளது. 1200 ஆண்டுகளுக்கு முன்பு இங்கு ஆட்சி செய்த கொங்கு சோழர்களால் கட்டப்பட்டது. தேவிக்கு சக்தி அதிகம். தலமரம் வேப்பமரம். ஒவ்வொரு ஆண்டும் பங்குனி மாதம் முதல் செவ்வாய்க் கிழமையன்று விழா தொடங்கும். அன்றிரவு பூச்சாட்டல் நடைபெறும். கம்பம் நடுவார்கள். மாவிளக்கு போட்டு, கரகம் எடுத்தாடி, பொங்கல் இட்டு, தேரோட்டம் நடத்தி, இறுதியாக கம்பத்தை காரை வாய்க்காலில் விட்டு விடுவார்கள்.



56 Supplement to Mangayar Malar July 2008



ஈரோடு - பெரிய மாரியம்மன்

ஈரோடு நகராட்சிக்கு எதிரே வடக்கு நோக்கி இத்திருக்கோயில் அமைந்துள்ளது. 1200 ஆண்டுகளுக்கு முன்பு இங்கு ஆட்சி செய்த கொங்கு சோழர்களால் கட்டப்பட்டது. தேவிக்கு சக்தி அதிகம். தலமரம் வேப்பமரம். ஒவ்வொரு ஆண்டும் பங்குனி மாதம் முதல் செவ்வாய்க் கிழமையன்று விழா தொடங்கும். அன்றிரவு பூச்சாட்டல் நடைபெறும். கம்பம் நடுவார்கள். மாவிளக்கு போட்டு, கரகம் எடுத்தாடி, பொங்கல் இட்டு, தேரோட்டம் நடத்தி, இறுதியாக கம்பத்தை காரை வாய்க்காலில் விட்டு விடுவார்கள்.

என்றும் உங்களுடன்

### சேலம் சுவர்ணாம்பிகை

திருமணிமுத்தாற்றின் மேற்குக் கரையில் உள்ளது பழைமையான சுகவனேஸ்வரர் கோயில். தெற்கு நோக்கி உள்ளது சுவர்ணாம்பிகை சன்னதி. கிணற்றுக்கு 'அமண்டுக தீர்த்தம்' என்று பெயர். அதாவது தவளைகளே இல்லாத தீர்த்தம் என்று பொருள். ஆதிசேஷன் என்ற பாம்பு இதிலிருந்த தவளைகளை எல்லாம் விரட்டி விட்டான் என்பார்கள். இப்பொழுது கூட இதில் தவளையைப் பிடித்துப் போட்டால், அது இறந்து விடுகிறது!



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 57

சேலம் சுவர்ணாம்பிகை

திருமணிமுத்தாற்றின் மேற்குக் கரையில் உள்ளது பழைமையான சுகவனேஸ்வரர் கோயில். தெற்கு நோக்கி உள்ளது சுவர்ணாம்பிகை சன்னதி. கிணற்றுக்கு 'அமண்டுக தீர்த்தம்' என்று பெயர். அதாவது தவளைகளே இல்லாத தீர்த்தம் என்று பொருள். ஆதிசேஷன் என்ற பாம்பு இதிலிருந்த தவளைகளை எல்லாம் விரட்டி விட்டான் என்பார்கள். இப்பொழுது கூட இதில் தவளையைப் பிடித்துப் போட்டால், அது இறந்து விடுகிறது!



அம்மன் 64!



## தெற்கு நோக்கிய துர்க்கைகள்

கும்பகோணம் அருகில் உள்ள அம்மன்குடி, வேதாரண்ய வேதபுரீஸ்வரர் ஆலயத்தில் உள்ள துர்க்கை, திருவாரூர் ஆந்தக்குடியில் அமைந்துள்ள சோமேஸ்வர ஆலயத்து துர்க்கை போன்றோர் தெற்கு நோக்கி அருள்புரிகின்றனர்.



58 Supplement to Mangayar Malar July 2008



தெற்கு நோக்கிய துர்க்கைகள்

கும்பகோணம் அருகில் உள்ள அம்மன்குடி, வேதாரண்ய வேதபுரீஸ்வரர் ஆலயத்தில் உள்ள துர்க்கை, திருவாரூர் ஆந்தக்குடியில் அமைந்துள்ள சோமேஸ்வர ஆலயத்து துர்க்கை போன்றோர் தெற்கு நோக்கி அருள்புரிகின்றனர்.

என்றும் உங்களுடன்

## மத்தூர் மகிஷாசுரமர்த்தினி

திருத்தணியிலிருந்து ஏழு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்தள்ளது இத்தலம். அம்மன் எட்டு அடி உயரத்தில் கருங்கல் மூர்த்தமாக சங்கு, சக்கரம், வில், அம்பு, சக்தி (வேல்), கேடயம், திரிசூலம் ஏந்தி ஒரு கை அபய முத்திரை காட்ட, ஏழு கபாலங்கள் கூடிய மாலை அணிந்து கம்பீரமாக நின்று அருள்பாலிக்கிறாள். மிக சக்திவாய்ந்தவள்.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 59

மத்தூர் மகிஷாசுரமர்த்தினி

திருத்தணியிலிருந்து ஏழு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்தள்ளது இத்தலம். அம்மன் எட்டு அடி உயரத்தில் கருங்கல் மூர்த்தமாக சங்கு, சக்கரம், வில், அம்பு, சக்தி (வேல்), கேடயம், திரிசூலம் ஏந்தி ஒரு கை அபய முத்திரை காட்ட, ஏழு கபாலங்கள் கூடிய மாலை அணிந்து கம்பீரமாக நின்று அருள்பாலிக்கிறாள். மிக சக்திவாய்ந்தவள்.



அம்மன் 64!



## தேவிகாபுரம் பெரியநாயகி

திருவண்ணாமலை மாவட்டத்தில் போளூருக்கு அருகில் உள்ள தலம். மலை மீதுள்ள இறைவன் பெயர் பொன்மலை நாதர். அடிவாரத்தில் கோயில் கொண்டுள்ள அம்மன் பெரியநாயகி. மலையடிவாரத்தில் 9 கல்லில் மட்டுமேயான கோகிலாம்பாள காமேஸ்வரர் ஆலயம் உள்ளது. 475 அடி நீளம், 250 அடி உயரம் கொண்ட பிரம்மாண்ட மதிற்சுவரால் ஆன இந்த ஆலயம், சாளுக்கியர்களால் கட்டப்பட்டது. சிற்ப அழகு கொண்டது.



60 Supplement to Mangayar Malar July 2008



தேவிகாபுரம் பெரியநாயகி

திருவண்ணாமலை மாவட்டத்தில் போளூருக்கு அருகில் உள்ள தலம். மலை மீதுள்ள இறைவன் பெயர் பொன்மலை நாதர். அடிவாரத்தில் கோயில் கொண்டுள்ள அம்மன் பெரியநாயகி. மலையடிவாரத்தில் 9 கல்லில் மட்டுமேயான கோகிலாம்பாள காமேஸ்வரர் ஆலயம் உள்ளது. 475 அடி நீளம், 250 அடி உயரம் கொண்ட பிரம்மாண்ட மதிற்சுவரால் ஆன இந்த ஆலயம், சாளுக்கியர்களால் கட்டப்பட்டது. சிற்ப அழகு கொண்டது.

என்றும் உங்களுடன்

### ராஜதுர்க்கை

தர்மபுரிக்கோட்டை எனப்படும் காமாட்சி மல்லிகார்ஜுனேஸ்வரர் ஆலயத்தில் உள்ள துர்க்கை ராஜதுர்க்கை என்று அழைக்கப்படுகிறாள். இங்குள்ள துர்க்கைக்கு சாற்றிய மலர் மாலையை திருமணத்தடை உள்ளவர்களுக்கு அணிவிப்பார்கள். மாலையை அணிந்தவர்கள் மூன்று முறை ஆலயத்தை வலம் வரவேண்டும். பிறகு வடகிழக்கு (ஈசான்ய) மூலையில் உள்ள அம்மன், நாககன்னியர்கள் உள்ள இடத்தில் அம்மாலையை ஒன்பது துண்டுகளாக்கி போட்டு விடுவார்கள். பிறகு ராஜதுர்க்கையை வந்து மீண்டும் பிரார்த்தனை செய்து கொள்வார்கள். இதனால் திருமணத்தடை உடனே நீங்கும்.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 61

### ராஜதுர்க்கை

தர்மபுரிக்கோட்டை எனப்படும் காமாட்சி மல்லிகார்ஜுனேஸ்வரர் ஆலயத்தில் உள்ள துர்க்கை ராஜதுர்க்கை என்று அழைக்கப்படுகிறாள். இங்குள்ள துர்க்கைக்கு சாற்றிய மலர் மாலையை திருமணத்தடை உள்ளவர்களுக்கு அணிவிப்பார்கள். மாலையை அணிந்தவர்கள் மூன்று முறை ஆலயத்தை வலம் வரவேண்டும். பிறகு வடகிழக்கு (ஈசான்ய) மூலையில் உள்ள அம்மன், நாககன்னியர்கள் உள்ள இடத்தில் அம்மாலையை ஒன்பது துண்டுகளாக்கி போட்டு விடுவார்கள். பிறகு ராஜதுர்க்கையை வந்து மீண்டும் பிரார்த்தனை செய்து கொள்வார்கள். இதனால் திருமணத்தடை உடனே நீங்கும்.



அம்மன் 64!



## கோலவிழியம்மன் - முண்டகக்கண்ணியம்மன்

மயிலையில் கற்பகாம்பாள் கோயிலைத் தவிர வாலீசர் கோயிலுக்குத் தென்மேற்கில் பிடாரி அம்மன் கோயில் இருக்கிறது. ஊர்க்காளியான இவளுக்குப் பூஜை நடந்த பின்புதான் கபாலீஸ்வரர் கோயிலில் விழா தொடங்கப்படும். இவளே கோல விழியம்மன் என்று அழைக்கப்படு கிறாள். முண்டகக் கண்ணியம்மன் கோயில் மாதவப்பெருமாள் கோயிலுக்குப் பின்னால் இருக்கிறது. இவள் தாமரை மலர் போன்ற கண்களை உடையவள்.



62 Supplement to Mangayar Malar July 2008



கோலவிழியம்மன் - முண்டகக்கண்ணியம்மன்

மயிலையில் கற்பகாம்பாள் கோயிலைத் தவிர வாலீசர் கோயிலுக்குத் தென்மேற்கில் பிடாரி அம்மன் கோயில் இருக்கிறது. ஊர்க்காளியான இவளுக்குப் பூஜை நடந்த பின்புதான் கபாலீஸ்வரர் கோயிலில் விழா தொடங்கப்படும். இவளே கோல விழியம்மன் என்று அழைக்கப்படு கிறாள். முண்டகக் கண்ணியம்மன் கோயில் மாதவப்பெருமாள் கோயிலுக்குப் பின்னால் இருக்கிறது. இவள் தாமரை மலர் போன்ற கண்களை உடையவள்.

என்றும் உங்களுடன்

## கன்யாகுமரி

கன்னியாகுமரியின் பேரழகைக் கண்டு ஐந்து மைல் தொலைவில் உள்ள தாணுமால்யர் அவளை மணக்க முன் வருகிறார். அன்னை திருமணம் செய்து கொண்டால் அவளது தவம் தடைபடும் என்று தேவர்கள் கவலைப்பட்டனர். நாரதர் சில நிபந்தனைகளை இறைவனுக்கு வைக்கிறார். அந்த நிபந்தனைப்படி கண்ணில்லாத தேங்காய், காம்பில்லாத மாங்காய், நரம்பில்லாத வெற்றிலை, கணு இல்லாத கரும்பு, இதழ் இல்லாத மலர் என்று தயார் செய்து விடுகிறார். சூரிய உதயத்துக்கு ஒருநாழிகை முன்பு மணவறைக்கு வந்து விட வேண்டும் என்ற நிபந்தனையை ஏற்று புறப்பட்டார் இறைவன். நாரதர் பாதி வழி போகும் பொழுதே கோழியாக கூவ, இறைவன் முகூர்த்தவேளை தவறி விட்டது என்று திரும்பிவிட திருமணம் நின்று விட்டது. அன்னை என்றும் கன்னியாகுமரியாக அருள்பாலிக்கிறாள்.



அம்மன் 64!

Supplement to Mangayar Malar July 2008 63

## கன்யாகுமரி

கன்னியாகுமரியின் பேரழகைக் கண்டு ஐந்து மைல் தொலைவில் உள்ள தாணுமால்யர் அவளை மணக்க முன் வருகிறார். அன்னை திருமணம் செய்து கொண்டால் அவளது தவம் தடைபடும் என்று தேவர்கள் கவலைப்பட்டனர். நாரதர் சில நிபந்தனைகளை இறைவனுக்கு வைக்கிறார். அந்த நிபந்தனைப்படி கண்ணில்லாத தேங்காய், காம்பில்லாத மாங்காய், நரம்பில்லாத வெற்றிலை, கணு இல்லாத கரும்பு, இதழ் இல்லாத மலர் என்று தயார் செய்து விடுகிறார். சூரிய உதயத்துக்கு ஒருநாழிகை முன்பு மணவறைக்கு வந்து விட வேண்டும் என்ற நிபந்தனையை ஏற்று புறப்பட்டார் இறைவன். நாரதர் பாதி வழி போகும் பொழுதே கோழியாக கூவ, இறைவன் முகூர்த்தவேளை தவறி விட்டது என்று திரும்பிவிட திருமணம் நின்று விட்டது. அன்னை என்றும் கன்னியாகுமரியாக அருள்பாலிக்கிறாள்.



Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN / CC (S) DN / 170 / 06 - 08 * Licensed to post without prepayment
PMG's Licence No. WPP TN / CC (S) DN / 103 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka. Supplement to the Mangayar Malar July 2008 Issue



## கதிராமங்கல வனதுர்க்கை

கும்பகோணம் மயிலாடுதுறை சாலையில் உள்ள தலம் கதிராமங்கலம். இங்கு காவிரி வடக்கு நோக்கி ஓடுகிறது. நவதுர்க்கையின் அம்சமான வனதுர்க்கை அருளாட்சி புரிகிறாள். இவள் தலைமேல் கூரை திறந்த நிலையில் இருக்கிறது. இவள் ஆகாச துர்க்கை என்று அழைக்கப்படுகிறாள். இவள் தினமும் காசிக்குப் போய்விட்டு வருவதாக ஐதிகம். மிருகண்டு முனிவரால் வழிபடப்பட்டவள். கவியரசர் கம்பரும் இந்த அன்னையின் அருள்பெற்றவர். அர்ச்சனை செய்யும்பொழுது அம்மன் கையில் வியர்வை முத்துக்கள் தெரியும். முன்பக்கம் அம்பாள் ரூபம். பின்பக்கம் சர்ப்ப ரூபம்.



Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN / CC (S) DN / 170 / 06 - 08 * Licensed to post without prepayment
PMG's Licence No. WPP TN / CC (S) DN / 103 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka. Supplement to the Mangayar Malar July 2008 Issue



கதிராமங்கல வனதுர்க்கை

கும்பகோணம் மயிலாடுதுறை சாலையில் உள்ள தலம் கதிராமங்கலம். இங்கு காவிரி வடக்கு நோக்கி ஓடுகிறது. நவதுர்க்கையின் அம்சமான வனதுர்க்கை அருளாட்சி புரிகிறாள். இவள் தலைமேல் கூரை திறந்த நிலையில் இருக்கிறது. இவள் ஆகாச துர்க்கை என்று அழைக்கப்படுகிறாள். இவள் தினமும் காசிக்குப் போய்விட்டு வருவதாக ஐதிகம். மிருகண்டு முனிவரால் வழிபடப்பட்டவள். கவியரசர் கம்பரும் இந்த அன்னையின் அருள்பெற்றவர். அர்ச்சனை செய்யும்பொழுது அம்மன் கையில் வியர்வை முத்துக்கள் தெரியும். முன்பக்கம் அம்பாள் ரூபம். பின்பக்கம் சர்ப்ப ரூபம்.

என்றும் உங்களுடன்